# தமிழ் இலக்கியங்களில் மனித உறவுகள்

முனைவர் மு. சற்குணவதி



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# தமிழ் இலக்கியங்களில் மனித உறவுகள்

முனைவர் மு. சற்குணவதி




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை
மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை - 600 113

டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார் அறக்கட்டளைச் சொற்பொழிவு
(அறக்கட்டளை நிறுவியவர் : டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார், அதிபர், தினத்தந்தி)
வரிசை எண் : 17

---

## BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the Book | : | Tamiḻ ilakkiyaṅkaḷil maṉita uṟavukaḷ |
| Author | : | Dr. M. Sargunavathi<br>Senior Research Scholar<br>Institute of Distance Education, Chennai -600 005 |
| General Editor | : | Prof. Dr. K.A. Gunasekaran<br>Director<br>International Institute of Tamil Studies<br>Tharamani, Chennai-600 113 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus,<br>Chennai-600 113<br>Ph: 22542992 |
| Publication No. | : | 661 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2010 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Point |
| No. of Pages | : | xii + 196 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 90/- (Rupees Ninety Only) |
| Printed by | : | United Bind Graphics<br>95 (43), Millers Road, Kipauk<br>Chennai - 600 010 |
| Subject | : | Human Relationship in Tamil Literature |

---

பேரா. முனைவர் கரு. அழ. குணசேகரன்
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113

# அணிந்துரை

தனிமரம் தோப்பாக முடியாது. மனிதனும் அவனைச் சார்ந்தோருமே ஒரு சமூகத்தை உருவாக்க முடியும். இதற்கு அடிப்படையாக அமைவது மனித உறவு. மனித உறவு என்பது உறவுப் பெயர் நிலையில் மட்டும் அமையாமல் ஒருவர் இன்னொருவர்க்குச் செய்யும் உதவி, காட்டும் அன்பு, பரிவு போன்றவற்றால் அமையும்.

தமிழ் இலக்கிய வரலாற்றில், பண்டுதொட்டு இன்று வரை தொல்காப்பிய இலக்கண நூலிலும், சங்க இலக்கியங்களிலும், பக்திப் பனுவல்களிலும், காப்பியங்களிலும், சிற்றிலக்கியங்களிலும், பிற்கால நீதி நூல்களிலும், தற்காலப் படைப்பிலக்கியங்களிலும், நாட்டுப்புற இலக்கியங்களிலும், திரைஇசைப்பாடல்களிலும் மற்றும் ஊடகங் களிலும் அமைந்துள்ள சில மனித உறவுகளைச் சான்றுடன் பரக்க இந்நூல் எடுத்தியம்புகிறது.

*மனித நேயம் வேறு*
*மனித உறவு வேறு*

எனவும் இந்நூல் பிரித்து ஆய்கின்றது.

> *"உறவு" என்பது அன்பின் வெளிப்பாடு. பண்பின் செயல்பாடு. நல்ல உறவு முறைகளும் நல்ல உணர்வு முறைகளுமே ஆறறிவு உருவத்தை மனிதனாக்கும். மனித வாழ்க்கையில் உறவுகள் காலங்களையெல்லாம் கடந்து நிற்கின்றன. தொடர்புகள் நிலைக்க ஒன்று பிறிதொன்றுடன் தொடர்பில்லாமல் வாழ்தல் என்பது இயலாது. ஒன்று பிரிதொன்றைச் சார்ந்துதான் வாழ வேண்டும். அந்தச் சார்பு நிலையில் ஒழுங்கு அமைய வேண்டும் அதுதான் மனித உறவு.*

> *உறவு நிலையில் உண்மை கட்டாயம் இடம்பெற வேண்டும். கணவன், மனைவி, தந்தை, தாய், ஆசிரியர், மாணவர், அண்ணன், தங்கை, அக்காள், தம்பி, பெரியோர், சிறியோர், தெரிந்தவர், தெரியாதவர், தற்செயலாகச் சந்தித்துக் கொள்வோர், ஒன்றாகப் பயணம் செய்வோர், ஓரிடத்தில் பணிபுரிவோர் இப்படி பல்வேறு நிலைகளில் மனித உறவுகள் மலர்கின்றன. அவை அனைத்திலும் உண்மை நிலவ வேண்டும். உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று சொல்வார் உறவுகலவாமை வேண்டும் என்பதன் பொருள் அதுதான். உண்மை இல்லாமல் போகிறபோது உறவுகள் கொச்சைப்படுத்தப் பட்டு மனிதன் மிருகமாகும் நிலை ஏற்பட்டுவிடுகிறது.* (ப.2)

ஈராயிரம் ஆண்டுகள் வரலாறு கொண்ட தமிழ் இலக்கியங்களில் உள்ள மனித உறவுகளை வரையறுத்துவிட இயலாது எனினும், அறிமுக நிலையில் இந்த ஆய்வு மேற்கொள்ளப்பட்டிருப்பது பாராட்டுக்குரியது.

> *அதாவது தாம் பரிசாகப் பெற்று வந்த பொருள்களை மனைவியிடம் கொடுத்து, என் மனைக்கு உரியவளே! பலாப்பழம் மிகுந்த முதிரமென்னும் மலைக்குத் தலைவனாகிய, திருந்திய வேலுடைய குமணன் எமக்கு அளித்த செல்வத்தை நின்னை அன்பு செய்து வாழும் மகளிர்க்கும், நீ அன்பு செய்து ஒழுகும் மகளிர்க்கும், பல குணங்களும் மாட்சிமைக்கப்பட்ட கற்பினையுடைய நின் சுற்றத்து மூத்த மகளிர்க்கும் அளிப்பாயாக; நம் சுற்றத்தின் பசி நீங்க நினக்கு நெடுநாள் கடன் தந்து உதவியோர்க்கும், மற்றும் இன்ன தன்மையார் என்று கருதாமல் என்னோடு கேளாதும், வளமுடன் வாழலாம் என்று பாதுகாத்து வைத்துக்கொள்ள நினையாதும் நீயும் எல்லோர்க்கும் வழங்கி மகிழ்வாயாக என்று பெருஞ்சித்திரனார் கூறுகின்றார். பரிசில் பெற்று வந்த புலவர்களும் இரவலர்களும் தாம் மட்டும் அனுபவித்து இன்புற்று வாழ நினைக்காமல் தம்முடைய சுற்றத்தாரும் மற்றவர்களும் இன்புற்று வாழ நினைக்கும் மனநிலையைப் பெற்றிருந்தனர். இது உறவுகளை மதித்து வாழும் பண்பைச் சுட்டுகிறது.* (ப.13)

டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார் அவர்களால் தம் பெயரில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் நிறுவப் பெற்றுள்ள அறக்கட்டளையின் 17ஆம் சொற்பொழிவு நிகழும் இத்தருணத்திலேயே அச்சொற்பொழிவின் எழுத்துரு நூலாக வெளியிடப் பெற்றுள்ளது தனிச் சிறப்பு. இந்த அறக்கட்டளையை இந்நிறுவனத்தில் நிறுவிய ஐயா டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார் அவர்களையும், அதனைப் பெற்றுத் தந்த தொல்லியல் அறிஞர் நெல்லை நெடுமாறன் அவர்களையும் பாராட்டுகிறேன்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையைக் காட்டிவரும் நிறுவனத் தலைவரும் தமிழக அரசின் முதல்வருமான மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்களுக்குத் தமிழுலகம் என்றும் நன்றிக் கடன்பட்டுள்ளது.

தமிழ்ப்பணிகளுக்கு ஆற்றுப்படுத்தி வரும் மாண்புமிகு தமிழக நிதியமைச்சர் பேராசிரியர் க. அன்பழகன் அவர்களுக்கு எம் நன்றி என்றும் உரியது.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும் செய்தித் துறை அரசுச் செயலாளர் திரு க. முத்துசாமி இ.ஆ.ப. அவர்களுக்கும் நன்றி.

இச்சொற்பொழிவின் எழுத்துருவைத் திருத்தம் செய்து செம்மையாகப் பதிப்பித்த முனைவர் ஆ. தசரதன் அவர்களுக்கும், இச்சொற்பொழிவு மற்றும் நூல் வெளியீடு தொடர்பான அனைத்து ஏற்பாடுகளையும் செய்த நிறுவனப் பணியாளர்கள் மற்றும் கணிப்பொறியாளர் திருமதி எ.ம. லட்சுமி ஆகியோருக்கும் எம் நன்றிகள் என்றுமுண்டு. இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தாருக்கு எம் பாராட்டுகள்.

இயக்குநர்

# ஆசிரியர் குறிப்பு

இணைப் பேராசிரியர் திருமதி மு. சற்குணவதி அவர்கள் தமிழ் நாட்டுப்புறவியலில் முனைவர் பட்டம் பெற்றவர். சென்னைப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியர் வீ. அரசு, பேராசிரியர் பொற்கோ ஆகியோரின் மாணவியாக இருந்து ஆராய்ச்சி செய்ததுடன், தற்போது அதே பல்கலைக் கழகத்தில் பணிசெய்கிறார். இதுவரை பன்னிரண்டு நூல்களை எழுதியுள்ளார். நாட்டுப்புறவியல் தொடர்பாக 5 நூல்களைப் படைத்துள்ளார். அவற்றுள் **தமிழக நாட்டுப்புறவியல், மண்ணில் வாழும் மலைமக்கள்–லம்பாடிகள்,** மலையில் **வாழும் மண்மக்கள்–பளியர்,** ஆகிய நூல்கள் பலரின் பாராட்டைப் பெற்றவை. **'யாரொடும் பகை கொள்ளற்க'** என்னும் இலக்கியக் கட்டுரைகள் அடங்கிய நூல் மக்களின் மனித நேயத்தை எடுத்துரைப்பது. 80க்கும் மேற்பட்ட ஆய்வுக்கட்டுரைகள் எழுதியுள்ளார். பயன்தரும் சமுதாய மேம்பாட்டுச் சிந்தனையில் **தினகரன், தமிழ் ஓசை, கண்ணியம், கல்வி, வாசுகி, தங்கமங்கை, சிந்தனையாளன்** முதலான பல இதழ்களில் கட்டுரைகள் எழுதியுள்ளார்.

# என்னுரை

"தமிழ் இலக்கியங்களில் மனித உறவுகள்" என்னும் இந்த நூல் என் மனமார்ந்த படைப்பு. இந்த உலக வாழ்க்கை மனித உறவுகளில் மலர்கிறது. உறவு என்றால் தொடர்பு எனப் பொருள்படும். ஒரு மனிதரோடு மற்றொரு மனிதருக்குத் தொடர்பு இல்லை என்றால் வாழ்க்கை இல்லை. கணவன் மனைவி குழந்தைகள் சேர்ந்த குடும்பம் உறவின் ஆரம்பம். உற்றார் உறவினர் அடுத்த நிலை. அக்கம் பக்கத்தார் அடுத்தவர்கள் என்பது உறவின் தொடர்ச்சி. தெரிந்தவர் தெரிந்தவரோடும் தெரிந்தவர் தெரியாதவரோடும் கொள்கின்ற தொடர்பு உறவின் விரிந்த நிலை. இனம் கடந்து மொழி கடந்து நாடு கடந்து கொள்கின்ற தொடர்பு உறவின் உச்ச நிலை. இப்படி மனிதத் தொடர்புகள் என்னும் உறவுகள் இல்லை என்றால் மனித இயக்கம் இல்லை. மனித வாழ்க்கை இல்லை. இன்னும் ஒருபடி மேலே சொல்லப்போனால் மனித வாழ்க்கையே உறவுகள் இல்லையெனில் பொருளற்றுப் போகும். இது சிந்திக்கத் தெரிந்த அனைவருக்கும் புரியும். இந்த உறவு நிலை பற்றி ஆழமாகச் சிந்தித்ததின் விளைவே என்னை இந்த நூல் எழுதும்படி செய்தது.

எனது குருநாதர் பேராசிரியர் பொற்கோ அவர்கள் அடிக்கடி இந்த மனித உறவுகள் பற்றிப் பேசுவார்கள். எந்தக் கூட்டத்தில் பேசினாலும் எந்த மேடையில் உரையாற்றினாலும் மனித உறவுகள் என்ற சொல்லைக் கையாள்வார்கள். இல்லையென்றால் அந்த மனித உறவுகள் என்னும் பொருள் படவாவது பேசுவார்கள். அவற்றைப் பல ஆண்டுகள் கேட்டுக் கேட்டு என் மனத்துள் மனித உறவுகள் பற்றிய ஒரு பதிவு ஆழமாக இருந்தது. அத்துடன் பேராசிரியர் பொற்கோ அவர்கள் மிகவும் தெளிவாக ஒரு கருத்தை எடுத்துரைப்பார்கள். அதாவது கணவன் மனைவி, பெற்றோர் பிள்ளைகள், ஆசிரியர் மாணவர்கள், உற்றார் உறவினர்கள் இப்படி எந்த உறவாக இருந்தாலும் அதில் ஒரு ஒழுங்கும் வரையறையும் தெளிவும் இருந்தால் மனிதர்களுக்குள் என்றும் சிக்கல் ஏற்படாது; வாழ்க்கை அமைதியாகச் செல்லும் என்பார்கள். எல்லா உறவுகளிலும் போற்றத்தக்க நாகரிகம் பேணப்பட வேண்டும் என்பதைச் சுட்டிக் காட்டுவார்கள். எங்கள் ஐயா அவர்கள் சொன்னதைச் செய்து காட்டுபவர். அதனால்தான் மனித உறவுகள் பற்றிப் பேசியதை அப்படியே நடைமுறையில் பின்பற்றினார். அவற்றையெல்லாம் உற்றுநோக்கியும், அவரோடு பழகியும் அவரின் ஆலோசனைப்படி நடந்தும் இருந்ததால் என் மனதுள் மனித உறவுகள் பற்றிய தெளிவான சிந்தனை

பசுமரத்தாணிபோல் பதிந்து விட்டது. இவை இந்த நூல் எழுத முதல் காரணமாகும்.

இரண்டாவது நிலையில் என் வாழ்க்கை அனுபவம் இந்த நூல் எழுதக் காரணமாயிற்று. மனிதர்கள் மெத்தப் படித்திருந்தும் ஒருவரை ஒருவர் விழுங்கி விடலாமா என்று எண்ணுவது போன்று பகைமை கொண்டு பாராமுகத்துடன் வாழ்பவர்களைக் கண்டு அதிர்ச்சி அடைந்த காலங்கள் நிறைய உண்டு. ஆசிரியர் மாணவர் உறவில் அசிங்கங்கள் நடப்பதைக் கண்டிருக்கிறேன். பெரியோர்களைச் சிறியவர்கள் மதிக்காமல் இருப்பதும் சிறியவர்களைப் பெரியவர்கள் அரவணைத்துச் செல்லாமல் இருப்பதையும் பார்த்திருக்கிறேன். பணத்திற்காகவும் பதவிக்காகவும் உறவுகள் சிதைக்கப்படுவதைக் கண்டிருக்கிறேன். உள் ஒன்று வைத்துப் புறம் ஒன்று பேசித் துரோகம் செய்தவர்களை எதிர்கொண்டிருக்கிறேன். உறவுகளில் பொறாமையில் ஆரம்பித்துக் கோபத்தில் வளர்ந்து பகைமையில் முறியும் உறவுகளைச் சந்தித்திருக்கிறேன். மெத்தப் படித்தவர்கள்கூடப் பொறாமையின்றி உறவுகளைச் சிதைப்பதைக் கண்டிருக்கிறேன்.

அப்பப்பா! இப்படி ஏராளமான உறவுநிலைகளைக் கண்டு மனம் அதிர்ந்து போன தருணத்தில் எழுத ஆரம்பித்ததே இந்த நூல். நம்பிக்கைத் துரோகிகளையும் கயமை எண்ணம் கொண்டவர்களையும் காணும் விபத்து என் வாழ்வில் ஏற்பட்டது. அப்போதுதான் இந்த உலக வாழ்க்கை பற்றிய ஒரு தெளிவு என் மனதுள் ஏற்பட்டது. ஒன்பது ஆண்டுகாலப் பணி அனுபவத்தில் தொண்ணூறு ஆண்டுகால அனுபவம் கிடைக்கப்பெற்றேன். தெளிந்த மனத்தோடு சிந்திக்கத் துவங்கினேன். உறவுகள் செம்மையாக இருக்க என்ன வழிகள் என்று சிந்தித்தேன். கண்ணுக்குக் கண், பல்லுக்குப் பல் என்பது உறவை முறிக்கும் என்பது உறவை அழிக்கக் கூடியது என்பதைச் சமுதாய நிகழ்வுகளில் கண்டேன். சகிப்புத் தன்மையும் பொறுமையும் விட்டுக் கொடுத்தலும் உறவை வளர்க்கும் என்பதைத் திறவோர் காட்சியில் கண்டு தெளிந்தேன்.

உறவுகளின் பகைவன் கர்வம். உறவுகளின் நண்பன் பணிவு. அதனால்தான் வள்ளுவர் பணியுமாம் என்றும் பெருமை என்கிறார். நீயா! நானா! நீ பெரியவனா! நான் பெரியவனா! என்பதில் ஏற்படும் கர்வம் உறவின் எதிராளியாகிறது. அதைக் கொஞ்சம் ஒதுக்கி வைக்க ஆரம்பித்தால் உறவுகள் வளர ஆரம்பிக்கும். அதன் பிறகு இன்னா செய்தவருக்கும் இனியவே செய்யும் மனநிலைக்கு நம்மை நாம் பழக்கிக் கொள்கிறபோது பகைவன் கூட நமக்கு உறவாகி விடுவான். இதுவே மனித உறவின் இரகசியம். தண்டிப்பதை விட மன்னிப்பது என்பது மிகவும் கடினமான செயல். ஆனால் அதைச் செய்ய

முயற்சிக்கிறபோது உறவில் வெற்றியடையலாம். இயேசுவின் போதனையில் வருகின்ற

*உங்கள் பகைவரிடம் அன்பு கூறுங்கள்*
*உங்களை வெறுப்போருக்கு நன்மை செய்யுங்கள்*
*உங்களைச் சபிப்போருக்கு ஆசி கூறுங்கள்*
*உங்களை இகழ்ந்து பேசுவோருக்காக இறைவனிடம் வேண்டுங்கள்*

என்னும் வாசகங்களும், பாரதியின் "பகைவனுக்கருள்வாய் நன்னெஞ்சே பகைவனுக்கருள்வாய்" என்ற வரிகளும், வள்ளுவரின் "இன்னா செய்தாரை ஒருத்தல் அவர் நாண நன்னயம் செய்துவிடல்" என்னும் குறளும் மனித உறவுகளை மலரச் செய்யும் வழிமுறைகளாகும். இவற்றைத் தெள்ளத் தெளிவாகச் சிந்தித்து, உறவுகளுக்கு "எழுத்துரு" கொடுக்க நினைத்தேன். அதுவே இந்த நூல் எழுத மூன்றாவது காரணமானது.

என்னதான் நாம் பேசினாலும் எழுதினாலும் எடுத்துக்காட்டுகள் தருகிறபோதே அது நிலைபெறும். எனவே இலக்கியங்களை மையப்படுத்தி அதில் கூறப்பட்டுள்ள மனித உறவுகள் பற்றிய நியதிகளை எடுத்துரைக்கும் வண்ணம் கட்டுரைகள் எழுதினேன். தொல்காப்பியர் தொடங்கிச் சங்க இலக்கியம், அற இலக்கியம், திருக்குறள், பக்தி இலக்கியம், காப்பியங்கள், சிற்றிலக்கியங்கள், பிற்கால நீதி இலக்கியங்கள், சித்தர் பாடல்கள், சிறுகதை, நாவல், நாட்டுப்புற இலக்கியம், கிறித்துவ இலக்கியங்கள், இசுலாமிய இலக்கியங்கள், வள்ளலார், பெரியார், திரையிசைக் கவிதைகள், இதழ்கள், மக்கள் தொடர்பு ஊடகங்கள் முதலான அனைத்துப் பகுதிகளையும் தொட்டுக் காட்டும் வகையில் அவற்றுள் சுட்டப்படுகின்ற மனித உறவுகள் பற்றிய செய்திகளைக் கட்டுரைகளாக எழுதினேன். அவற்றைத் தொகுத்து ஒரு நூலாக வெளியிட வேண்டும் என்ற வேட்கையின் காரணமாக இந்நூல் வெளிவருகிறது.

எத்தனையோ இலக்கியங்கள் வாழ்வின் நிலையாமையைப் பற்றிக் கூறுகின்றன. வள்ளுவர் கூட நேற்று இருந்தவர் இன்று இல்லை என்னும் பெருமையுடையது இந்த உலகம் என்கிறார். தமிழ்ப் படித்தவர்கள் இதை நன்கு உணர்வார்கள். படிக்காதவர்களாக இருந்தாலும் வாழ்க்கை அனுபவத்தில் உணர்வார்கள். ஒவ்வொரு காலக் கட்டத்திலும் வாழ்கிற மனிதர்கள் அவரவர் காலத்தில் வாழ்ந்து கண்ணுக்கு எதிராகவே மண்ணில் மறைவதைக் காண்பது உண்டு. அத்துடன் வாழ்ந்து அனுபவத்தில் உணர்ந்தவர்கள் சொல்வதையும் கேட்பது உண்டு. அப்படி இருந்தும் ஏதோ இந்த மண்ணில் நாம் மட்டும் பல கோடி ஆண்டுகள் நிலையாக வாழப்போகிறோம் என்பது போன்று

பகைமையால் உறவுகளைச் சிதைப்பவர்கள் இன்று பெருகி விட்டனர். உதாரணமாக ஒன்றைக் கூறலாம். ஓர் இடத்தில் வேலை செய்பவர்கள் ஒற்றுமையுடன் இருப்பது இல்லை. ஒரு குடும்பத்தில் இருப்பவர்கள் ஒற்றுமையுடன் இருப்பது இல்லை. ஓர் இடத்தில் பணி செய்யும் போது குறிப்பிட்ட ஆண்டுகள் மட்டுமே பணி செய்ய நேரும். அதன் காலம் பணி செய்வோருக்குத் தெரியும். அந்தப் பணிக்காலம் முடிந்த பிறகு நிறுவனத்திற்கும் அவருக்கும் எந்தத் தொடர்பும் இருக்காது. அதன் பிறகு அங்கே சென்றாலும் மரியாதையும் பழைய வரவேற்பும் இருக்கா. அவர் அமர்ந்திருந்த இருக்கையில் மற்றொருவர் உட்கார்ந்திருப்பார். அதுதான் நியதி. அப்படியிருக்கப் பணிக்காலத்தில் நீயா! நானா! என்ற பகைமையால் என்னத்தைக் கொண்டு போகப் போகிறோம் என்பதை அனைவருமே உணர வேண்டும். எந்த இடத்தில் பணி செய்தாலும் முடிந்த அளவுக்கு விட்டுக்கொடுத்து, தான் என்னும் மமதையைக் குறைத்து எதுவும் நிலையானதல்ல என்பதை உணர்ந்து சுமூகமான, சமாதான நிலையில் நல்லுறவுகளை அனைவருமே வளர்த்துக் கொள்ள வேண்டும் என்பதே என்னுடைய விருப்பம். நாம் சமாதானத்துடன் பழகினாலும் அடுத்தவர்கள் பகைமையுடன் பார்ப்பதும் பழகுவதுமாக இருந்தால் என்ன செய்வது என்ற வினா எழுவது இயற்கை. அப்படியான சூழ்நிலை வருகிறபோது, நாம் அமைதியுடன் பகைமை பாராட்டுவதைப்பார்த்து முகத்தைத் திருப்பிக் கொண்டு போகாமல் ஒரு புன்னகையை உறவின் அடையாளமாகக் காட்டிவிட்டு நமது பணியைச் செய்ய வேண்டியதுதான்.

இவ்வாறு நடைமுறையில் பழகுவதும் செய்வதும் சற்றுக் கடினம்தான். எதையும் பழகிக் கொள்ள முயலும்போது எளிதாகிவிடும். அந்தப் பழக்கம் மன நிறைவைக் கொடுக்கும். இவற்றையெல்லாம் மனதுள் பல நாள் சிந்தித்துப் பல அனுபவங்களைப் பெற்று அதன் பிறகே இந்த நூலை உருவாக்கினேன். வாழ்க்கை என்பது அருமையானது. மனம் சார்ந்தது. அதை நாம் அமைதி யற்றதாகவும் சமாதானமற்றதாகவும் மாற்றிவிடுதல் நலம் பயக்காது. முடிந்த அளவு சான்றோர் வழிநின்று அறவாழ்க்கை வாழ நினைப்பவர்கள் நல்ல மனித உறவுகளை வளர்த்துக் கொள்ளுதல் அவசியம். இந்த நூலுள் இடம் பெற்றுள்ள கட்டுரைகள் என் மனதுள் பதிந்த அனுபவங்களுடன் இலக்கிய வரிகளை இணைத்ததன் விளைவாக எழுந்தவையே. மனித உறவுகள் மண்ணில் செம்மைப்பட இறைவனை வணங்குகிறேன். இந்நூல் ஆக்கத்திற்கு உதவிய அனைத்து நல்லுள்ளங்களுக்கும் எனது அன்பு நிறைந்த நன்றி.

**மு. சற்குணவதி**

# பொருளடக்கம்

# 1. மனித உறவுகள் – அறிமுகம்

அரிது! அரிது! மானிடராய்ப் பிறப்பது அரிது! என்றார் ஔவை. அப்படி என்னதான் மனித வாழ்வில் அமைந்துள்ளது என்ற ஐயத்தைப் படிப்போர் மனதில் எழுப்புவதே ஔவையின் வரிகள். இன்று அணுயுகத்தில் வாழ்கின்ற மனிதர்கள் அற்புதமான சாதனைகளைப் படைத்துவருகின்றனர். வரலாற்றைப் புரட்டிப் பார்க்கிறபோது அறிவியல் வளராத ஆரம்பக் காலக்கட்டத்தில் கூட அற்புதமான சாதனைகள் நிகழ்ந்துள்ளன. எனவே சாதனைகள் மட்டுமே மனித வளர்ச்சியின் அறிகுறி என்று சொல்லிவிட முடியாது. அப்படியானால் எவற்றை மனித வளர்ச்சியின் அறிகுறியாகச் சொல்வது என்று பலரும் கேட்கலாம். அதனடிப்படையிலான, அவசியமான கருத்துகளைப் பகிர்ந்து கொள்ளவே "மனித உறவுகளை" உங்கள் முன் கொண்டு வருகிறேன்.

வந்து வந்து போகும் அலைகளைத் தன்னுள் அடக்கி உலகை ஆளுகை செய்யும் அற்புதமான கடல் சூழ்ந்த இந்த மண்ணில் வாழும் மனிதர்கள் எங்கு வாழ்ந்தாலும் அவர்களோடு பிரிக்க முடியாதவை மூன்று. அவை வரலாறு, அறிவியல், இலக்கியம். நேற்று வாழ்ந்த மனிதன் பற்றிய பதிவுகள் இன்றைய வரலாறு. இன்று வாழும் மனிதன் பற்றிய பதிவுகள் நாளைய வரலாறு. மனிதன் மனிதனுக்காக எழுதுகிறான். அதில் உண்மை மட்டுமே இருக்கும்.

இயற்கையைப் பார்த்துத் தான் கண்டதைப் போலவும், உணர்ந்ததைப் போலவும் புதிய ஒன்றை மனிதன் படைக்கிறான். அதுதான் அறிவியல். அதுவும் மனிதன் மனிதனுக்காகப் படைக்கிறான். அதிலும் உண்மை மட்டுமே இருக்கும். ஏதாவது ஒரு கருத்தை மையப்படுத்தி மனிதன் மனிதனுக்காகப் படைக்கிறான். அது இலக்கியம். ஆனால் அதில் உண்மை மட்டுமே இருக்காது. மையக் கருத்தைச் சுற்றிக் கற்பனைகளைக் கூட்டி மக்களுக்காக மனிதன் எழுதுகிறான்.

வரலாறுகளும் அறிவியலும் மனிதனின் புறத் தேவைகளுக்கு என்று எடுத்துக்கொண்டால் இலக்கியம் அகத் தேவையை நிறைவு செய்யும்.

மனித வாழ்வின் அனுபவ உண்மைகளை இலக்கியமாகப் பதிவு செய்து கொள்கிறான் படைப்பாளி. அந்தந்தக் காலத்து மனிதனுக்குத் தேவையானதைத் தந்து செல்கிறான். அப்படியான கருத்துகளில் மிகவும் முக்கியமானது மனித உறவுகள் பற்றியது.

"உறவு" என்பது அன்பின் வெளிப்பாடு. பண்பின் செயல்பாடு. நல்ல உறவு முறைகளும் நல்ல உணர்வு முறைகளுமே ஆறறிவு உருவத்தை மனிதனாக்கும். மனித வாழ்க்கையில் உறவுகள் காலங்களையெல்லாம் கடந்து நிற்கின்றன. தொடர்புகள் நிலைக்க ஒன்று பிறிதொன்றுடன் தொடர்பில்லாமல் வாழ்தல் என்பது இயலாது. ஒன்று பிரிதொன்றைச் சார்ந்துதான் வாழ வேண்டும். அந்தச் சார்பு நிலையில் ஒழுங்கு அமைய வேண்டும் அதுதான் மனித உறவு.

உறவு நிலையில் உண்மை கட்டாயம் இடம்பெற வேண்டும். கணவன், மனைவி, தந்தை, தாய், ஆசிரியர், மாணவர், அண்ணன், தங்கை, அக்காள், தம்பி, பெரியோர், சிறியோர், தெரிந்தவர், தெரியாதவர், தற்செயலாகச் சந்தித்துக் கொள்வோர், ஒன்றாகப் பயணம் செய்வோர், ஓரிடத்தில் பணிபுரிவோர் இப்படி பல்வேறு நிலைகளில் மனித உறவுகள் மலர்கின்றன. அவை அனைத்திலும் உண்மை நிலவ வேண்டும். உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று சொல்வார் உறவுகலவாமை வேண்டும் என்பதன் பொருள் அதுதான். உண்மை இல்லாமல் போகிறபோது உறவுகள் கொச்சைப் படுத்தப்பட்டு மனிதன் மிருகமாகும் நிலை ஏற்பட்டு விடுகிறது. கடவுள் மனிதனுக்கு ஆறு அறிவைக் கொடுத்திருக்கிறார். அதனால்தான் தொல்காப்பியர்,

*உயர்திணை என்மனார் மக்கள் சுட்டே*
*அஃறிணை என்மனார் அவரல பிறவே*

என்கிறார். உலகில் இரண்டு பிரிவுகள்தாம் உள்ளன. உயர்ந்தது மக்கள் என்னும் பிரிவு. பிற யாவும் இரண்டாம் நிலைக்கு உரியன. ஆனால் இன்று ஓரறிவு உயிர்களும் இரண்டறிவு உயிர்களும் செய்யாத இழிவான செயல்களை மனிதன் செய்கிறான். தான் பெறுவதற்கரிய பிறவி எடுத்துள்ளோம் என்பதையே மறந்து போகிறான். அதனால்தாம் எங்குப் பார்த்தாலும் தவறான உறவு முறைகள் தலைவிரித்தாடுகின்றன.

அன்பு நிறைந்த ஒழுங்கான குடும்ப உறவுகள் பண்பான வெளி உறவுகள் என்ற நிலையில் காலங்காலமாக மக்கள் வாழ்ந்து வந்துள்ளனர். இன்னும் நல்ல பெற்றோர், நல்ல சகோதர சகோதரிகள், நல்ல ஆசிரியர்கள், நல்ல மாணவர்கள், நல்ல அதிகாரிகள், நல்ல அலுவலர்கள் என்ற நிலையில் போற்றுவதற்குரியதான மனித உறவுகள் இருக்கின்றன. ஆனால் இன்றைய அச்சம் என்னவென்றால் நல்ல மனித உறவுகளின் விகிதம் குறைந்து வருகிறது. இந்த நிலை நீடிக்குமானால் மனிதன் விலங்கு நிலைக்கு முழுவதுமாகச் சென்றுவிடுவானோ என்று திகில் அடைய வேண்டியுள்ளது.

நல்லுறவுக்கு அடையாளம் என்னவென்றால் மனிதன் சிலவற்றைக் கொள்ள வேண்டும். சிலவற்றைத் தள்ள வேண்டும். பொய் பேசுதல், புறங்கூறுதல், கோபம் கொள்ளுதல், பொறாமை கொள்ளுதல், பிறருக்குத் தீமை செய்தல் முதலானவற்றைக் கட்டாயம் தள்ள வேண்டும். பொறுமை, நன்றிமறவாமை, இன்சொல் பேசுதல், பணிவோடு நடத்தல், எதிலும் ஒழுங்கைப் பின்பற்றுதல் முதலானவற்றைக் கைக்கொள்ள வேண்டும். இவைதான் மனித உறவுகளை வலுப்பெறச் செய்யும்.

ஒரு சிலர் சொல்வதுண்டு: இப்போது இருக்கிற காலக்கட்டத்தில் அப்படியெல்லாம் வாழ முடியுமா ! அப்படி இப்படி இருந்தால்தானே பிழைக்க முடியும் என்பார்கள். இவர்கள் எல்லாம் தன்மானத்தை இழக்கத் துணிபவர்கள். ஒரு மனிதன் செய்யக் கூடாததைச் செய்து உயிர் வாழ்வதைவிட இறந்து போகலாமே. ஒருவரையொருவர் மதித்துக் கொள்ளுதல் மனித அடிப்படை என்பதையே பலர் மறந்து விடுகிறார்கள். தான் என்கிற அகந்தையால் நல்லுறவுகளை இழந்து விடுகிறார்கள்.

சங்ககாலத்தைச் சார்ந்த கணியன் பூங்குன்றனார் என்னும் புலவர்,

*யாதும் ஊரே, யாவரும் கேளிர்*
*தீதும் நன்றும் பிறர் தர வாரா*

---

*நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆர்உயிர்*
*முறைவழிப் படூஉம் என்பது திறவோர்,*
*காட்சியில் தெளிந்தனம் ஆகலின், மாட்சியின்*
*பெரியோரை வியத்தலும் இலமே*
*சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே*

என்று பாடியுள்ளார். மனித உறவுகளின் தன்மையை, மனித வாழ்க்கையை படம் பிடித்துக் காட்டுவது இப்பாடல். எளியோர் என்று ஏளனம் செய்வதும், வலியோர் என்று வாழ்த்திப் பேசுவதும் கூடாது. ஏனென்றால், யாரை அவன் இகழ்கிறானோ அவனிடத்திலே இகழ்ந்தவன் போக நேரிடும். யாரை அவன் புகழ்ந்தானோ அவனே புகழ்ந்தவனை அழிக்கவும் நேரிடலாம். "தன்வினை தன்னைச்சுடும்" என்ற பட்டினத்தார் வரி இதைத்தான் உணர்த்துகிறது.

கணவன் மனைவி உறவு என்பது அற்புதமானது. உண்மையானது. புரிதல் என்கிற பண்பு இல்லாமல் போவதால்தான் இன்று கணவன் மனைவியை வெட்டுகிறான். மனைவி கணவனை வெட்டுகிறாள். மாணவர் குற்றங்களைக் களைபவர் ஆசிரியர். அவரே மாணவியிடம் தவறான உறவு கொள்வதா ? மாணவர் ஆசிரியர் உறவு புனிதமானது என்பதைக் கூட மறந்தநிலை இன்றைய காலத்தில் உள்ளது. அக்கம் பக்கத்திலே வசிப்பவர்கள் யார் என்றுகூட அறியாத பரபரப்புநிலை இன்று. தனக்கு ஓர் ஆபத்து வருகிறபோது தான் அடுத்தவர்களைத் திரும்பிப் பார்க்கிறோம். இவை போன்ற நிகழ்வுகள் இன்று அதிகமாகிப் போயின.

அதற்காக நல்லுறவுகளை நாளும் விரும்பும் மனிதர்கள் இன்று இல்லை என்று கூறிவிட முடியாது. இருக்கிறார்கள். அருமையான கணவன் மனைவியர், அருமையான ஆசிரியர் மாணவர், அருமையான அயலார்கள், அருமையான பெரியோர்கள் இப்படி நிறையப்பேர் வாழ்கிறார்கள். ஆனாலும் மக்களை விலங்குகளாக்கும் உறவு முறைகள் இன்று பெருகிக் கொண்டு போவதைக் காணும்போது வருத்தம் அதிகரிக்கிறது.

ஓர் இடத்திலே ஒருவர் பணி செய்கிறார். பணியில் இருக்கும்போது பலரும் அவரை நாடி வருகின்றனர். அவர்களுக்கு உதவி செய்கின்றார். அதிகாரம் செய்கின்றார். குறிப்பிட்ட காலம் வருகிறது. பணி ஓய்வு பெறுகிறார். அது அவருக்குக் கட்டாயம். அதன்பிறகு பணியில் இருந்தபோது அவரை மதித்ததைப் போல் மதிப்பதும் இல்லை. அவரும் பணிபுரிந்தபோது அதிகாரம் செய்தது போல அதிகாரம் செய்வதும் இல்லை. இதுதான் உண்மை. இதை முன்கூட்டியே அவர் பணி செய்யும்போதே உணர்ந்து நல்லுறவு முறைகளைக் கைக்கொண்டிருந்தால் பணி முடிந்த பின்பும் அவர் பண்பு நோக்கி அவரை அறிந்தவர் யாவரும்

மதிப்பார்கள். இல்லையென்றால் பணியில் இருக்கும்போது எப்படி ஆடினான் என்று தூற்றுவார்கள். இதுதான் மனித உறவின் அவசியம் மறுக்க முடியாத உண்மை.

ஓர் இடத்தில் பணி செய்கின்றபோதே இப்படியென்றால் உலகில் பிறந்து பலரோடு உறவு கொண்டு, இன்பங்களை அனுபவித்து வாழ்கின்ற மனிதன் ஒருநாள் உலக வாழ்விலிருந்து ஓய்வு பெற வேண்டும். அது கட்டாயம். பணி ஓய்வுநாள் நமக்குத் தெரியும். ஆனால் வாழ்க்கை ஓய்வு நாள் யாருக்கும் தெரியாது. அதைத்தான் திருமூலர்,

*அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்*
*மடக்கொடியாரொடு மந்தணம் கொண்டார்*
*இடப்பக்கமே இறைநொந்தது என்றார்*
*கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந்தாரே*

என்று அழகாகக் கூறியுள்ளார்.

வயிறு புடைக்கச் சுவைத்து உண்டான். மனைவியோடு மகிழ்ச்சியை அனுபவித்தான். ஏதோ கொஞ்சம் இடது பக்கம் வலிக்கிறது போல இருக்கிறது என்று கூறிப் படுத்தான். அவ்வளவுதான் வாழ்க்கைப் பணி ஓய்வு பெற்றது. இறந்து போனான். இதை உணர்ந்தால் நாம் யாரையும் இழிவுபடுத்த மாட்டோம். யாருக்கும் தீமை செய்ய மாட்டோம். யாருக்கும் துரோகம் செய்ய மாட்டோம். இன்றைய காலக்கட்டத்தில் இவை மூன்றையும் எளிதாக பலர் செய்கிறார்கள். இன்னும் சொல்லப் போனால் நன்மை செய்தவருக்குத் தீமை செய்வதும், நன்மை செய்தவரை இழிவுபடுத்துவதும் ஆகிய செயலும் சொல்லும் என்கிற இரண்டு நிலைகளில் வாழ்கின்றனர்.

நரிவெரூஉத்தலையார் என்ற புலவர்,

*நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்*
*அல்லது செய்தல் ஓம்புமின்*

என்று இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் பாடியுள்ளார். பிறருக்கு நன்மை செய்யாவிட்டாலும் பரவாயில்லை. பிறருக்குத் தீமை செய்யாமல்

இருந்து உங்களை நீங்கள் காத்துக் கொள்ளுங்கள் என்கிறார். இந்த ஒரு பண்பை வளர்த்துக் கொண்டாலே போதும் மனித உறவுகளில் மகிழ்ச்சி நிலவும். இல்லையென்றால் என்னதான் அறிவியல் சாதனைகள் செய்தாலும், நிலவில் வீடுகட்டி வாழ்ந்தாலும் அடிப்படை மனிதப் பண்புகள் அவனிடம் இல்லையென்றால் மரத்திற்கு ஒப்பாவான். மனிதனாக முடியாது,

*அரம் போலும் கூர்மையரேனும் மரம் போல்வர்*
*மக்கட் பண்பு இல்லா தவர்*

என்ற குறளின்படி மரமாகவே கருதப்படுவான் என்பதை நாம் மறந்து விடக்கூடாது. நாம் எதைச் செய்கிறோமோ அதுவே நமக்கும் திரும்ப வரும். இன்சொல் பேசி இனிதாகப் பழகி வாழக் கற்றுக் கொண்டவர்கள் மறைந்தாலும் என்றும் வாழ்வார்கள்.

உறவுகளில் ஒழுங்கு இருக்கிறபோது சிக்கல்கள் வாரா. ஒழுங்கு தவறுகிறபோது சிக்கல்கள் உருவாகி உறவில் விரிசல்களும் சிதைவுகளும் ஏற்படும். இந்த உறவு என்கிற சொல் அப்படியாகத்தான் என் மனதில் பதிந்தது.

ஒருசிலர் என்னதான் நாம் நல்ல விதமாகப் பழகினாலும் அவர்களின் தீயவழிகளை விடமாட்டார்கள். அவர்களிடமிருந்து நாம் விலகிவிடலாம். அவர்கள் நமக்குப் பகைவரல்லர். உறவுமல்லர். அதற்காக மனக்கசப்புகளை வளர்த்துக் கொள்ளுதல் கூடாது. நல்லுறவுகளுக்கு மிகவும் முக்கியமானது ஒருவரை ஒருவர் மதித்து நடத்தலும், ஒருவரை ஒருவர் இழிவுபடுத்தாமல் பேசுதலும், பழகுதலும் அவசியம். பொன்னும், பொருளும், பட்டமும் பதவியும் இருந்தாலும் நல்லுறவுகள் இல்லையென்றால் எல்லாம் பயனற்றுப் போகும். என்ன பிரச்சினையாக இருந்தாலும் கொஞ்ச காலம் தாமதித்துப் பொறுமையாகப் பேசினால் எல்லாம் சரியாகிவிடும். அவசர அவசரமாகப் பேச்சிற்கே இடமின்றிச் செயல்படுவதால்தான் மன முறிவுகள் ஏற்பட்டு மண முறிவுகள் நடந்து மனித உறவுகள் கேள்விக்குறியாகி விடுகின்றன. மனிதனா அவன் ? என்று கேட்க வைக்காமல் அவன்தான் மனிதன் என்று சொல்ல வைக்குமாறு வாழப் பழகிக்கொள்வோம்.

# 2. தொல்காப்பியம் காட்டும் மனித உறவுகள்

ஒரு மனிதன் வாழ்கின்ற வாழ்க்கை அறவழியில் அமையுமானால் அது போற்றுதற்குரியது. அறவழியில் அமையாமல் இருந்தால் அது தூற்றுதற்குரியது. இவ் இரு நிலைகளில் முதல்நிலை வாழ்க்கை வாழ வேண்டுமானால் ஒரு மனிதன் நல்ல மனித உறவுகளை வளர்த்துக் கொள்ள வேண்டும். மனித உறவுகள் பண்பின் அடிப்படையில் வளர வேண்டும். அத்தகைய மனித உறவுகள் பற்றித் தொல்காப்பியர் கூறும் சிந்தனைகளைப் பார்ப்போம்.

## மனித வாழ்க்கை

தனிமனிதனுக்கான சில சட்டங்களோடு சமுதாயத்திற்கான சில சட்டங்களும் சேர்ந்து மனித வாழ்க்கை வளர்ந்தது. அதாவது இயற்கையில் எந்த உயிரினத்திற்கும் இல்லாத பகுத்தறிவுப் பண்பை மனிதன் பெற்றிருந்ததால் சட்டங்கள் உண்டாயின. அச்சட்டங்கள் மனித வாழ்க்கையைப் பண்படுத்தின. பிற உயிரினங்களைவிட அவன் உயர்ந்தவன் என்பதை உணரச் செய்தன. அந்த உணர்வுகளின் வளர்ச்சியே குடும்ப உறவுகளாயின. தனித்து ஒருவன் வாழ்வது வாழ்க்கையல்ல. கணவன், மனைவி, குழந்தைகள் என்னும் உறவுகள் வளர்கிறபோதே அது வாழ்க்கையாகிறது. எனவே, மனித வாழ்க்கை என்பதே உறவுகளால் வருவதுதான்.

கணவன் மனைவி உறவு, தாய் தந்தை உறவு போன்ற உறவுமுறைகளாகி அந்த மரபுமுறைகள் எழுதப்படாத சட்டங்களாயின. இவ்வாறு அமைக்கப் பெற்ற சட்டங்களே மனிதனைக் காவல் செய்கின்றன. நல்ல உறவு முறைகளும் தீய உணர்வு முறைகளும் தொடர்புகளால் உருவாக்கப்படுகின்றன. உறவு என்ற நிலையில் பற்று வளர்ந்த பின்னரே ஒன்றின் மீது அன்பு மிகுதியாகும். அன்பு வளர்ந்த நிலையில் நட்பாக வளரும். உறவுகளிடம் மிகுதியான அன்பு வைக்கும் போதுதான் உறவு வலுப்படும். அந்த உறவுகளைத் தொல்காப்பியரின் இலக்கண வரிகளும் உணரவைக்கும் தன்மையை இனிக் காணலாம்.

## திணைப்பாகுபாடு

*உயர்திணை என்மனார் மக்கள் சுட்டே*
*அஃறிணை என்மனார் அவரல பிறவே*
*ஆஇரு திணையின் இசைக்குமன் சொல்லே*

(தொல்காப்பியம் - சொல். 1)

என்னும் நூற்பாவில் மக்களை உயர்திணை எனக் கூறுவார். மக்கள் அல்லாத ஏனைய உயிர்களை அஃறிணை எனக் கூறுவார். உயர்திணை, அஃறிணை ஆகிய இரு திணைகள் பற்றியும் சொற்கள் பொருள் உணர்த்தி அமையும் என்கிறார்.

*ஒன்று அறிவதுவே உற்று அறிவதுவே*
*இரண்டு அறிவதுவே அதனொடு நாவே*
*மூன்று அறிவதுவே அவற்றொடு மூக்கே*
*நான்கு அறிவதுவே அவற்றொடு கண்ணே*
*ஐந்து அறிவதுவே அவற்றொடு செவியே*
*ஆறு அறிவதுவே அவற்றொடு மனனே*
*நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத்தினரே*

(தொல்-மரபியல் 27)

என்னும் நூற்பாவில் உடம்பால் மட்டும் அறிவன ஓர் அறிவு உயிர்கள். உடம்பாலும் நாவாலும் அறிவன இரண்டு அறிவுயிர்கள். உடம்பு, நா, மூக்கு மூன்றாலும் அறிவன மூவறி உயிர்கள். உடம்பு, நா, மூக்கு, கண் இவை நான்காலும் அறிவன நாலறி உயிர்கள். உடம்பு, நா, கண், மூக்கு, காது இவை ஐந்தால் அறிவன ஐந்தறி உயிர்கள். இவ்வைந்தோடு மனத்தாலும் அறிவன ஆறறி உயிர்கள். இவற்றைத் தெளிவாக அறிந்தோர் நெறிமுறையாக உணர்த்தியுள்ளனர் என்கிறார்.

மேற்கண்டவாறு உயிர்களைப் பாகுபாடு செய்யும் அறிவியலாளரான தொல்காப்பியர் மனிதனைக் கண்டு வியந்து போகிறார். மனம் என்ற அற்புதமான ஒன்றை மனிதன் மட்டுமே பெற்றிருப்பது விந்தையாக உள்ளது. எனவே தான் மனிதனை மட்டும் உயர்த்துகிறார்.

'உயர்திணை என்மனார் மக்கள் சுட்டே' என்கிறார். உயிர்களில்

உயர்ந்தவர் என்றாலே அது மக்கள் மட்டுமே. பிற எல்லா உயிர்களும் தாழ்ந்தவை என்ற பொருளில் அஃறிணை என்று சுட்டுகின்றார். அதனால்தான் ‘அஃறிணை என்மனார் அவரல பிறவே’ என்கிறார். மனிதர்களைத்தவிர, பிற எல்லா உயிர்களும் அஃறிணை என்று தெளிவுபடுத்துகின்றார். மொழிக்கு மட்டும் இலக்கணம் வகுத்தவர் அல்ல தொல்காப்பியர். மக்கள் வாழ்விற்கும் இலக்கணம் வகுத்தவர். அந்த மக்கள் வாழ்க்கை மனம் சார்ந்தது. அந்த மனத்தின் அடிப்படையில் மனிதன் உறவுகளை வளர்த்துக் கொண்டு தங்களுக்கென்று சில சட்டங்களை வேலியாக அமைத்துக் கொள்கிறான். அதனால்தான் அவன் உறவுகொள்ளும் உயிர் என்ற அடிப்படையில் ‘உயர்திணை’ என்கிறார். அந்தப் பண்பு மக்களுக்கு மட்டுமே உரியது என்பதை உணர வைக்கிறார்.

சமுதாய நிலையில் மனித வாழ்க்கையை நோக்கும்போது மனித உறவுகளில் உண்மை இருப்பது இல்லை. போலியான நடிப்பு நிலையில் உறவுகள் வளர்வதால் பலவிதமான சிக்கல்கள் ஏற்படுகின்றன. இளையவர்கள் பெரியவர்களை மதிக்க வேண்டும் என்கிற நியதியைக்கூட இன்றைய காலக்கட்டத்தில் ஏற்றுக் கொள்வது இல்லை. அந்த அளவிற்கு உறவுகளில் நியதிகள் மறுக்கப்படுகின்றன. உயர்திணை என்று பெருமையோடு கூறிக்கொள்ளத் தயக்கம் காட்ட வேண்டிய காலமாகி விட்டது. எனவே, தொல்காப்பியர் தலைநிமிர்ந்து கூறும் உயர்திணை என்பது மக்கள் மட்டுமே என்கிற பெருமிதத்திற்கு நாம் உரியவர்களாக வேண்டுமானால் தள்ளாடும் உறவுகளில் மனித சட்டங்களைக் கைக் கொண்டு மனித உறவுகளை வலுப்படுத்திக் கொள்வதுதான் சிறந்த வழி.

# 3. சங்க இலக்கியங்களில் மனித உறவுகள்

இன்றைய காலக்கட்டத்தில் தமிழ்மொழி செம்மொழி என்று போற்றப்பட்டு உயரிய பாராட்டைப் பெற்றிருக்கிறது. அதற்குக் காரணம் தமிழில் தோன்றிய இலக்கியங்களே. குறிப்பாகச் சங்ககால இலக்கியங்கள் அடிப்படையாகும். எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்னும் தொகை நூல்களாகிய பதினெண் மேற்கணக்கு நூல்களாகும். இவற்றுள் அகநூல்களும், புறநூல்களும் மக்களின் அக வாழ்க்கையையும், புற வாழ்க்கையையும் படம்பிடித்துக் காட்டும் நாடகப் பாங்கில் அமைந்துள்ளன. அகநூல்கள் யாவும் இல்லற வாழ்வின் முன்பின் நிகழ்வுகளைச் சுவைபட எடுத்துரைக்கின்றன. தலைவன், தலைவி, தோழி, செவிலித்தாய், நற்றாய், பாங்கன், பாங்கி ஆகியோரின் உறவுநிலைகளை விளக்குவதாக அமைந்துள்ளன. இவை அகவாழ்வின் உறவின் வெளிப்பாடாகும். இவற்றிலிருந்து புறவாழ்விற்குரிய உறவுகளை வெளிப்படுத்துவதாகப் புறநூல்கள் அமைந்துள்ளன. பல்வேறு நிலைகளில் மக்கள், மக்களோடு உறவு கொண்டு வாழும் நிலையை அவை எடுத்துரைக்கின்றன. மனித உறவுகளைச் சங்க இலக்கியங்களின் புற நூல்கள் வழி இனி நோக்குவோம்.

சங்க இலக்கியப் பாடல்களின் கீழே கொடுக்கப் பெற்றுள்ள குறிப்புகளில் அவனை அவர் பாடியது என்றே உள்ளன. அதாவது ஓர் அரசனை அவன் என்றும் பாடிய புலவரை அவர் என்றும் குறிக்கப்பட்டுள்ளன. நாடாளும் மன்னனாக இருந்தாலும் புலவர் சொல்லும் அறிவுரையை ஏற்று அதன்படி நடந்துள்ளனர். புலவர்களும் அறவழியில் ஆட்சி செய்த அரசர்களைப் போற்றியதுடன் அவர்கள் தவறு செய்தபோது அஞ்சாமல் எடுத்துரைத்து அவர்களை நேர் வழியில் செல்லும்படி உணர்த்துவார்கள். இது சங்க காலத்தில் இருந்த மிக உன்னதமான மனித உறவை எடுத்துக்காட்டுகிறது. இப்படி பலர் இருந்தனர்.

அதற்கு ஓர் சான்று கூற வேண்டுமானால் ஔவை அதியமானைக் கூறலாம்.

*யாழொடும் கொள்ளா; பொழுதொடும் புணரா*
*பொருள் அறிவாரா; ஆயினும் தந்தையர்க்கு*
*அருள் வந்தனவால் புதல்வர்தம் மழலை;*
*என் வாய்ச் சொல்லும் அன்ன - ஒன்னார்*
*கடிமதில் அரண் பல கடந்த*
*நெடுமான் அஞ்சி; நீ அருளன்மாறே* (புறநானூறு - 92)

மேற்கண்ட பாடல் ஔவையார் பாடியது. யாழோசை தருவதுபோல இசையின்பம் தராது; காலத்துடன் பொருந்தி வராது; பொருளும் அறிய இயலாது. ஆயினும் தந்தையர்க்கு தம் புதல்வர் மழலையிடம் அருளிருக்கும்; ஆகவே இன்பமுடன் ஏற்பர். என்னுடைய வாயிலிருந்து வெளிப்படும் சொற்களும் அத்தன்மையினவே. பகைவர்தம் காவலையுடைய மதிலமைந்த அரண் பலவற்றை வென்ற நெடுமான் அஞ்சியே! நீ என் சொற்களையும் அவ்வாறு அருள் செய்கின்றாய் என ஔவையார் தாம் சொல்வதை மன்னனாகிய அதியமான் செவிமடுத்து அதன்படி நடப்பதை எடுத்துரைக்கின்றார். புலவராகிய ஔவையைப் பெருமளவு உண்மையாக மதித்தமையால்தான் அதியமான் கிடைத்தற்கரிய நெல்லிக்கனியை ஔவையாருக்குக் கொடுத்தான். அரசர்களும் புலவர்களும் இத்தகைய உன்னதமான உறவைக் கொண்டிருந்தனர். நம்மைப் புகழ்ந்து பாடும் புலவர்கள்தானே இவர்கள். இவர்கள் சொல்லும் அறிவுரையை நாம் கேட்பதா! என்று அரசர்கள் நினைக்கவில்லை. சான்றோர்களுக்கும் புலவர்களுக்கும் மிகப் பெரிய மரியாதையை அரசர்கள் கொடுத்தனர்.

புலவர்களும் இரவலர்களும் எப்பொழுது வந்தாலும் எத்தனை முறை வந்தாலும் சற்றும் முகம் கோணாமல் முதல் நாள் சென்றபோது வரவேற்றது போன்றே வரவேற்று உபசரித்துப் பொருள் கொடுத்து அனுப்பும் நல்லுறவை அரசர்கள் மக்களிடம் கொண்டிருந்தனர். இதைத்தான் கீழ்வரும் பாடல் எடுத்துரைக்கிறது.

*ஒருநாள் செல்லலம்; இருநாள் செல்லலம்*
*பலநாள் பயின்று, பலரொடு செல்லினும்*
*தலை நாள் போன்ற விருப்பினன் மாதோ*
*இழை அணி யானை இயல்தேர் அஞ்சி*
*அதியமான்; பரிசில் பெறூஉம் காலம்*
*நீட்டினும், நீட்டாது ஆயினும், களிறு தன்*

*கோட்டு இடை வைத்த கவளம் போலக்*
*கையகத்தது; அது பொய் ஆகாதே;*
*அருந்த ஏமாந்த நெஞ்சம் !*
*வருந்த வேண்டா; வாழ்க அவன் தாளே !* (புறநானூறு 101)

இப்பாடல் வழி ஔவையார் அதியமானின் பண்பு நிறைந்த உறவை வெளிப்படுத்துகிறார்.

புலவர் அரசர் உறவிற்கு இன்னொரு விளக்கமாக இருந்தவர்கள் பாரி என்னும் அரசனும் கபிலர் என்ற புலவரும். பாரியின் பறம்புமலை பகைவர்களால் கைப்பற்றப்பட்டபின் பாரி மகளிரைப் பாதுகாக்கும் பொறுப்பைக் கபிலர் ஏற்கின்றார். பாரி இருந்தபோது இருந்த நிலையையும் பாரி இறந்த பிறகு இருக்கும் நிலையையும் நினைத்து வருந்திப் பாடுகின்றார்.

*ஈண்டு நின்றோர்க்கும் தோன்றும்; சிறுவரை*
*சென்று நின்றோர்க்கும் தோன்றும், மன்ற*
*களிறு மென்று இட்ட கவளம் போல*
*நறவுப் பிழிந்து இட்ட கோதுடைச் சிதறல்*
*வார் அசும்பு ஒழுகும் முன்றில்,*
*தேர் வீசு இருக்கை, நெடியோன் குன்றே* (புறநானூறு - 114)

அதாவது அருகில் நின்று பார்ப்பவருக்கும் தோன்றும். சிறிது தொலைவு சென்று நின்று பார்ப்பவர்க்கும் தோன்றும்; யானை மென்று போட்ட உணவினது சக்கை போல மது பிழிந்து போட்ட சக்கையிலிருந்து மதுச்சேறு ஒழுகும் முற்றத்தையுடையது தேர் வழங்கும் இருப்பையுடைய பாரியின் பறம்புமலை என்று வருந்திக் கூறுகின்றார் கபிலர்.

அரசர்கள் புலவர்களை மதித்து, அவர்களின் அறிவுரையைக் கேட்டு, போற்றினார்கள். அத்துடன் அவர்கள் விரும்பும் பரிசுப் பொருள்களையும் மனமகிழ்ச்சியுடன் அளித்தனர். அவ்வகையில் குமணன் என்னும் மன்னனைப் பாடிப் பரிசு பெற்று வந்த பெருஞ்சித்திரனார் என்னும் புலவர் கீழ்வருமாறு பாடுகின்றார்,

*நின் நயந்து உறை நர்க்கும், நீ நயந்து உறை நர்க்கும்,*
*பல் மாண் கற்பின் நின் கிளை முதலோர்க்கும்,*
*கடும்பின் கடும்பசி தீரயாழ நின்*

*நெடுங் குறியெதிர்ப்பை நல்கியோர்க்கும்*
*இன்னோர்க்கு என்னாது, என்னொடும் சூழாது*
*வல்லாங்கு வாழ்தும் என்னாது, நீயும்*
*எல்லோர்க்கும் கொடுமதி - மனை கிழவோயே!*
*பழம் தூங்கு முதிரத்துக் கிழவன்*
*திருந்து வேல் குமணன் நல்கிய வளனே* (புறநானூறு - 163)

அதாவது தாம் பரிசாகப் பெற்று வந்த பொருள்களை மனைவியிடம் கொடுத்து, என் மனைக்கு உரியவளே! பலாப்பழம் மிகுந்த முதிரமென்னும் மலைக்குத் தலைவனாகிய, திருந்திய வேலுடைய குமணன் எமக்கு அளித்த செல்வத்தை நின்னை அன்பு செய்து வாழும் மகளிர்க்கும், நீ அன்பு செய்து ஒழுகும் மகளிர்க்கும், பல குணங்களும் மாட்சிமைக்கப்பட்ட கற்பினையுடைய நின் சுற்றத்து மூத்த மகளிர்க்கும் அளிப்பாயாக; நம் சுற்றத்தின் பசி நீங்க நினக்கு நெடுநாள் கடன் தந்து உதவியோர்க்கும், மற்றும் இன்ன தன்மையார் என்று கருதாமல் என்னோடு கேளாதும், வளமுடன் வாழலாம் என்று பாதுகாத்து வைத்துக்கொள்ள நினையாதும் நீயும் எல்லோர்க்கும் வழங்கி மகிழ்வாயாக என்று பெருஞ்சித்திரனார் கூறுகின்றார். பரிசில் பெற்று வந்த புலவர்களும் இரவலர்களும் தாம் மட்டும் அனுபவித்து இன்புற்று வாழ நினைக்காமல் தம்முடைய சுற்றத்தாரும் மற்றவர்களும் இன்புற்று வாழ நினைக்கும் மனநிலையைப் பெற்றிருந்தனர். இது உறவுகளை மதித்து வாழும் பண்பைச் சுட்டுகிறது.

மனித உறவுகளை மதித்து நோக்கியபோது தம்மைப்போல் பிறரையும் நேசிக்கும் பண்பினைப் பெறுதல் அவசியமாகின்றது. அவ்வாறு நேசிக்கும் பண்பினையே பெருஞ்சித்திரனார் பாடல் உணர்த்துகின்றது.

சங்க இலக்கியத் தொகுப்புகளில் ஒரு பிரிவான பத்துப்பாட்டுள் இடம் பெற்றுள்ள ஆற்றுப்படை நூல்களான திருமுருகாற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெருபாணாற்றுப்படை, பொருநராற்றுப்படை, கூத்தராற்றுப்படை ஆகிய அனைத்தும் மனித உறவுகளை அழகிய முறையில் படம்பிடித்துக் காட்டும் வகையில் அமைந்துள்ளன. கடவுளின் அருள் பெற்ற ஒருவன் அருள் பெற விரும்பும் மற்றவனை வழிப்படுத்தித் தான் பெற்ற இன்பத்தை அவனும் பெறும் வகையில் எழுதப்பட்ட திருமுருகாற்றுப்படையும் பரிசில் பெற்று வந்தவர்கள் வறுமையில் இருந்து

பரிசில் பெற விரும்பும் மற்றவர்களுக்கு வழிகாட்டித் தம்மைப்போல் அவர்களும் வறுமை நீங்கி வளமுடன் வாழ வேண்டும் என்று வழிகாட்டும் வகையில் எழுதப்பட்டுள்ள பொருநர், சிறுபாணர், பெரும்பாணர், கூத்தன் ஆகியோரின் உறவு நிலையை எடுத்துரைக்கும் ஆற்றுப்படை நூல்களும் மனித உறவுகளையே எடுத்துரைக்கின்றன.

சிறுபாணாற்றுப்படையில் நல்லியக் கோடனின் சிறப்பையும் பரிசில் வழங்கும் பெருமையையும் எடுத்துரைத்த பாணர்கள், இத்தனை சிறப்புடைய அரசனாகிய நல்லியக் கோடனின் ஊர் வெகுதூரத்தில் இருக்கும் என்று அயர்ந்து விடாதீர். கொஞ்சம் பக்கத்தில் தான் உள்ளது என்று வழிப்படுத்துகின்றனர். மனித உறவுகளுக்கு முக்கியமானது "தம்மைப் போல் பிறரையும் நேசிக்கும் பண்பு" ஆகும். அதனை வெளிப்படுத்துவதாகக் கீழ்வரும் பாடலடிகள் அமைந்துள்ளன.

*அயர் மூதூர்*
*சேய்த்தும் அன்று; சிறிது நணியதுவே*

(சிறுபாணாற்றுப்படை - 202)

வெறும் பகட்டிற்காகத் தன்னிடம் உள்ள செல்வத்தை இரவலர்க்கு வழங்கும் இயல்பு நல்லியக் கோடனுக்கு இல்லை. மாறாகப் பண்பாளனாக விளங்கும் அவன் மனம் விரும்பி மக்களை மதித்து அவர்களிடம் நல்லுறவுகள் வளர வேண்டியே இரவலர்களை வரவேற்றுப் பரிசுகள் வழங்குகின்றான் என்பதைக் கீழ்வரும் பாடலடிகள் சுட்டுகின்றன.

செய்ந்நன்றி அறிதலும், சிற்றினம் இன்மையும்
இன்முகம் உடைமையும், இனியன் ஆதலும்,
செறிந்து விளங்கு சிறப்பின் அறிந்தோர் ஏத்த;
அஞ்சினர்க்கு அளித்தலும், செஞ்சினம் இன்மையும்
———— ———— ———— ————
வரிசை அறிதலும் ———— கொடுத்தலும்
பரிசில் வாழ்க்கைப் பரிசிலர் ஏத்த;
பல் முன் நடுவண் பால் மதி போல,
இன் நகை ஆயமொடு இருந்தோற் குருகி

(சிறுபாணாற்றுப்படை - 220)

வேண்டா வெறுப்பாக ஏவலாளர் மூலமாகப் பரிசுகள் வழங்கச் செய்து வெறும் பேரும் புகழும் அடைய விரும்பும் மக்களை இன்றைய காலத்திலும் நாம் காண்கிறோம். ஆனால் நாடாளும் அரசராக இருந்தாலும் கூட, தன்னோடு சரிசமமாக வைத்துப் பேசுவதற்குக்கூடத் தகுதி இல்லாதவர்களாக நினைக்கும் நிலையில் இருக்கும் இரவலர்களைத் தமக்கு நிகராக நினைத்து, மதித்து, வரவேற்றுத் தானும் உடனிருந்து புதிய பொற்கலத்தில் கொடுத்து, உண்ணுங்கள் உண்ணுங்கள் என்று நெஞ்சார எடுத்துரைத்து விருந்தளிக்கும் நல்லியக் கோடனின் பண்பானது மனித உறவுகளை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது என்னும் கருத்தைக் கீழ்வரும் பாடலடிகள் சுட்டுகின்றன.

*பனுவலின் வழாஅப் பல்வேறு அடிசில்*
*வாள்நிற விசும்பின் கோள்மீன் சூழ்ந்த*
*இளங்கதிர் ஞாயிறு என்னும் தோற்றத்து*
*விளங்கு பொற்கலத்தில் விரும்புவன் பேணி*
*ஆனா விருப்பின், தான் நின்று ஊட்டி*

(சிறுபாணாற்றுப்படை - 245)

மதுரைக்காஞ்சி என்னும் நூல் வாழ்வின் நிலையாமையை எடுத்துரைத்து மனித உறவுகளை மதிக்கக் கூறும் ஓர் அருமையான நூலாகும். தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு நிலையாமையை உணர்த்தும் வகையில் மாங்குடி மருதனார் பாடியுள்ள நூல் மதுரைக்காஞ்சி. இந்த உலகைப் பல சிறப்புகளோடு ஆண்டு, பல விதமான சிறப்புகளை அடைந்து வாழ்ந்த மன்னர்கள் அனைவரும் மண்ணோடு மறைந்தனர். அவர்களை எண்ணிக்கையில் கூறுதல் இயலாது. எனவே நல்லன செய்து நல்லுறவுகளை மதித்து வாழ்வாயாக என்பதை உணர்த்தும் வகையில் கீழ்வரும் பாடலடிகள் அமைந்துள்ளன.

*பணைகெழு பெருந்திறல், பல் வேல் மன்னர்,*
*கரை பொருது இரங்கும், கனை இரு முந்நீர்த்*
*திரை இடு மணலினும் பலரே, உரை செல*
*மலர் தலை உலகம் ஆண்டு, கழிந்தோரே!*

(மதுரைக்காஞ்சி - 235)

சங்க அக இலக்கியங்கள் இல்லற வாழ்வின் மனித உறவுகளை எடுத்துரைக்கும் வகையில் பாடப்பட்டவை ஆகும். புற இலக்கியங்கள் குடும்ப உறவுகள் இல்லாத இரத்த பந்தம் இல்லாதவர்களோடும் நல்லுறவுகளை வளர்த்துக் கொள்ள வேண்டும் என்கிற அடிப்படையைப் பல்வேறு நிலைகளில் விளக்குவதாகவே அமைந்துள்ளன. அவற்றுள் சில கூறுகளை மேற்கண்ட செய்திகளின் வழி அறியலாம்.

## புறநானூற்றில் மனித உறவுகள்

சங்க இலக்கியங்களை இரண்டு நிலைகளில் வாழ்வியலோடு பொருத்திப் பார்க்கலாம். அக இலக்கியங்கள் அகவாழ்வின் உறவுகளையும் புற இலக்கியங்கள் புற வாழ்வின் உறவுகளையும் அடிப்படையாகக் கொண்டு எழுந்துள்ளன. புற இலக்கியங்கள் அரசன் முதல் ஆண்டி வரையிலும் உள்ள எல்லா மனிதர்களையும் பற்றியதாக அமைந்துள்ளன. அந்த வகையில் புறநானூறும் பல்வேறு விதமான மனித உறவுகளைப் பற்றிப் பேசுகின்றது. ஒருசில பாடல்களை மையப்படுத்தி அவற்றால் சுட்டப்படும் மனித உறவுகள் பற்றிய செய்திகளை இனிக்காண்போம்.

இலக்கியங்கள் நாடாளும் மன்னனாக இருந்தாலும் சான்றாண்மை உடைய புலவர்களின் வாய்ச்சொல்லிற்குப் பெரிதும் மதிப்பளித்தமையைச் சுட்டுகின்றன. அதன் வெளிப்பாடாகவே அரசனை அவன் என்றும் புலவரை அவர் என்றும் சுட்டப்படுகிறது. அந்த வகையில் மன்னன் தவறு செய்த பிறகு அதைச் சற்றும் அஞ்சாமல் எடுத்துரைக்கும் அஞ்சாநெஞ்சம் படைத்தவர்களாகப் புலவர்கள் விளங்கினர்.

ஒருமுறை சோழநாட்டை இரண்டாகப் பகுத்து ஆட்சி புரிந்து வந்த சகோதரர்களான நலங்கிள்ளிக்கும் நெடுங்கிள்ளிக்கும் பகைமை ஏற்பட்டது. இருவரும் போரிடத் துணிந்து விட்டனர். அப்போது கோவூர்கிழார் நலங்கிள்ளிக்கு அறிவுரை கூறுகின்றார். ஒரே குடியைச் சேர்ந்த இருவர் பகை கொள்வது உறவிற்குத் தகுந்ததல்ல. அவ்வாறு நடந்தால் உம்முடைய பகைவர்க்குப் பெரு மகிழ்ச்சியடையச் செய்யும். எனவே போர் வேண்டாம் எனக் கூறவும், நலங்கிள்ளி போரை நிறுத்தினான். இக்கருத்தினைக் கீழ்வரும் பாடல் சுட்டுகின்றது.

*ஒரு வீர் தோற்பினும், தோற்ப நும் குடியே*
*இருவீர் வேறல் இயற்கையும் அன்றே; அதனால்*
*குடிப்பொருள் அன்று, நும்செய்தி . . .* (புறநானூறு - 45)

இதேபோன்று சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் மலையமான் மக்களை யானைக்கு இட்டுக் கொல்ல நினைத்தபோது, இளம் பிள்ளைகளின் கள்ளம் கபடமற்ற உள்ளத்தை எடுத்துரைத்து, கிள்ளி வளவன் கொல்ல இருந்த பெரிய பாதகத்தைத் தடுத்து நிறுத்தினார் கோவூர்கிழார்.

ஒருமுறை சேரமான் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையைக் காணவந்தார் மோசிகீரனார் என்ற புலவர். வழி நடந்த களைப்பு காரணமாகச் சேரனின் முரசுக்கட்டிலில் படுத்து உறங்கிவிட்டார். இதைக் காவலர் அரசனிடம் கூறுகின்றனர். புலவரிடம் அரசர் கொண்ட மதிப்பின் காரணமாகக் கீரனார் துயில் எழும் அளவும் தாமே கவறி வீசி நின்றார் சேர அரசன். அத்தகைய உயரிய உறவின் பெருமையைக் கீழ்வரும் பாடலடிகள் சுட்டுகின்றன.

*நுரை முகந்தன்ன மென் பூஞ் சேக்கை*
*அறியாது ஏறிய என்னைத் தெறுவர,*
*இருபாற் படுக்கும் நின் வாள் வாய் ஒழித்ததை*
*அதூஉம் சாலும், நல் தமிழ் முழுது அறிதல்*
*அதனொடும் அமையாது, அணுக வந்து, நின்*
*மதனுடை முழவுத்தோள் ஓச்சி, தண்ணென*
*வீசியோயே....''* (புறநானூறு - 50)

தம்மிடமுள்ள பொருள்களை இல்லாதவர்களுக்குக் கொடுத்து உதவுவது மனித இயல்பு. மனித உறவின் அடிப்படை ஒரு சிலர் ஒருமுறை உதவி கேட்கும் போது முகமலர்ச்சியுடன் உதவி செய்வார்கள். மறுமுறையும் தொடர்ந்து உதவி கேட்டுச் சென்றால் முகம் சுளிப்பார்கள். ஆனால் அதியமான் நெடுமானஞ்சியோ ஒருநாள் சென்றாலும், பலநாள் சென்றாலும் முதல் நாள் சென்றபோது முகமலர்ச்சியுடன் வரவேற்று உபசரித்து உதவி செய்யும் இனிய பண்பினன் என்று ஔவையார் கீழ்வரும் பாடலில் சுட்டுகின்றார்.

*ஒருநாள் செல்லலம்; இருநாள் செல்லலம்*
*பலநாள் பயின்று பலரொடு செல்லினும்*
*தலைநாள் போன்ற விருப்பினன் மாதோ* (புறநானூறு - 101)

தன்னுடைய குடும்பமும், உற்றார் உறவினரும், ஊரினரும், நாட்டினரும், நாட்டை ஆளும் மன்னரும் நல்லவர்களாக இருந்தபடியால் எனக்கு நரையும் திரையும் தோன்றவில்லை என்று, பிசிராந்தையார்

"யாண்டு பல ஆக, நரை இல ஆகுதல்" எனத் தொடங்கும் பாடலில் உறவுகள் பற்றிக் குறிப்பிடுகிறார்.

புறநானூற்றுப் பாடல்களில் மனித உறவுகள் பற்றியும் மனித வாழ்க்கை என்பது என்னவென்றும் விளக்குகின்ற,

*யாதும் ஊரே யாவரும் கேளிர்*
*தீதும் நன்றும் பிறர் தர வாரா.....* (புறநானூறு - 192)

என்று தொடங்கும் பாடல் அற்புதமானது. வாழ்க்கை என்பது தாம் செய்கின்ற செயல் வழியே அமைகிறது. அதனால் பெரியோரைப் புகழ்தலும் சிறியோரை இகழ்தலும் செய்தல் கூடாது என்பதை விளக்குகின்றது. உலக அரங்கில் மனித உறவுகளை எடுத்துரைக்கும் பாடல் வரிகள் இதைவிட வேறெதுவும் இல்லை என்றே கூறலாம். இந்த உலக வாழ்க்கை இளமையில் தொடங்கி முதுமையில் முடிந்து போவது உறுதி. அப்படி இருக்கும்போது ஒருவருக்கு மற்றொருவர் நல்லுறவு கொள்ளாமல், பகைமை கொண்டு தீமை செய்து கொள்வது சரியல்ல என்பதைக் கீழ்வரும் பாடலடிகள் சுட்டுகின்றன.

*நல்லது செய்தல் ஆற்றீர்; ஆயினும்*
*அல்லது செய்தல் ஓம்புமின்; அதுதான்*
*எல்லாரும் உவப்பது; அன்றியும்*
*நல் ஆற்றுப் படூஉம் நெறியுமார் அதுவே* (புறநானூறு - 95)

ஒருவர் மற்றவர்களிடம் இரக்கம் கொண்டு அந்த இரக்கத்தை அன்பின் வெளிப்பாடாக நினைத்து அதனைச் செயல்வழிக் காட்டி, வாழப் பழகிக் கொண்டால் மனித உறவுகள் வளரும். அத்துடன் தவறு செய்வோர்க்கு அறிவுரை கூறுவதும், துன்பம் உற்றபோது உடனிருந்து ஆறுதல் தருவதும் மனித உறவின் வெளிப்பாடாகும். எனவே புறநானூற்றுப் பாடல்கள் வழி மனித உறவுகளை வளர்த்துக் கொள்வதே மனித வாழ்விற்கு உகந்தது என்பதை இதன் வழி அறியலாம்.

## பட்டினப்பாலையில் மனித உறவுகள்

மண்ணுலகின் எந்தப் பகுதியில் மக்கள் வாழ்ந்தாலும் அவர்கள் ஒருவரோடு ஒருவர் நல்லுறவு கொண்டு வாழ்வது அடிப்படையாகிறது. அந்த மனித உறவுகளால்தான் வாழ்க்கை அமைகிறது. அந்த உறவுகளின் செயல்பாடுகளால் நன்மையும் தீமையும் விளைகின்றன. எனவே,

அத்தகைய உறவுமுறைகளைப் பற்றிய சிந்தனை மனிதர்களுக்கு அவசியமாகின்றது. மனித வாழ்க்கைக்கு அடித்தளமாக அமைவது உறவுமுறைகள். அந்த உறவுமுறைகள் எப்படி அமைய வேண்டும் என்கிற உண்மைகளை இலக்கியங்கள் நமக்கு உணர்த்துகின்றன. அத்தகைய உறவுமுறைகள் சங்க இலக்கியத்துள் அமைந்துள்ள பட்டினப்பாலை என்னும் நூலில் உள்ள நான்கு பாங்கினைக் கீழே எடுத்துரைக்கலாம்.

1. உறவுமுறைச் சொற்பொருள் விளக்கம்
2. பட்டினப்பாலை அறிமுகம்
3. பட்டினப்பாலை கூறும் புறநிலை உறவுகள்
4. பட்டினப்பாலை கூறும் அகநிலை உறவுகள்

## 1. உறவுமுறைச் சொற்பொருள்

விலங்கிலிருந்து உயரிய பண்புகளுடைய மனிதன் மற்றவர்களோடு தொடர்புகொள்ளும்போது அந்தந்த உறவிற்கென்று சில முறைகள் உண்டு. ஒவ்வொரு மனிதனிடமும் குறைகளும் உண்டு, நிறைகளும் உண்டு. அப்படி நோக்குகிறபோது அவனிடம் எது மிகுந்துள்ளதோ அதன் அடிப்படையில் ஒரு மனிதனது பண்புகள் எடை போடப்படுகின்றன. அவனது பண்புகளை நெறிப்படுத்தும் வாயில்கள் பல இருந்தாலும் அவற்றுள் அவன் மற்றவர்களோடு உறவு கொள்ளும் முறையே முக்கியமானதாகும். அது குடும்பத்திற்குள் நடக்கும் அகநிலை உறவுகளும் சமுதாயத்திற்குள் நடக்கும் புறநிலை உறவுகளும் என்ற இரண்டு நிலைகளில் அமைகிறது. குறைகளை ஒதுக்கிவிட்டு, தீமையிலும் உடனிருந்து, நிறைகளை மட்டுமே நெஞ்சில் நிறுத்தி, செயல்படும் தன்மையில் அமைந்த உறவுகளை நல்லுறவுகள் என்றும் பகைமை உணர்வினால் பொறாமை கொண்டு மனங்கள் சிதைக்கச் செயல்படும் உறவுகளைத் தீய உறவுகள் என்றும் பட்டினப்பாலையின் வழி நோக்குவோம்.

## 2. பட்டினப்பாலை அறிமுகம்

சங்க இலக்கியங்களான பத்துப்பாட்டுள் அகம் பற்றிய நூல் பட்டினப்பாலை. 301 அடிகளில் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடியது. சோழர்க்குத் தலைநகரமாக விளங்கிய காவிரிப்பூம்பட்டினத்தின் சிறப்பு, கரிகாலனின் வீரம், உறையூரின் சிறப்பு, மக்களின் செயல்கள், வாணிகம்,

நகர அமைப்பு முதலான பட்டினத்தின் நிலையையும் தலைவனின் மனநிலையையும் எடுத்துரைப்பது. பாலைத்திணைக்குரிய பிரிவு பற்றிப் பேசுவது.

காவிரியின் சிறப்பு, சோழ நாட்டின் சிறப்பு, நகரச் சிறப்பு, மக்களின் விளையாட்டுகள், விழாக்கள், வளங்கள், வணிகர்களின் வாழ்க்கை முறைகள், திருமாவளவனின் வீரம், சிறப்புகள் முதலான யாவற்றையும் எடுத்துரைத்து இத்தகைய சிறப்புடைய புகார் நகரே கிடைப்பதாயினும் தலைவியைப் பிரிந்து வரமாட்டேன் என்று தலைவன் தன் நெஞ்சுக்குக் கூறுவதுபோல் அமைக்கப்பட்டுள்ளது. செலவினைத் தவிர்த்தல் என்னும் கருத்தமைந்து செலவழுங்கல் என்னும் துறையை மையப்படுத்தி எழுதப்பட்டுள்ளது. இனி இதில் வரும் உறவுமுறைச் செய்திகளை நோக்குவோம்.

### 3. பட்டினப்பாலை கூறும் புறநிலை உறவுகள்

சோழநாட்டின் சிறப்பினைக் கூறும் ஆசிரியர்,

*முக்காற் சிறுதேர் முன் வழி விலக்கும்*
*விலங்குபகை அல்லது கலங்குபகை அறியா*
*கொழும்பல்குடிச் செழும் பாக்கத்து* (வரிகள் 25 - 27)

என்ற வரிகளில் சுட்டுகின்றார். செல்வம் நிறைந்த வீட்டின் அகன்ற முற்றத்தில் மகளிர் உலருகின்ற நெல்லைத் தின்னும் கோழியைத் தாம் காதுகளில் அணிந்திருக்கும் பொன்னால் செய்த மகரக் குழையால் அடித்து விரட்டுவர். அக்குழை தம் புதல்வர் கையால் உருட்டி விளையாடும் மூன்று சக்கரங்களைக் கொண்ட சிறுதேர் செல்லும் வழியின் முன்னர் வீழ்ந்து அதன் ஓட்டத்தைத் தடுத்து நிறுத்தும். இவ்வாறு குறுக்கிடும் பகையைத் தவிர, கலங்குவதற்குக் காரணமாகிய பகை அறியாத செல்வம் நிறைந்த குடிமக்கள் வாழ்கின்ற வளம் நிறைந்த கடற்கரை ஊர்களைக் கொண்டது சோழநாடு என்கிறார்.

விளையாட்டின் போது கொள்கின்ற சிறுசிறு பகையைத் தவிர மக்கள் உறவை வதைக்கும் பகைமை இல்லை என்கிறார் ஆசிரியர். மற்றவர்களைத் துன்புறுத்திக் கலங்க வைக்கும் பகைமை உணர்வு

கொண்ட உறவுகளை ஆசிரியர் காட்டவில்லை. அப்படி இருத்தல் ஆகாது என்பதையும் உணர்த்துகின்றார். குடிமக்கள் கலங்கி அழுவதற்குக் காரணமாகிய பகை அறியாத உறவினைச் சோழர் ஆட்சி தந்ததையும் சுட்டுகின்றார். பகையறியாத பண்பு மனித உறவுகளில் தலையானது. காரணம் பகைமை உணர்வினாலேயே உறவுகள் சிதைந்து போகின்றன.

நகரச் சிறப்பைக் கூறும்போது இம்மை வாழ்விற்கு ஏதுவாகிய புகழ் நிலைபெற்ற சொல் எங்கும் பரவி விளங்கவும், மறுமை வாழ்விற்கு ஏதுவாகிய அறம் நிலைபெற்று விளங்கவும் காவிரிப் பூம்பட்டினத்தில் அகன்ற உணவுச் சாலைகள் இருந்தன என்கிறார்.

*புகழ் நிலைஇய மொழி வளர*
*அறம் நிலைஇய அகன் அட்டில்* (வரிகள் 42 - 43)

என்ற வரிகளில் மனம் விரும்பி உண்டு மகிழும் தன்மையில் நேரிய வழியில் அமைக்கப் பெற்ற உணவுச் சாலைகள் மனித உறவுகளின் சிறப்பினைச் சுட்டுகின்றன. தம்மை நாடி வருவோர்க்கு உணவளிக்கும் அறச் சாலைகள் மனித உறவுகளை மேன்மைப்படுத்துகின்றன.

காவிரிப் பூம்பட்டினத்தில் கட்டப்பட்டுள்ள பலவகையான கொடிகளைப் பற்றிக் கூறும் ஆசிரியர் :

*மிசைக் கூம்பின் நசைக் கொடி* (வரிகள் - 175)

என்று சுட்டுகின்றார். நாவாய்களில் நாட்டப்பட்டுள்ள பாய் மரத்தின் கம்பங்களின் உச்சியில் காண்போர்க்கு விருப்பத்தைத் தரும் கொடிகள் கட்டப்பட்டிருக்கும். கரையில் இருப்போர்க்கு வணிகம் குறித்துச் சென்றோர் நலமுடன் திரும்பினர் என்பதாலும், தாங்கள் விரும்பிய பொருள் அம்மரக்கலங்களில் வந்துள்ளன என்பதாலும் மகிழ்ச்சி தரும் கொடியானது. இங்கே விரும்பிய பொருள் என்பதை விட நீர்வழிச் சென்றவர் நலமாகத் திரும்பி வந்தார் என்னும் உறவின் மகிழ்ச்சியே வெளிப்படுகின்றது.

மற்றவர்களை வஞ்சித்தும் பொய் கூறியும் வாணிகம் செய்து செல்வச் செழிப்படையாமல் தங்களுக்கு வரக்கூடிய இலாபத்தை வெளிப் படையாகக் கூறி வாணிகம் செய்ததால் சிறந்து விளங்கினர் என்பதை,

*நடுவு நின்ற நல் நெஞ்சினோர்*
*வடு அஞ்சி வாய் மொழிந்து*
*தமவும் பிறவும் ஒப்ப நாடி*
*கொள்வதூஉம் மிகை கொளாது, கொடுப்பதூஉம் குறைகொடாது*

(வரிகள் 207 - 210)

என்ற வரிகளில் எடுத்துரைக்கின்றார். வஞ்சித்தலால் ஏற்படும் பழிச் சொல்லிற்கு அஞ்சி நேர்மையான வாழ்க்கை முறையை வணிகர்கள் கொண்டிருந்தனர் என்பது சிந்திக்கத் தக்கது. பொருள் என்றால் எப்படியாவது பெற்றுவிட வேண்டும் என்று நினைக்கும் மக்கள், பொருள் வேட்கையால் நல்லுறவுகளை இழந்து விடக்கூடாது என்பதை இவ்வரிகள் நினைவுகூரச் செய்கின்றன.

மொழி, இனம் வேறுபட்டிருந்தாலும் மனம் ஒன்றினால் மனித உறவுகள் சிறக்கும் என்பதை,

*மொழிபல பெருகிய பழிதீர் தேஎத்துப்*
*புலம் பெயர்மாக்கள் கலந்து இனிது உறையும்*

(வரிகள் 216 - 217)

என்ற வரிகள் சுட்டுகின்றன. பற்பல சாதியால் உயர்ந்தவர்களும் பல மொழிகளில் திறமை சான்றவர்களும் இவ்வூரில் உள்ள நன்மக்களுடன் கூடிப் பழகி இனிதே வாழ்கின்றனர். வேற்று நாட்டவர் பலரும், சோழ நாட்டில் எவ்வகை அச்சமும் இன்றி வாழ்ந்தமையோடு, எல்லா நலன்களும் பெற்று மகிழ்ச்சியுடன் வாழ்ந்தனர் என்பதால் இனிய உறவு கொண்டு வாழ்வதை வலியுறுத்துகின்றார்.

திருமாவளவன் பகைவர்களால் சிறைபிடிக்கப்பட்டு அங்கிருந்து தப்பி வந்தவன். பகைவர் நாட்டின் மீது போரிட்டு மாபெறும் வெற்றி கொண்டு தன் நாட்டை வளமுறச் செய்கிறான். தன் நாட்டையும் தன்னை நம்பிய மக்களையும் காக்கும் பொருட்டுப் போரிடுவது அவனது கடமையாகும். அதையே திருமாவளவனும் செய்கிறான். ஆனால் பகை நாடு பாழ்பட்டுப் போனபின்பும் பகைவர் பணிந்து திறை செலுத்திய பின்பும் அவனது போர் வெறி அடங்கவில்லை. கரும்பும் நெல்லும் விளைந்த வயல்களில் அறுகும் செருந்தியும் வளர்ந்தன. கூத்தர் விழா நிகழ்த்திய

மன்றங்களில் கூகைகள் கூவப் பேய்கள் ஆடின. விருந்தினர் உண்டு சென்ற இல்லங்களில் கூகைகள் பகலிலும் குழறின. இவை யாவும் போர்வெறியால் ஏற்பட்டவை. நல்லுறவு கொள்ளும் அரசன் வெற்றியால் திருப்தி அடைவான். ஆனால் இவன் கோபமானது மனித உறவுகளை அழித்தன. அதே நேரத்தில் தன்னுடைய நாட்டு மக்களைக் காக்கும் பொருட்டுப் புதிய நகரை உருவாக்கி, வளம் பெருக்கி, குடிமக்கள் வாழ்வில் நல்லுறவை ஏற்படுத்தினான். இப்பகுதியில் பகைவர் நாட்டை அழித்தது அரசன் செயல் என்றாலும் அதில் திருப்தி அடையாத சினம் கொண்ட அவனது மனம் நல்லுறவை வளர்க்காது என்பதையும் அவன் நாட்டில் மக்கள் கொண்ட வேற்றுமையில் ஒற்றுமை காணும் மனநிலை நல்லுறவை வளர்க்கும் என்பதையும் உய்த்து உணரலாம்.

மேற்கூறிய செய்திகள் யாவும் குடும்பம் அல்லாத மனித உறவுகளைப் பட்டினப்பாலை வழி எடுத்துரைக்கின்றன.

## 4. பட்டினப்பாலை கூறும் அகநிலை உறவுகள்

குறைவுபடாதசிறப்புகளையெல்லாம்உடையகாவிரிப்பூம்பட்டினத்தையே பெறுவதாயினும் தலைவியைப் பிரிந்து நான் வரமாட்டேன் என்று தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறியதாகப் பட்டினப்பாலையின்,

*முட்டாச் சிறப்பின் பட்டினம் பெறினும்*
*வார் இருங் கூந்தல் வயங்குஇழை ஒழிய*
*வாரேன்; வாழிய; நெஞ்சே!* (வரிகள் 218 - 220)

என்னும் வரிகளில் சுட்டுகின்றன. இங்கு ஆசிரியர் மிக அருமையான குடும்ப உறவைச் சுட்டுகின்றார். தன் தலைவியைப் பிரிந்து வராமைக்குக் காரணமாக,

*தெவ்வர்க்கு ஓக்கிய*
*வேலினும் வெய்ய, கானம்; அவன்*
*கோலினும் தண்ணிய, தடமென் தோளே*
(வரிகள் 300 - 301)

என்ற வரிகளில் கூறுகின்றார். பாலை நிலமானது வேலினும் மிகவும் வெம்மையுடையது. அச்சத்தைத் தருவது. அவன் செங்கோலினும் தலைவியின் தோள்கள் குளிர்ந்து இன்பம் பயப்பவை. அதனால் அவளைப் பிரிந்து நான் வரமாட்டேன். புகாரையே கொடுத்தாலும் வரமாட்டேன் என்று

மனதிற்குள் ஒரு தலைவன் சொல்லிக் கொள்வதாக ஆசிரியர் அமைத்துள்ளார்.

போரிடுவதும் பொருள் ஈட்டுவதும் வாழ்வதற்காகத்தான். பாலை நிலத்தைக் கடந்து சென்று வாணிபம் செய்து பொருள் ஈட்டுவதும் வாழ்வதற்கே. அந்த வாழ்க்கை அன்பு உறவால் பிணிக்கப்பட்டால் மட்டுமே புறச் செயல்களால் வரும் நன்மைகளால் பயன் இருக்கும். எனவே அகவாழ்வின் அன்பு உறவைக் காட்டவே ஆசிரியர் இந்த வரிகளைச் சுட்டுகின்றார். எந்தக் குறையும் இல்லாத புகாரையே கொடுத்தால்கூட என் அன்புத் தலைவியை விட்டுப் பிரிந்து வரமாட்டேன் என்று தலைவன் கூறுவதும் இதுவே. அன்புறவு என்பது அவளது அழகால் வரும் காம இன்பத்தைக் குறிப்பதல்ல.

இவ்வாழ்வின் அடித்தளமாகிய புரிதல் எனும் அன்பைச் சுட்டுவதாகும். புறக் கவர்ச்சியானால் அது நிலைக்காது. அதைத் தலைவன் பெரிதாக நினைத்திருந்தால் வேறு வழிகளில் கூட அதை அடைய முடியும். ஆனால் இங்கே அக அன்பைக் குறிக்கும் இல்வாழ்வின் உறவைக் குறிப்பதால் தான் எதைக் கொடுத்தாலும் பிரிய மாட்டேன் என்று தீர்க்கமாக உரைக்கின்றான். புறத்தேவைகளை இழந்தாலும் எப்படியேனும் பெறமுடியும். ஆனால் அகத் தேவையாகிய இல்வாழ்வின் ஒழுங்கமைந்த அன்பு உறவை இழந்துவிட்டால் அதைப் பெற முடியாது. எதைப் பெற்றாலும் அதற்கு அவை ஈடாகா என்பதையே ஆசிரியர் உணர்த்துகின்றார்.

அகம் சார்ந்த நூலாகிய பட்டினப்பாலை இல்வாழ்விற்கு வெளியில் மக்கள் பகைமை கொள்ளாமல் நல்லுறவுகொண்டு வாழ வேண்டும் என்பதைச் சுட்டுகின்றது. குடும்ப வாழ்விற்கு வெளியில் மனித உறவுகள் செழிக்க வேண்டுமானால் முதலில் அகவாழ்வில் அன்புறவு தேவை என்பதையும் பட்டினப்பாலை உணர்த்துகின்றது

*அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை*
*பண்பும் பயனும் அது* (குறள் 45)

என்னும் வள்ளுவர் கூற்றிற்கேற்பப் புறவாழ்வில் நல்லுறவு என்னும் அறத்தையும் அகவாழ்வில் அன்புறவு என்னும் ஒழுக்கத்தையும் கொண்டிருந்தால் மட்டுமே வாழ்வில் பயன் விளையும். சான்றோர் போற்றும் பண்பும் அதுவே என்பதைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் மிக நுட்பமான முறையில் உணர்த்தியுள்ளார்.

# 4. பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் மனித உறவுகள்

'உறவு' என்பது மனிதர்களுக்கு உரிய ஒன்று. பிற உயிர்களிடமும் உறவுகள் இருந்தாலும் அவை வாழ்க்கை நெகளை உருவாக்குவதாக அமையவில்லை. மனிதனிடம் மட்டுமே உறவுகள் என்பது வாழ்க்கை நெறிகளாக வளர்ந்துள்ளன. வாழ்க்கை நெறி என்பது இதுதான் என்கின்ற வரையறை. அதாவது அடிப்படை என்பதாகும். இத்தகைய அடிப்படையான உறவுகள் குறித்து வள்ளுவர் கூறுவனவற்றை இனிக் காண்போம்.

திருவள்ளுவர் உலகப் பொதுமறையான திருக்குறளை எழுதியுள்ளார். உலக அரங்கில் சாதிசமய மொழி கடந்த மனித வாழ்வியல் நெறிகளை எடுத்துரைக்கும் அற்புதப் படைப்பாகப் போற்றப்படுகிறது. அதற்குக் காரணம் மனித உறவுகளை மையப்படுத்தி அவர் எடுத்துரைக்கும் வாழ்க்கை நெறிகளாகும். திருவள்ளுவர் அகவாழ்க்கையின் நிகழ்வுகளைச் சுட்டுகின்றார். அவையும் அறம் தழுவியதாக இருக்க வேண்டும் என்பதை இன்பத்துப்பால் என்னும் பகுதி எடுத்துரைக்கின்றது.

அறத்துப்பாலும் பொருட்பாலும் வாழ்க்கையில் ஈடுபட்ட ஒரு மனிதன் பின்பற்ற வேண்டிய நெறிகளை எடுத்துரைக்கின்றன. அவை உறவை மையப்படுத்திப் பேசப்படுகின்றன.

திருக்குறளின் முதல் குறள் இறை வாழ்த்தாக அமைகிறது.

இன்ன சமயத்திற்குரியது. இன்ன கூட்டத்திற்கு உரியது. இன்ன நாட்டிற்குரியது. இன்ன மொழியினருக்கு உரியது என்று கூறமுடியாதது இறை. எல்லா மக்களுக்கும் எல்லா உயிர்களுக்கும் உரியவன், பொதுவானவன், எல்லா உறவுகளுக்கும் முதன்மையானவன் எல்லா உறவுகளையும் அரவணைத்து நடத்துபவன் என்ற அரிய கருத்தைக் கீழ்வரும் குறள் எடுத்துரைக்கின்றது.

*அகர முதல எழுத்தெல்லாம் ஆதி*
*பகவன் முதற்றே உலகு* (குறள் -1)

இந்த உலகம் ஆதிபகவனையே முதன்மையானதாகக் கொண்டது. எழுத்துகளுக்கு எல்லாம் அகரம் தலைமை பெற்றிருப்பதுபோல உலகத்துக்குக் கடவுள் தலைமை பெற்றிருக்கின்றான். அவனே உறவுகளின் தொடக்கம். அவனே உறவுகளின் மூலம் என்பதை இக்குறள் சுட்டுவதோடு எந்த ஒருவருக்கும் சார்ந்தவராக கடவுள் இல்லாமல் அனைத்து மக்களுக்கும் பொதுநிலையில் இருந்து உறவுகளை வளர்ப்பதுபோல மக்களும் உறவுகளை மதிக்க வேண்டும் என்ற உணர்வை இக்குறள் சுட்டுகின்றது.

அனைத்தையும் படைத்த கடவுள் உறவின் தொடக்கமாக அமைவதுபோல் இயற்கையும் உறவுகளை ஆதரிப்பதாக அமைகிறது. இயற்கையில் பார்த்தால் வாழ்விலிருந்து செய்யும் தானமும், துறவற வாழ்விலிருந்து செய்யும் தவமும் மழை பொய்க்குமாயின் நிகழாமல் போய்விடும். இல்வாழ்வினரையும் துறவற வாழ்வினரையும் இயங்க வைப்பது மழை. இருநிலையினரையும் இயங்க வைத்து உறவுகள் வளர வழி வகுப்பது மழை. அதைப்போல மனிதர்களும் உறவுகள் சிதையாமல் வளர்வதற்கு உறுதுணையாக இருக்க வேண்டும் என்பதையே கீழ்வரும் குறள் உணர்த்துகின்றது.

*தானம் தவம் இரண்டும் தங்கா வியனுலகம்*
*வானம் வழங்கா தெனின்* (குறள் - 19)

உலகமானது சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகிய ஐந்தின் கூறுபாடுகளையும் நன்கு ஆராய்ந்து தெளிந்த ஒருவனது அறிவின்கண் அகப்பட்டதே ஆகும். சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகிய ஐந்தின் கூறுபாடுகளாவன :

இவை அனைத்தையும் ஆராய்ந்து தெளிந்த அறிவின்கண் உலகம் அடங்கும் என்கிறார் வள்ளுவர்.

1. நிலம், தீ, நீர், வளி, விசும்பு ஆகிய பூதங்கள் ஐந்து,
2. மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய அறிகருவிகள் ஐந்து,
3. சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகிய தன் மாத்திரைகள் ஐந்து.

அதாவது மனித உடலானது தனித்து இயங்குவது அல்ல. ஐம்புலன் என்னும் நிகழ்வைத் தரும் ஐம்பொறிகளின் உறவால் இயங்குகிறது. எனவே மனித வாழ்வானது உறவுகளின் அடிப்படையில் அமையுமேயன்றித் தனித்து இயங்காது என்னும் கருத்தை வெளிப்படுத்துவதாகக் கீழ்வரும் குறள் அமைந்துள்ளது.

*சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்று ஐந்தின்*
*வகைதெரிவான் கட்டே உலகு* (குறள் - 27)

ஒரு மனிதனின் வாழ்வானது மனதிலிருந்தே தொடங்குகின்றது; மனதையே மையப்படுத்தியுள்ளது. அந்த மனமானது மாசற்றதாகவும் உண்மையை உள்ளடக்கியதாகவும் அமைய வேண்டும். அப்போதுதான் மனித உறவுகள் மாசின்றிச் செயல்பட முடியும். இல்லையென்றால் பொய்மையான வாழ்க்கையே அமைந்துவிடும். எனவே மனதுள் மாசின்றி இருந்தால் மட்டுமே உறவுகளில் துன்பம் நேராது. அறவாழ்க்கை வாழ விரும்பும் ஒருவன், உறவுகளை மதிக்க விரும்பும் ஒருவன் முதற்கண் மனமாசை நீக்க முற்பட வேண்டும். அதுவே நல்லுறவுகளை வளரச் செய்யும். சொல்லுக்கும் செயலுக்கும் மனதுக்கும் உண்மையான உறவு இருக்கும்போது மனிதனுக்கு வலிமை பெருகுகிறது. அந்த வலிமை எல்லாத் துன்பங்களையும் எளிதில் வெல்லுகிறது. மனம் மாசு உடையதாகி ஒருவன் சொல்லாலும், செயலாலும் வேறுபட்ட முறையில் நடப்பானாயின் அவனுக்குத் துன்பமே மிகுவதோடு எந்த மனிதர்களும் அவனை மதிக்காமல் இகழ்வார்கள். எனவே, மனம் மாசின்றி எண்ணம், சொல், செயல் மூன்றிற்கும் இடையே நல்லுறவை மனிதன் வளர்த்துக் கொள்ள வேண்டியது உறவை வளர்ப்பதாக அமையும் என்பதைக் கீழ்வரும் குறள் உணர்த்துகிறது.

*மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்து அறன்*
*ஆகுல நீர பிற* (குறள் - 34)

இல்வாழ்க்கை என்பதே அறம் என்பதற்குச் சான்றாகும். அதாவது அறம் என்பதை வழி என்று பொருள் கொள்ளலாம். ஆறு என்பது அறு என்றாகி அறு என்பது அற என மாறி அதனுடன் அம் சேர்ந்து அறம் என்றாகிறது. ஆறு என்றால் வழி என்று பொருள். எனவே அறம் என்பது

வாழ்வின் வழியைக் காட்டுவது. அந்த அறமே ஒருவன் வாழ்கின்ற இல்வாழ்க்கையை வைத்தே அறிந்து கொள்ளலாம். வழக்கத்தில் இவன் என்ன வாழ்க்கை வாழ்ந்துவிட்டான் என்று சிலரைப் பார்த்துக் கூறுவார்கள். மற்றும் சிலரைப் பார்த்து இவனைப் போன்று வாழவேண்டும் என்று கூறுவார்கள். எனவே தான் இல்வாழ்க்கை என்பதே அறமாகின்றது. அந்த இல்வாழ்க்கையும் இல்வாழ்க்கையை மேற்கொள்ளாத ஒருவன் பழிப்பதற்கு இடமில்லாமல் அமைந்தால் நல்லது. அதாவது இல்வாழ்க்கையை மேற்கொள்ளாத பிரம்மச்சாரிகளும் துறவிகளும் பழித்துப் பேசத்தக்க இழிநிலையில் ஒருவன் இல்வாழ்க்கை அமையுமானால், அந்த இல்வாழ்க்கையை அறம் என்று கொள்ள முடியாது.

இல்வாழ்க்கையை மேற்கொண்டவர்கள் பொதுவாக, தன் குடும்பம் என்ற அளவில் குறுகிய மனம் படைத்தவர்களாக அமைந்து உறவுகளை வளர்த்துக் கொள்ளாமல் இருந்து விடுவதால் எளிதில் மற்றவர்களின் பழிப்புக்கு ஆளாகின்றார்கள். அப்படிப்பட்ட பழிப்புக்கு இடமில்லாமல் மனித உறவுகளை மதித்து வளர்க்கும் நிலையில் இல்வாழ்க்கை நடத்துவதே அறமாகும் என்பதைக் கீழ்வரும் குறள் சுட்டுகின்றது.

*அறனெனப்பட்டதே யில்வாழ்க்கை யஃதும்*
*பிறன் பழிப்பது இல்லாயின் நன்று* (குறள் - 49)

மனித வாழ்க்கையின் ஆரம்பம் கணவன், மனைவி என்கிற குடும்ப வாழ்வில் ஆரம்பிக்கிறது. அதாவது கணவன் மனைவி என்னும் உறவில் வாழ்க்கை விரிவடைகிறது. எனவே கணவன் உறவு மனைவியின் உறவில் மலர்கிறது. அவனுடைய உயர்வு அவளது பண்பால் வளர்கிறது. காரணம் (ஆவதும் பெண்ணாலே, அழிவதும் பெண்ணாலே) என்ற வழக்கு மொழியைப் போன்று வாழ்வின் எல்லா இன்பதுன்பங்களுக்கும் அடிப்படையாக அமைகின்றனர். அதனால்தான் வள்ளுவர்,

*புகழ் புரிந்த இல்இல்லோர்க்கு இல்லை இகழ்வார்முன்*
*ஏறுபோல் பீடு நடை* (குறள் - 59)

என்கின்றார். அதாவது இல்வாழ்க்கை உறவில் மனைவி குணவதியாக இருக்க வேண்டும். எல்லா உறவுகளையும் அரவணைத்துச் செல்பவளாக இருக்க வேண்டும். அதைத்தான் வள்ளுவர் சுட்டுகின்றார்.

அதாவது புகழத்தக்க சிறந்த காரியங்களைச் செய்வதை இயல்பாகக் கொண்ட மனைவி வாய்க்கப் பெறாதவனுக்குத் தன்னை இகழ்வார் முன் ஏறுபோல் நடக்கும் பீடு நடை இல்லை. அதாவது புகழுக்குரிய மனைவியைப் பெறாதவனுக்குத் தன்னை மதியாத பகைவர்முன் தலைநிமிர்ந்து நடக்கும் ஆண்மை இல்லாது போய்விடும் என்கிறார். பகைவர் முன் தலைநிமிர்ந்து நடக்கும் ஆண்மை இல்லாத ஒருவனைக் கணவனாகப் பெற்றிருத்தல் ஒரு பெண்ணுக்கு மிகப் பெரிய இழிவாகும். எனவே கணவன் மனைவி உறவில் பெண்ணின் பண்பு ஆணையும், ஆணின் செயல் பெண்ணையும் இனம் காட்டும் என்பதையே மேற்கண்ட குறள் வலியுறுத்துகிறது.

கணவன் மனைவி உறவில் விரிவானது மக்கட்பேறு. அந்த மக்கள் நல்வழியில் நடப்பது பெற்றோரின் செயலாலும், வளர்ப்பாலுமாகும். பெற்றோர் காட்டிய நல்வழியில் நடந்து நற்பண்புகளைப் பெற்று ஒரு மகன் வளர்ந்து நற்செயல் செய்வானாகில் அது பெற்றோருக்குப் பெரிய மகிழ்ச்சியைத் தரும். அதிலும் குறிப்பாக, பத்து மாதம் சுமந்து பெற்று வளர்த்து ஆளாக்கிய தாய்க்குப் பெரிய மகிழ்ச்சியை மகன் என்னும் உறவு தரும் என்பதையே கீழ்வரும் குறள் உணர்த்துகிறது.

*ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்*
*சான்றோன் எனக் கேட்ட தாய்* (குறள் - 69)

தன் மகனைச் சான்றோன், பண்பாளன் என்று தான் உணர்ந்து மகிழ்வதை விட மற்றவர்களும் உணர்ந்து சான்றோன் என்று அவனைப் போற்றும் நிலைமையைக் காணும் தாய் உள்ளம் பெரிதும் மகிழ்வது இயல்பு. இதுவே, உறவின் கடமையாகின்றது.

உடலும், உயிரும் இணைந்தால்தான் மனிதன் என்று சுட்டப் படுவான். உடல் மட்டுமே இருந்தால் பிணம் என்றும் உயிர் மட்டுமே இருந்தால் ஆவி என்றும் சுட்டப்படும். எனவே, மனிதன் என்பதே உடலும் உயிரும் இணைந்த உறவாகின்றது. அந்த உறவானது அன்பின் வழியாக இருப்பது அவசியமாகின்றது. அவ்வாறு இல்லையென்றால் வெறும் எலும்பும் தோலும் போர்த்தப்பட்ட உடம்பாகக் கருதப்படுமே ஒழிய மனிதன் என்று சுட்டப்படாது. அதாவது மனித உறவு என்பது உடலும் உயிரும் இணைந்த மனிதன் என்ற உருவம் அன்பு என்று பண்போடு உறவாடும்போது தான் மனித வாழ்க்கை என்பது முழுமையாகிறது.

*அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு*
*என்புதோல் போர்த்த உடம்பு* (குறள் - 80)

விருந்து ஓம்புதல் என்ற ஒப்பற்ற பண்பு மனித உறவுகளை வளர்ப்பதற்காகவே அமைவது தான், தன் குடும்பம் என்பது மற்றவர்களோடு இணைந்தும் மனித உறவு பெருக வேண்டும். அது பண்பின் அடிப்படையில் அமைதல் வேண்டும். அந்தப் பண்புதான் விருந்தோம்பல் என்பது. இது நல் உறவுகளை வளர்க்கப் பெரிதும் பயன்படும். இதைத்தான் வள்ளுவர் கீழ்வரும் குறளில் சுட்டுகின்றார்.

*இருந்தோம்பி இல்வாழ்வது எல்லாம் விருந்து ஓம்பி*
*வேளாண்மை செய்தற் பொருட்டு* (குறள் - 81)

மனித உறவுகள் என்பது எண்ணத்தாலும் சொல்லாலும் செயலாலும் ஒரு மனிதன் சக மனிதனிடம் கொள்ளும் தொடர்பு. அந்தத் தொடர்பின் முக்கியமான முதல் நிலையாக அமைவது இனிமையாகப் பேசிக் கொள்வதும், பணிவோடு நடந்து கொள்வதுமாகும். அத்தகைய பணிவையும் இன்சொல்லையும் உடைய எந்த மனிதராக இருந்தாலும் மற்றவர்கள் அவரைத் தேடிக் கண்டுபிடித்து வந்து உறவு கொள்வார்கள்.

பணிவுடைமையும் இன்சொல்லும் மற்றவரைக் கவர்ந்து தன்பால் ஈர்த்து விருப்பமுட்டும். ஆதலால் அவை மனிதர்க்குச் சிறந்த அணியாக அமைந்து அழகு சேர்த்து, மனித உறவுகளை மகிமையடையச் செய்யும் என்பதையே கீழ்வரும் குறள் சுட்டுகின்றது.

*பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்கு*
*அணியல்ல மற்றுப் பிற* (குறள் - 95)

மனிதர்களிடம் இருக்கவேண்டிய முக்கியப் பண்பு நன்றியுடையவராக இருத்தலாகும். எந்தச் சூழ்நிலையாக இருந்தாலும் ஒருவருக்கொருவர் உதவி செய்து கொள்வது மனிதப் பண்பு. அவ்வாறு பிறர் தமக்குச் செய்த உதவியை மறவாமல் இருப்பது அவசியமானது. அதைத்தான் நன்றி மறவாமை என்கிறார் வள்ளுவர். மனிதன் ஒரு தவறைச் செய்துவிட்டுப் பிறகு உணர்ந்தால் அதிலிருந்து அவனுக்கு உய்வு கிடைக்கும். ஆனால் ஒருவர் செய்த நன்றியை மறந்துவிட்டவருக்கு உய்வே இல்லை என்பதைக் கீழ்வரும் குறள் வழி வள்ளுவர் எச்சரிக்கின்றார்.

*எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை*
*செய்ந்நன்றி கொன்ற மகற்கு* (குறள் - 110)

அதாவது பிற நன்றிகளில் எந்த நன்றியைச் சிதைத்தாலும் ஒருவன் உய்யலாம். ஆனால் செய்ந்நன்றியைச் சிதைத்த ஒருவன் உய்ய முடியாது. ஒருவர் செய்த நன்மையின் பயனைப் பெற்றவனிடம் அந்த நன்மையைப் பற்றிய பசுமையான நினைவும் நன்மை செய்தாரிடம் அன்பு பாராட்டும் ஈர உணர்வும் இருக்க வேண்டும். அந்த ஈர உணர்வே நன்றி என்று வள்ளுவர் சுட்டுகின்றார். வாழ்விற்குச் செய்ந்நன்றி உணர்வு மிக இன்றியமையாதது என்பதையே வள்ளுவர் எடுத்துரைக்கின்றார். மனித உறவில் இந்த நன்றி உணர்வு இன்றியமையாதது. நன்றி மறந்தவன் உறவுகளை இழப்பது உறுதி.

ஒருவனுடைய நெஞ்சம் நடுநிலையிலிருந்து விலகித் தீமை செய்ய நினைக்குமானால் அவனுக்குப் பின்னால் கேடுவர இருக்கிறது என்பதை அவன் முன்கூட்டியே உணர்ந்து கொள்ள வேண்டும். அதாவது எதிர்காலத்தில் வர இருக்கும் கேட்டுக்கு அவன் மனம் வழி அமைக்கிறது என்று பொருள். இதனை உணர்ந்தவன் நினைப்பாலும் நடுநிலைமை தவற மாட்டான். அவ்வாறு நினைத்து நடுநிலைமையில் வாழ்பவனை நல்லோர் அனைவரும் விரும்புவர். இதனைத்தான் கீழ்வரும் குறள் வழி வள்ளுவர் சுட்டுகின்றார்.

*கெடுவல்யான் என்பது அறிக தன்நெஞ்சம்*
*நடுவொரீஇ அல்ல செயின்* (குறள் - 116)

குடும்ப உறவுகளாக இருந்தாலும் சமுதாய உறவுகளாக இருந்தாலும் மனிதர்களால் விரும்பப்படுவது மென்மையான வார்த்தைகளாகும். வன்மையாகப் பேசுபவர்களை மனிதர்கள் மட்டுமல்ல விலங்குகள் கூட விரும்புவதில்லை. மனிதர்களுடைய மொழி புரியாத தன்மையுள்ள விலங்குகளும் பறவைகளும் கூட மென்மையான வார்த்தைகளைக் கேட்டு, அம்மனிதர்களைச் சுற்றி வந்து, உறவாடுவதை வழக்கத்தில் நாம் கண்டிருக்கிறோம். அஃறிணை உயிரினங்களுக்கே இப்படி என்றால் உயர்திணை மனிதர்கள் மென்மையாகப் பேச வேண்டியது மிகவும் அவசியமானதல்லவா! எனவே மனித உறவுகளின் ஆழம் மொழியில் அமைந்துள்ளது. அதனால்தான் வள்ளுவர் கீழ்வரும் குறள் வழி எச்சரிக்கை செய்கிறார்.

*தீயினால் சுட்டபுண் உள்ஆறும் ஆறாதே*
*நாவினால் சுட்ட வடு* (குறள் - 129)

அதாவது ஒருவன் தீயினால் சுட்டதனால் உண்டான புண் தானாகவே ஆறிவிடும். ஆனால் கொடிய சொற்களின் மூலம் ஒருவன் நாவினால் வார்த்தைகளால் சுட்டதனால் உண்டான வடு ஆறாது. உடம்பில் ஏற்பட்ட புண் இயற்கையாகக் காலப்போக்கில் ஆறிவிடும். ஆனால் உள்ளத்தில் ஏற்பட்ட வடு பெரிதாகித் தீராத துன்பத்தை ஏற்படுத்திவிடும். அவ்வாறிருக்க மனிதர்கள் ஒருவரோடு ஒருவர் பேசும்போது எவ்வளவு எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்பதை வள்ளுவர் வலியுறுத்து கின்றார்.

நல்ல நண்பர்களைப் பெறுவதும் நல்ல உறவினர்களைப் பெறுவதும் மனித வாழ்வின் பேறுகளாக உள்ளன. சொல்லாலும் செயலாலும் வாழ்வில் ஒழுங்கைப் பின்பற்றுகிறவர்கள் நிச்சயமாக நல்ல உறவுகளை வளர்த்துக் கொள்ள முடியும். நாம் சேர்ந்திருப்போரை வைத்தே நம்முடைய தன்மையை உலகத்தார் கணித்து விடுவார்கள். எனவே, நன்மையை நாடுபவர்கள் எப்பொழுதும் நல்ஒழுக்கத்தையே நாடுவார்கள். பார்ப்பதற்குத் தீ ஒழுக்கம் உடையவர்கள் நன்மையைப் பெறுவதுபோல் இருந்தாலும் நிச்சயமாக அவர்களை, அவர்களின் தீயொழுக்கம் மாற்ற முடியாத துன்பத்தில் கொண்டு போய்ச் சேர்த்துவிடும். நல்ல மனிதர்களின் உறவை இழக்கச் செய்யும். ஒரு சூழலில் தமக்கு உதவுவார் எவருமின்றித் தவிக்க வைத்துவிடும். இதைத்தான் வள்ளுவர் கீழ்வரும் குறள் வழியே சுட்டுகின்றார்.

*நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம்*
*என்றும் இடும்பை தரும்* (குறள் - 138)

தனக்கு உரிமையில்லாத எந்த ஒன்றின் மீதும் வெறிகொண்டு உறவுகொள்வானை இந்த உலகம் வெறுத்து ஒதுக்கும். அதுமட்டுமன்றிப் பகை, பாவம், அச்சம், பழி ஆகிய இந்நான்கும் எப்பொழுதும் நீங்காது. 'எல்லை மீறிய செயலால் பகையும், கேடு செய்தலால் பாவமும், மறைந்து ஒழுகுதலால் ஆக்கமும் குற்றம் வெளிப்படுங்கால் பழியும் வரும்' என்கிறார் வள்ளுவர். இதனைக் குறிப்பாகப் பிறனுக்குரிய பெண்ணிடம் மோகம்

கொண்டு பழகுபவனுக்காக எடுத்துரைக்கின்றார். இந்தத் தகாத உறவால் வரும் விளைவுகளைக் கூறிக் கீழ்வரும் குறள் வழி எச்சரிக்கின்றார்.

*பகை பாவம் அச்சம் பழி என நான்கும்*
*இகவாவாம் இல்லிறப்பான் கண்* (குறள் - 146)

தமக்குத் தீமை செய்த ஒருவனைப் பொறுத்துக் கொள்ளாமல் பதிலுக்குப் பதில் செயல் செய்பவர்களுக்கு ஒரு நாளைய இன்பமே கிடைக்கும். ஆனாப் தமக்குத் தீமை செய்த ஒருவர்க்குத் தாமும் தீமை செய்யாமல் பொறுத்துக் கொண்டவர்க்கு அழியாத புகழ் கிடைக்கும். அத்துடன் உலக மக்கள் தீமைகள் வளர்வதை விரும்புவதில்லை. தீமைகள் நேரும்போது கூட அதைப் பொறுத்துக் கொண்டு தீமைகளையும் நன்மையாக மாற்றுவதையே விரும்புவர். எனவே கண்ணுக்குக்கண் என்பதுபோலத் தீமைக்குத்தீமை என்று செய்யாமல் பொறுத்துக் கொள்பவர்களை இந்த உலக மக்கள் நாடிச் செல்வார்கள். வாயார, நெஞ்சாரப் புகழ்வார்கள். இக்கருத்தைக் கீழ்வரும் குறள் வழி வள்ளுவர் அறிவுறுத்துகிறார்.

*ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் பொறுத்தார்க்கு*
*பொன்றும் துணையும் புகழ்* (குறள் - 156)

சில வேளைகளில் தீயவழியில் சென்று தீமைகளையே செய்பவன் வாழ்வில் எல்லாவிதமான நன்மைகளையும் பெற்று வாழ்வதையும், நல்வழியில் சென்று நன்மைகளையே செய்கிற ஒருவன் தீமைகளையே பெற்று வாழ்வதையும் அன்றாட வாழ்க்கையில் நம்மால் பார்க்க முடிகின்றது. இதைப் பார்க்கிறபோது நல்லவர்களுக்கு மனதில் எரிச்சலும் ஆதங்கமும் ஏன் பொறாமையும் கூட ஏற்படுவதுண்டு. இறைவன் மீதே கோபம்கூட வருவதுண்டு. ஆனால் இது உண்மையல்ல. வழக்கத்தில் ‘பத்து வருடம் வாழ்ந்தவனுமில்லை; பத்து வருடம் கெட்டவனும் இல்லை’ என்பார்கள். அதைப்போல நிலை மாறுவது என்பது இயற்கையானது. நிச்சயமாகத் தீயவன் அதற்கான பலனைப் பெறுவதும் நல்லவன் அதற்கான பயனைப் பெறுவதும் உறுதி. அது எப்போது நிகழும் என்றால் கண் இமைக்கிற நேரத்தில் நடந்துவிடும். அது எப்போது என்பதைக் கடவுள் மட்டுமே தீர்மானிக்கக் கூடியவர். இதைத்தான் வள்ளுவர் கீழ்வரும் குறளில் உணர்த்துகின்றார்.

*அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்*
*கேடும் நினைக்கப் படும்* (குறள் - 169)

அதாவது அழுக்காறு மிகுந்த நெஞ்சத்தினையுடைய ஒருவன் எய்துகின்ற ஆக்கமும் செம்மையான உள்ளத்தினை உடைய ஒருவன் எய்துகின்ற கேடும் நினைக்கிற மாத்திரத்தில் அழிந்து நிலைமாறிப் போகும். அவை நிலையானவை அல்ல. எனவே இடம் மாறி எய்துகின்ற ஆக்கத்துக்காக ஒருவன் அழுக்காறு கொள்ளவும் வேண்டாம். பிழையாக எய்துகிற கேடுகளை எண்ணி ஒருவன் அஞ்சவும் வேண்டாம் என்று எச்சரிக்கின்றார். அது மட்டுமன்றி இத்தகைய தெளிவான சிந்தனை ஏற்படுகிறபோதுதான் உறவுகளில் தெளிவு ஏற்படும் என்பதையும் உணர்த்துகின்றார்.

மனித வாழ்க்கை என்பது மகிழ்ச்சிக்குரியது. அதே வேளையில் அதனைத் துன்பமாக மாற்றிக் கொள்ளத்தக்க பண்பு மனிதனிடம் வந்துவிட்டால் அது அவனைத் தீராத துன்பத்தில் கொண்டு போய் விட்டுவிடும். அந்தக் கருத்தைத்தான் கீழ்வரும் குறளில் வள்ளுவர் மிகவும் கோபமாகக் கூறுகின்றார்.

*புறங்கூறிப் பொய்த்து உயிர் வாழ்தலின் சாதல்*
*அறங்கூறும் ஆக்கம் தரும்* (குறள் - 183)

அதாவது சில மனிதர்கள் மற்றவர்களைப் புறங்கூறுதலையே தொழிலாகக் கொண்டு பொய் பேசி உயிர் வாழ்கின்றனர். அவ்வாறு வாழ்வதைவிட இறந்துபோவது மேல் என்கிறார். இறந்து போவானானால் அது அவனுக்கு ஏதாவது ஒருவகையில் ஆக்கத்தைக் கொடுக்கும். புறம் பேசியும் பொய் பேசியும் உயிர் வாழ்தலால் அவனுக்கு மேலும் மேலும் தீமைகளே விளையும். அதனால்தான் சாதலால் நன்மை உண்டு என்கிறார். நிறைகளைப் பார்க்காமல் குறைகளைப் பார்ப்பது மனிதப் பண்பல்ல. அத்துடன் ஒரு சிலர் ஒருவரை நேரில் பார்க்கும்போது இனிக்க இனிக்கப் பேசிவிட்டு, அவர் தலை மறைந்தவுடன் அவரைப் பற்றிப் புறங்கூறி இழிவாகப் பேசுவதை நடைமுறையில் நாம் காண்கிறோம். இத்தகைய பண்புடையவர்களை எவரும் மதிக்க மாட்டார். மாறாக அருவருப்பாகவே பார்ப்பர். எனவே நல்லுறவுகளை வளர்த்துக் கொள்ள வேண்டுமானால் புறம் கூறும்

இழிபண்பை விட்டுவிடுதல் அவசியம் என்பதையே இக்குறள் வழி வள்ளுவர் உணர்த்துகிறார்.

ஒரு சிலர் பிறரிடம் உள்ள நல்லனவற்றை நோக்காமல் துருவித் துருவித் தேடிக் குற்றங்களையே காண்பர். அத்தகையோர் தன்னிடம் உள்ள குற்றத்தையும் காணவல்லவராயின் இந்த உலகில் நிலை பெற்றுள்ள உயிர்களுக்குத் தீமை வராது என்பதைக் கீழ்வரும் குறளில் வள்ளுவர் சுட்டுகின்றார்.

*ஏதிலார் குற்றம்போல் தம்குற்றம் காண்கிற்பின்*
*தீதுண்டோ மன்னும் உயிர்க்கு* (குறள் - 190)

அதாவது பிறரிடமுள்ள குற்றங்களைத் தேடித்தேடி எடுத்துக் கூறும் இழிபண்பினர் தம்மிடம் உள்ள புறங்கூறலாகிய குற்றத்தைக் காண்பாராயின் பிறகு அவர்களால் இந்த உலக உயிர்களுக்கு எந்தத் தீமையும் வராது என்பதை வலியுறுத்துகிறார்.

ஒரு சிலர் இந்த உலகில் மற்றவர்களுக்குத் தீமை செய்வதையே தொழிலாகக் கொண்டு செய்து வருகின்றனர். அத்தகையோருக்குத் திருவள்ளுவர் கீழ்வரும் குறள் வழி எச்சரிக்கின்றார்.

*தீயவை தீய பயத்தலான் தீயவை*
*தீயினும் அஞ்சப் படும்* (குறள் - 202)

ஒருவன் மற்றவனுக்குத் தீமை செய்தால் அவனுக்கு அத்தீமை கட்டாயம் திரும்ப வரும். எனவே தீமை செய்வதைத் தீயினைவிட அஞ்சத்தக்க பொருளாகக் கொள்ள வேண்டும் என்பதை உணர்த்துகின்றார். தீயினுள் இறங்குபவனை அந்தத் தீயே சுட்டெரித்துவிடும். அதைப்போலப் பிறருக்கு தீமை செய்தல் என்னும் தீயுள் இறங்குபவன் நிச்சயம் அழிவான் என்று எச்சரிக்கின்றார்.

இந்த உலகத்தில் ஒருவருக்கொருவர் உதவி செய்து கொள்ளுதல் நல்லது. அவ்வாறு உதவி செய்து கொள்ளும்போது எந்தவிதமான எதிர்பார்ப்புமின்றி ஒப்புரவுடன், மன ஒற்றுமையுடன் அவ்வாறு செய்ய வேண்டியது நமது கடமை என்ற உணர்வில் செய்கிறபோது அந்த ஒற்றுமை

உணர்வைவிட இந்த உலகத்திலும் விண் உலகத்திலும் உயர்ந்தது எதுவுமில்லை. அதுவே மனித உறவுகளை உயர்வடையச் செய்யும் என்பதைக் கீழ்வரும் குறள்வழியே சுட்டுகின்றார்.

*புத்தேள் உலகத்தும் ஈண்டும் பெறல்அரிதே*
*ஒப்புரவின் நல்ல பிற* (குறள் - 213)

இந்த உலகில் எத்துணை வலியவராக இருந்தாலும் அவரை வெல்லவும் இன்னொருவர் தோன்றுவது இயல்பு. வல்லவனுக்கு வல்லவன் வையகத்தில் உண்டு என்பார்கள். எனவே தன்னைவிட ஒருவர் மெலியார் என்று நினைத்து அவருடன் மோதும்போது, நம்மை விடவும் வலியவர் நம்மை வெல்ல வருவார்கள் என்ற உணர்வினை வலியார் நினைக்க வேண்டும். அவ்வாறு நினைத்துப் பார்த்தால் அவன் மெலியாரைத் துன்புறுத்துவதை விட்டுவிடுவான். ஒருவரையொருவர் துன்புறுத்தி உயர வேண்டும் என்று நினைக்காமல் ஒருவரோடு ஒருவர் ஒற்றுமையாய் இருந்து வாழ்வதே சிறந்த வாழ்க்கை என்பதைக் கீழ்வரும் குறளில் எடுத்துரைக்கின்றார்.

*வலியார் முன் தன்னை நினைக்கதான் தன்னின்*
*மெலியார் மேல்செல்லு மிடத்து* (குறள் - 250)

இன்றைய காலக்கட்டத்தில் தன் குடும்பத்தை அழித்து, தன்னையும் அழித்துக் கொள்ளும் பொறுமையற்றவர்கள் பெருகிவிட்டார்கள். எல்லாக் காலத்திலும் ஒரு மனிதனை அழிக்கக் கூடிய கொலைக் கருவிகளாக விளங்குவது பொறாமையும் கோபமும் ஆகும். இரண்டும் ஒன்றையொன்று தழுவி நிற்பன. இரண்டுமே ஆபத்தானவை; மனித உறவுகளை மாய்க்க வல்லவை. ஒரு மனிதன் தன்னை அழிவிலிருந்து காத்துக்கொள்ள விரும்பினால் கோபத்தை அடக்கப் பழகிக் கொள்ள வேண்டும். இல்லையெனில் அவன் கொள்ளும் கோபம் அவனையே அழித்துவிடும் என்று எச்சரிக்கை செய்யும் வள்ளுவர் கூடவே அவனது கோபம் அவனோடு சேர்ந்து அவன் உறவுகளையும் அழித்து விடும் என்கிறார்.

இன்றைய தினத்தில் நன்றாகப் படித்துப் பட்டம் பெற்றுப் பெரிய பதவிகளை வகித்து மகிழ்ச்சியாக வாழ்க்கை நடத்துபவர்கள் கூடத் தமது கோபத்தால் தம் குடும்பத்தையே கொலை செய்வதோடு, தாமும்

தற்கொலை செய்து கொள்வதை அதிகமாகக் காண்கிறோம். கோபம் என்னும் கொலைக்கருவியால் மனித உறவுகள் மாய்க்கப்படுவதை அறிகிறோம். வருத்தத்திற்குரிய இந்தக் கோரச் சம்பவங்கள் நிகழாமல் இருக்க நாம் நம்மை அடக்கத் தெரிய வேண்டும். கோபம் மனிதர்களாகப் பிறந்த அனைவருக்கும் வருவது இயல்பு. ஆனால் அதனைத் தன்னுள் அடக்கி, தனது செயலை வேறு வழியில் திருப்பப் பழகிக் கொள்ளுதல் அவசியம் என்பதைத்தான் கீழ்வரும் குறள்வழி வள்ளுவர் உணர்த்துகின்றார்.

*சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனமென்னும்*
*ஏமப் புணையைச் சுடும்* (குறள் - 306)

எவர் ஒருவராக இருந்தாலும் அவரவர் செய்கின்ற செயல்களுக்குப் பதில் கிடைத்தே தீரும். அதைத்தான் வள்ளுவர் முற்பகல் செய்தால் அதன் பலன் கேட்காமலேயே பிற்பகலில் தானே வரும் என்றுரைக்கின்றார். எனவே என்னதான் துன்பம் வந்தாலும் உயிரே போவதாக இருந்தாலும் இன்னொரு உயிரைப் போக்கக்கூடிய செயலை ஒருவன் செய்தல் கூடாது. அவ்வாறு செய்வது மனித உறவையே மாய்ப்பதாகும். எனவே, உயிரைப் போக்கும் கொலைத் தொழிலை எவரும் செய்ய வேண்டாம் எனக் கீழ்வரும் குறளில் அறிவுறுத்துகிறார்.

*தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான் பிறிது*
*இன்னுயிர் நீக்கும் வினை* (குறள் - 327)

இந்த உலகில் பிறந்த மக்கள் என்றாவது ஒருநாள் இறப்பது உறுதி. அதனை உணர்ந்து ஒருவரோடு ஒருவர் சமாதானத்துடன் நல்லுறவை வளர்த்துக் கொண்டு வாழ நினைக்க வேண்டும் என்பதை உரைக்கும் வள்ளுவர் என்னதான் பொன்னும் பொருளும் வைத்திருந்தாலும் படைத்தவன் நினைத்தால் மட்டுமே அதனை அனுபவிக்க இயலும் என்கிறார்.

*வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி*
*தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது* (குறள் - 377)

அதாவது மனித சிந்தனைக்கு அப்பாற்பட்ட எத்தனையோ செயல்கள் நடக்கின்றன. வசதிபடைத்தவர்கள் அனுபவிக்க முடியாமல் தவிப்பதையும் நிம்மதியற்று இருப்பதையும் நடைமுறையில் காண்கிறோம். அத்துடன்

மற்றவர்களுடன் உறவாடினால் பொருள் இழப்பு ஏற்பட்டுவிடும் என்று கருதிப் பொருள் சேர்ப்பதையே நோக்கமாகக் கொண்டு அதனைச் சேர்த்த பிறகு அனுபவிக்காமலேயே மறைந்துவிடுபவர்கள் நிறைய உண்டு. அதனால்தான் வள்ளுவர் முதலில் மனிதர்களை மதிக்கவும் பகிர்ந்துண்டு வாழவும் பழகிக் கொள்ளுதல் அவசியம் என்பதை உணர்த்துகின்றார்.

மனித உறவுகளில் மாசுபடாமல் நல்வாழ்க்கை வாழ விரும்பும் எவரும் முதலில் தம்முடைய குற்றத்தை நீக்கிவிட்டுப் பிறகே பிறருடைய குற்றத்தைப் பார்க்க வேண்டும். இந்தப் பண்பு நிறைகுணம் உள்ளவனாக ஒருவனை மாற்றும். அப்போது அவனை மனித உறவுகள் விரும்புவதோடு அவன் செயல் பலருக்கும் பயனுள்ளதாக அமையும் என்பதைக் கீழ்வரும் குறள்வழியே சுட்டுகின்றார்.

*தன் குற்றம் நீக்கிப் பிறர் குற்றம் காண்கிற்பின்*
*என் குற்றம் ஆகும் இறைக்கு ?* (குறள் - 436)

தம் குற்றத்தை முதலில் களைந்து பிறகு பிறருடைய குற்றத்தைக் காண்பதும், ஒரு மனிதனிடம் உள்ள குற்றத்தையே பார்த்துக் கொண்டிராமல் குணத்தையும் பார்த்து அவற்றுள் எது மிகையாக உள்ளதோ அதையே முடிவாக எடுத்துக் கொள்ளப் பழக வேண்டும். அப்போதுதான் மனிதர்கள் கூடி வாழும் வாழ்க்கை இனிதாக அமையும். இதைத்தான் கீழ்வரும் குறள் உரைக்கின்றது.

*குணம் நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்*
*மிகைநாடி மிக்க கொளல்* (குறள் - 504)

ஒருவன் எவ்வளவுதான் செல்வம் பெற்றிருந்தாலும் எவ்வளவுதான் படித்திருந்தாலும், எவ்வளவு பெரிய பதவியை வகித்தாலும் அவனுடைய வாழ்க்கை சுற்றத்தாரிடம் நல்லுறவுகள் வைத்துக் கொள்ளவில்லை என்றால் அது பயனற்றதாகி விடும். மேற்கூறிய அனைத்தையும் பெற்றிருப்பதனால் வரும் பயன் எதுவென்றால் அவன் சுற்றம் அவனோடு சூழ்ந்து நிற்றலே ஆகும். சுற்றத்தைப் புறம் தள்ளுபவன் எந்தப் பேறு பெற்றிருந்தாலும், அதனால் எந்தப் பயனும் விளையாது என்பதைக் கீழ்வரும் குறள் உணர்த்துகிறது.

*சுற்றத்தால் சுற்றப்பட ஒழுகல் செல்வந்தான்*
*பெற்றத்தால் பெற்ற பயன்* (குறள் - 524)

மனித உறவுகளை மதித்துத் தம்மால் மற்றவர்களுக்குத் துன்பம் வராமல் பார்த்துக் கொள்வதே நல்ல வாழ்க்கை முறையாகும். அவ்வாறின்றிப் பிறருடைய துன்பத்திற்குத் தான் காரணமாகிவிட்டால், அந்தத் துன்பத்தை அனுபவித்து அதனால் அவர்கள் விடுகின்ற கண்ணீர், துன்பத்திற்குக் காரணமானவர்களிடம் உள்ள எல்லா நிறைகளையும் அழித்து விடும் எனக் கீழ்வரும் குறள் எச்சரிக்கின்றது.

*அல்லற்பட்டு ஆற்றாது அழுத கண்ணீரன்றே*
*செல்வத்தைத் தேய்க்கும் படை* (குறள் - 555)

தமக்குக் கீழ்ப் பணி செய்பவராக இருந்தாலும், தமது குடும்பத்தில் தமது ஆளுகையின் கீழ் உள்ளவர்களாக இருந்தாலும் அவர்கள் தவறு செய்தால் அதை மென்மையாகச் சுட்டிக்காட்டி, இனி அவர்கள் அந்தத் தவறைச் செய்யாமல் இருக்க உரிய தண்டனையை வழங்கினால் உறவுகளில் பிளவுகள் வராமல் இருக்கும். அதாவது நீண்ட காலம் ஆக்கமும் சுற்றமும் தம்மைவிட்டு நீங்காமல் இருக்க வேண்டும் என்று விரும்புகின்ற ஒருவர் தண்டிக்கும் பொழுது வெளிப்படையாக மிகக் கடுமையாகத் தண்டிக்கிறவர் போல நடந்து கொண்டு உண்மையாகத் தண்டனை உரியவரைச் சென்று சேருமிடத்து மென்மையாக அவரைத் தண்டிக்க வேண்டும். எவர் ஒருவரும் அவ்வாறு நடந்து கொள்ளும்போது மற்றவர்களுக்கு அவர்மீது தனிப்பட்ட பற்றும் பாசமும் ஏற்படும். இக்கருத்தைக் கீழ்வரும் குறளில் வள்ளுவர் உணர்த்துகின்றார்.

*கடிது ஓச்சி மெல்ல எறிக நெடிது ஆக்கம்*
*நீங்காமை வேண்டு பவர்* (குறள் - 562)

மனித உறவுகளில் முக்கியமானது சகிப்புத்தன்மை. பிறர் நம்மை இழிவாகப் பேசினாலும் விரும்பத்தகாத ஒன்றைச் செய்தாலும் சகித்துக் கொண்டு அவரை நல்வழியில் திருத்த முயற்சி செய்ய வேண்டும். அப்போதுதான் பழகிய பழக்கம் நீடிக்கும். உறவுகள் நிலைபெறும். இதைத்தான் வள்ளுவர் நாகரிகம் என்கிறார். தன்னோடு பழகிய ஒருவர்

நஞ்சினைக் கலந்து உணவைக் கொடுத்தாலும்கூட மகிழ்ச்சியோடு அதை வாங்கி உண்டு மன அமைதியோடு இருப்பவர்களே விரும்பத்தக்க நாகரிகம் உடையவர் ஆவர். நஞ்சு கலந்த இந்த உணவு எனக்கு வேண்டாம் என்று மறுக்கமாட்டார்கள். சகிப்புத்தன்மையோடு பழகுகிறபோதுதான் உறவுகள் நிலைத்திருக்கும். நன்கு பழகிய ஒருவர், ஏதேனும் ஒரு தவறைச் செய்துவிட்டால் அவரை வெறுத்து ஒதுக்கிவிடுதல் கூடாது. அவ்வாறு செய்தால் உறவுகளிடையே விரிசல் வந்துவிடும். எனவே பொறுமை என்னும் சகிப்புத்தன்மையுடன் பழகுதல் வேண்டும் என்பதைக் கீழ்வரும் குறள் வழி வள்ளுவர் விளக்குகிறார்.

*பெயக்கண்டு நஞ்சுண்டு அமைவர் நயத்தக்க*
*நாகரிகம் வேண்டு பவர்* (குறள் - 580)

வயதில் மூத்தவரிடம் பழகினாலும் வயதில் இளையவரிடம் பழகினாலும் அவரின் செயலை வைத்தே அவரை மதிப்பிட வேண்டும். ஒரு சிலர் வயதையும் ஆண்பலம், பணபலத்தையும் பெரிதாக நினைத்து அவரிடம் உறவு கொள்ள விரும்புவார்கள். பழகுவார்கள். இறுதியிலே அவரின் செயலைக் கண்டு வருந்துவார்கள். அதே போன்று மற்றும் சிலர் ஆண்பலத்திலும் பணபலத்திலும் குறைந்தவர் என்று நினைத்து அவரின் உறவைத் தவிர்ப்பார்கள். அவரின் செயலைக்கண்டு காலங்கடந்து அய்யோ இவரைத் தவிர்த்தோமே! என்று வருந்துவார்கள். இந்த இரண்டு போக்கும் விரும்பத்தக்கன அல்ல. ஒருவரின் செயலை வைத்தே அவரை மதிக்க வேண்டும். உருவை வைத்து மதித்தல் கூடாது. அது மனித உறவிற்கு ஏற்றதல்ல என்பதைக் கீழ்வரும் குறள் சுட்டுகின்றது.

*உருவுகண்டு எள்ளாமை வேண்டும் உருள் பெருந்தேர்க்கு*
*அச்சாணி அன்னார் உடைத்து* (குறள் - 667)

ஒருவரோடு எவ்வளவுதான் பலகாலம் பழகினாலும் அவரின் தகுதியையும் தன் தகுதியையும் நினைத்தே சில காரியங்களைச் செய்தல் வேண்டும். அதாவது நீண்ட நாள் பழகிய ஒருவர் மிகப் பெரிய பதவியை அடைகின்றபோது, அவரிடத்தில் அளவாகதான் உரிமை கொண்டாட வேண்டும். மாறாக எனக்கு அவரை நீண்ட நாளாகத் தெரியும் என்ற

எண்ணத்தில் தமக்கு மீறிய செயலைச் செய்தால், அது இருவருக்கும் கேடு விளைவிக்கும். அத்துடன் உடனிருக்கும் பிறருக்கும் தீமையைக் கொடுத்துவிடும். எனவே உறவு என்பது பார்த்துப் பார்த்துப் பழக வேண்டிய ஒன்று என்பதைத்தான் கீழ்வரும் குறளில் வள்ளுவர் உணர்த்துகிறார்.

*பழையம் எனக்கருதிப் பண்புஅல்ல செய்யும்*
*கெழுதகைமை கேடு தரும்* (குறள் - 700)

எவ்வளவுதான் படித்திருந்தாலும் பேசுகின்ற பேச்சு மிகத் தெளிவாக இருத்தல் வேண்டும். இல்லையென்றால் அவர்கள் படித்த படிப்பிற்கே பொருளின்றிப் போய்விடும். அவைக் களத்துக்கு அஞ்சித்தான் கற்றதைத் தெளிவாக எடுத்துச் சொல்ல மாட்டாதார் உயிரோடு இருக்கிறார் எனினும் இல்லாதவராகவே கருதப்படுவர் என்ற கருத்தைக் கீழ்வரும் குறள்வழியே சுட்டுகின்றார்.

*உளர் எனினும் இல்லாரொடு ஒப்பர் களன்அஞ்சிக்*
*கற்ற செலச் சொல்லா தார்* (குறள் - 730)

அதாவது பலர் கூடியிருக்கும் அவையாக இருந்தாலும் தன் கருத்தைக் கூறுவதற்கு அஞ்சுதல் கூடாது. அப்போதுதான் அவன் படித்ததிலும் உயிரோடு வாழ்வதிலும் பொருள் இருக்கும் எனக் காரியம் சாதிப்பதற்காக, தமது கருத்தைத் தெரிவிக்காமல் அஞ்சுவோரைக் கண்டு வள்ளுவர் கோபப்படுகிறார்.

உறவுகளில் மிகச்சிறந்த உறவாகச் சான்றோர் கூறும் நட்புறவு பல நிலைகளில் நிகழ்கிறது. இரத்த உறவுகளாகவும் இரத்த உறவுகள் இல்லாமலும் ஆகிய இருநிலைகளில் நட்புறவு ஏற்பட்டு வளர்கிறது. எதுவாக இருந்தாலும் நட்பு என்பது ஒரு நல்லுறவாகும். அந்த நட்பில் பழகும்போது ஒன்றாக இணைந்து நன்மைகளை அடைவது மட்டும் நோக்கமாக இருத்தல் கூடாது. தன்னொடு பழகிய ஒருவன் ஏதோ ஒரு காரணத்தால் தவறான வழியில் போகிறபோது அவனுடைய தவறைச் சுட்டிக்காட்டி அவனை உணர வைத்து நல்வழியில் கொண்டு வரவேண்டும். அதுதான் உண்மையான நட்புறவாகும் என்பதைக் கீழ்வரும் குறள்வழியே திருவள்ளுவர் வலியுறுத்துகின்றார்.

*நகுதல் பொருட்டுஅன்று நட்டல் மிகுதிக்கண்*
*மேற்சென்று இடித்தற் பொருட்டு* (குறள் - 784)

இந்த மண்ணுலகில் மனிதராகப் பிறந்த எவர் ஒருவரும் சொல்லுக்கும் செயலுக்கும் தொடர்புள்ள வகையில் வாழ வேண்டும். அவ்வாறு இல்லாமல் பேச்சும் செயலும் ஒன்றுபடாமல் இரண்டையும் வேறுவேறாக்கி வாழ்பவரது உறவு கனவில்கூடத் தீமையை விளைவித்துத் துன்பத்தைத்தரும். அத்தகைய உறவை அடியோடு நீக்கி, ஒதுங்கி விடுதல் நல்லது என்பதைக் கீழ்வரும் குறளில் எச்சரிக்கின்றார்.

*கனவினும் இன்னாது மன்னோ வினைவேறு*
*சொல்வேறு பட்டார் தொடர்பு* (குறள் - 819)

ஒருசிலர் முகத்திற்கு நேராக இனிக்க இனிக்கப் பேசுவார்கள். ஆனால் மனத்தில் வஞ்சனையோடு இருப்பார்கள். இப்படிப்பட்டவர்களை எளிதில் இனம் காண்பது அரிது. ஆனால் எதாவது ஒரு சூழலில் அவர்களின் உண்மை நிலை வெளிப்பட்டுவிடும். அதன் பிறகு அவர்களை முழுதாக நம்பாமல் நலம் விசாரிக்கும் அளவில் அவர்களிடம் உறவை வைத்துக் கொள்ளுதல் நல்லது என்பதைத்தான் கீழ்வரும் குறள் சுட்டுகிறது.

*முகத்தின் இனியநகாஅ அகத்தின்னா*
*வஞ்சரை அஞ்சப் படும்* (குறள் - 824)

என்னதான் பழகி இருந்தாலும் ஒருவரின் முகத்தையும் சொல்லையும் செயலையும் வைத்து அவரின் தன்மையையும் துன்பத்தையும் தெரிந்து கொள்ளலாம். அவ்வாறு தெரிந்து கொள்ளாதவரிடத்துத் தன்னுடைய துன்பத்தை எடுத்துக் கூறுவதால் எந்தப் பலனும் இராது. எனவே உறவுகளை முழுக்க முழுக்க நம்பி அளவுக்கதிகமான நம்பிக்கையுடன் எல்லாத் துன்பத்தையும் எடுத்துரைத்தல் நல்லுறவிற்கு வழிவகுக்காது என்பதைக் கீழ்வரும் குறள் சுட்டுகின்றது. அதாவது தானே அறியாதவர்கள் எடுத்துக் கூறினாலும் உணர மாட்டார்கள் என்பதை உரைக்கிறது.

*நோவற்க நொந்தது அறியார்க்கு மேவற்க*
*மென்மை பகைவ ரகத்து* (குறள் - 877)

சில நேரங்களில் நல்லவர்களையும் அல்லவர்களையும் இனம் காண்பது கடினமாகி விடுகிறது. பார்ப்பதற்கு நடை, உடை பாவனையில் நல்ல மனிதர்களைப் போன்றே இருப்பார்கள். அதைக்கண்டு ஏமாந்து அவரோடு பழகினால் நம்மையும் தீயவழிக்கு அழைத்துச் சென்றுவிடுவர். எனவே தோற்றத்தைக் கண்டு மயங்காமல் அவரின் செயல்பாடுகளை உற்று நோக்கிப் பழகுதல் நல்லது என்பதைச் சுட்டுகின்ற வள்ளுவர் உறவிற்கு எச்சரிக்கையும் விடுக்கின்றார்.

*மக்களே போல்வர் கயவர் அவரன்ன*
*ஒப்பாரியாம் கண்டது இல்* (குறள் - 1071)

அதாவது எல்லாவிதமான நற்பண்புகளும் உடையவர்கள் சான்றோர் என்றும் எல்லாவிதமான தீயபண்புகளும் உடையவர்கள் கயவர் என்றும் இந்த உலக மக்கள் சுட்டுவார்கள். அந்நிலையில் கயவரை இந்த உலக மக்கள் கண்டு அஞ்சுதல் உறவிற்கு எச்சரிக்கையாகவும் சான்றோரைக் கண்டு விரும்பிப் பழகுதல் உறவிற்கு அடித்தளம் என்பதையும் வள்ளுவர் உணர்த்துகின்றார்.

எக்காலத்து எவ்விடத்து மனிதர்களுக்கும் உரிய வாழ்க்கை நிலைகளை வகுத்துக்காட்டும் திருவள்ளுவர் அடிப்படையில் மனித உறவுகள் வளர்வதற்கும் நிலைப்பதற்கும் வழிகாட்டுகின்றார். நாம் அறிந்ததாக இருந்தாலும் அதனை உணர வைக்கின்றார். ஒரு சிலர் மிகுந்த அறிவு படைத்தவராக இருப்பார்கள். ஆனால் அடிப்படை மனிதப் பண்புகள் அற்றவர்களாக வாழ்வார்கள். அத்தகையவர்களை மரம் என்கிறார். எனவே மனித வாழ்க்கை என்பது மனித உறவுகளால் கட்டமைக்கப்படுகிறது. எனவே அந்த உறவுகளை வளர்த்துக்கொண்டு வாழ்வில் வளம் பெறச் சிலவற்றை மனதில் பதிய வைக்கிறார்.

## அற இலக்கியங்கள் கூறும் மனித உறவுகள்

முடியாட்சி காலமாக இருந்தபோதும் சமயக் காழ்ப்புகள் இல்லாமல், சமுதாயச் சீர்கேடுகள் மலிந்து போகாமல் இயற்கை வளம் நிறைந்து, நீதி வழுவாத அரசர்களால் வழிநடத்தப்பட்ட மக்களை உடையதாகச்

சங்ககாலச் சமுதாயம் அமைந்திருந்தது. அதன் பிறகு சேர, சோழ, பாண்டியர் என்னும் தமிழ் மன்னர்கள் வீழ்ச்சியுற்றனர். களப்பிரர் என்னும் மன்னர்கள் தமிழகத்தை ஆளும் நிலை ஏற்பட்டது. வந்தவர்கள் பிராகிருதம், பாலி மொழிகளையும் சமணம், பௌத்தம் என்னும் புதிய சமயங்களையும் ஆதரித்தனர். இல்வாழ்வின் இன்பங்களை அனுபவித்து வந்த மக்களிடம் துறவு வாழ்வை வலியுறுத்தினர். இச்சமயவாதிகள் ஆட்சியும் நீதியானதாக அமையவில்லை. இயற்கை வளமும் குன்றிப் போயிருந்தது. புதிய மொழிகளை வேறு மக்களிடம் திணித்தனர். இவற்றின் அடிப்படையில் மக்களிடமும் சமுதாயச் சீர்கேடுகள் மலிந்து போயிருந்தன. இப்படிப்பட்ட சூழலிலிருந்த மக்களுக்கு எதைக் கொடுக்கலாம் என்று சிந்தித்தப் படைப்பாளிகள் அறங்களைப் போதிக்கும் கட்டாயத்தில் இருந்தனர்.

வாழ்வை அனுபவிக்கும் மனநிலையிலிருந்த சங்ககால மக்களுக்கு அன்றைய படைப்பாளிகள் காதலையும் வீரத்தையும் இலக்கியங்களாக வடித்துக் கொடுத்தனர். சங்கம் மருவிய காலத்தில் தடுமாறிய மனநிலையில் சமுதாயச் சீர்கேடுகளில் சிக்கித் தவித்த மக்களைத் திருத்த வேண்டிய நிலையில் அன்றைய படைப்பாளிகள் அறங்களைப் போதித்தனர். அதனால்தான் சங்கம் மருவிய காலத்தில் எழுதப்பட்ட பதினெட்டு இலக்கியங்களில் பதினொரு இலக்கியங்கள் அற இலக்கியங்களாக அமைந்தன.

அறம் என்பது வாழ்விற்கு வழிகாட்டுவது, எப்படி வாழ வேண்டும் என்று எடுத்துரைப்பது, நல்வழி காட்டுவது, எப்படி இருக்க வேண்டும் என்பதையும் எப்படி இருக்கக் கூடாது என்பதையும் எடுத்துரைத்து மக்களுக்கு வாழ்வின் நியதிகளை எடுத்துரைப்பது. இனம், மொழி, நாடு கடந்த நிலையில் மனிதன் என்ற பொதுநிலையில் வழிகாட்டுவது. ஆறு என்பது வழியைக் குறிக்கிறது. ஆறு என்பது தான் அற என மாறி அதனுடன் அம் சேர்ந்து (அற + அம்) அறம் என்றாகிறது. எனவே வாழ்விற்கு வழி காட்டும் அற இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள் பற்றிய கருத்துகள் இடம்பெறுகின்றன.

## மனித உறவுகள்

வாழ்விற்கு அடிப்படை உறவுமுறைகள். தனிமனிதனாக இருந்தாலும், குடும்பமாக இருந்தாலும், சமுதாயமாக இருந்தாலும் மனிதர்கள் ஒருவரோடு ஒருவர் உறவு கொண்டே வாழ்ந்தாக வேண்டும். அதுதான்

மனித வாழ்விற்கும் மிருக வாழ்விற்கும் உள்ள வேறுபாடு. மனித வாழ்வில் மட்டுமே உடைய உயரிய உறவுமுறைகள் செம்மையாக அமைந்தால் மட்டுமே வாழ்க்கை அறமுடையதாக அமையும். எனவே, அந்த மனித உறவுகளில் தள்ள வேண்டியவை எவை, கொள்ள வேண்டியவை எவை என்பதைப் பற்றி அற இலக்கியங்கள் உணர்த்தும் நிலையில் இனிக் காணலாம்.

## நாலடியார் உணர்த்தும் மனித உறவுகள்

அவசரக் கோலம் அள்ளித் தெளித்ததைப் போன்று எந்தக் காரியத்தை எடுத்தாலும் பொறுமையின்றிச் செயல்படுவதால் பல இன்னல்கள் மக்களுக்கு ஏற்படுகின்றன. அவற்றை வெல்ல வேண்டுமானால் முதலில் பொறுமையைக் கவசமாகக் கொள்ள வேண்டும்.

*அறிவது அறிந்து, அடங்கி, அஞ்சுவது அஞ்சி,*
*உறுவது உலகு உவப்பச் செய்து - பெறுவதனால்*
*இன்புற்று வாழும் இயல்புடையார், எஞ்ஞான்றும்*
*துன்புற்று வாழ்தல் அரிது* (நாலடியார் - பொறையுடைமை - 4)

என்ற பாடலில், நல்லனவற்றை அறிந்து, பொறுமையுடன் எதற்கு அஞ்ச வேண்டுமோ அதற்கு அஞ்சிச் செய்ய வேண்டியதை உலகம் மகிழும்படியாகச் செய்து, பெற்றவற்றால் திருப்தி அடைந்து வாழக்கூடிய இயல்புடையவர்கள் எப்பொழுதும் இன்பமாகவே வாழ்வார்கள். அவர்கள் துன்புறுவது அறிதாகும் என்ற கருத்தை ஆசிரியர் உணர்த்துகின்றார். உறவுகள் வலுப்பெற முதலில் நாம் கைக்கொள்ள வேண்டியது பொறுமையைத்தான் என்பதை உணரச் செய்கிறார்.

நற்குடியில் பிறந்து நல்லுறவுகளை வளர்த்துக் கொள்ள வேண்டும் என்கிற கருத்தை உடையவர்கள் தங்களுடைய உடம்பு அழியுமளவிற்குத் துன்பம் வந்தபோதும் தமது உயரிய கொள்கையைக் கைவிடமாட்டார்கள். துன்பம் வந்தபோதும் புலியானது புல்லைத் தின்னாது. அதுபோல இழிவானச் செயல்களைச் செய்யாமல் இருப்பதும் மனித உறவுகளை வளரச் செய்யும் வழியாகும்.

உறவுமுறையில் தலையாயது பெரியோர்களை மதித்து நடத்தலாகும். ஒரு சிலர் எம்மைப்போல் எல்லாம் அறிந்தவர்கள் யாரும் இல்லை என்று தம்மைத்தாம் பெருமையாக நினைத்துக் கொள்வார்கள். அது உயர்ந்த

பண்பாகாது. அதை விடுத்துத் தங்கள் அனுபவத்தால் அறத்தை எடுத்துரைக்கும் பெரியோர் சொல் கேட்டு அவர்கள் துணையோடு வாழ்வதே உறவுகளை வளர்த்துக் கொள்ளும் வழியாகும் என்பதைக் கீழ்வரும் பாடல் சுட்டுகின்றது.

*எம்மை அறிந்திலிர்; எம்போல்வார் இல் என்று*
*தம்மைத்தாம் கொள்வது கோள் அன்று - தம்மை*
*அறியரா நோக்கி, அறன் அறியும் சான்றோர்*
*பெரியராக் கொள்வது கோள்*

(நாலடியார் - பெரியார் பிழையாமை - 5)

சான்றோர்கள் சில நல்லுரைகளை எடுத்துரைக்கும்போது ஏற்றுக் கொள்வது நலம் பயக்கும். ஒருவரை மற்றவர் இகழ்ந்து பேசுதல் தவறு. அவ்வாறு இகழ்ந்தவர்கள் வீழ்வர் என்றும், இகழ்ந்தவரைப் பதிலுக்கு இகழாமல் பொறுத்துக் கொண்டவர்கள் நற்பேறு பெறுவார்கள் என்பதைப் பெரியோர்கள் சுட்டும் போது அவற்றை விமர்சினம் செய்யாமல் ஏற்று வாழ்வது மனித உறவுகளுக்கு அடிப்படையாக அமையும் என்பதை,

*தம்மை இகழ்ந்தமை தாம் பொறுப்பது அன்றி, மற்று*
*எம்மை இகழ்ந்த வினைப் பயத்தான், உம்மை*
*எரிவாய் நிரயத்து வீழ்வர் கொல் !' என்று*
*பரிவதூஉம், சான்றோர் கடன்* (நாலடியார் - துறவு - 8)

என்ற பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

அறியா வயதில் தீய உறவுகளுடன் சேர்ந்து செய்யக் கூடாத வற்றைச் செய்து, தவறான பாதையில் சென்றவர்களாக இருந்தாலும் நல்ல நெறியை அறிந்த நல்லவர்களுடன் உறவு வைத்துக்கொள்ளும்போது, அவர்களிடமுள்ள தவறுகள் எல்லாம், வெயிலைக் கண்ட பனி மறைந்து விடுவது போன்று, மறைந்து விடும். அவர்களிடம் நற்பண்புகள் வளரத் தொடங்கும் என்பதைக் கீழ்வரும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

*அறியாப் பருவத்து அடங்காரோடு ஒன்றி*
*நெறியல்ல செய்து ஒழுகியவும் - நெறி அறிந்த*
*நற்சார்வு சார, கெடுமே வெயில் முறுகப்*
*புற்பனிப் பற்று விட்டாங்கு* (நாலடியார் - நல்இனம் சேர்தல்)

உலகில் நடக்கின்ற பெரும்பான்மையான தவறுகள் அனைத்திற்கும் காமம் ஒன்றே காரணமாக அமைகின்றது. அது பணத்தின் மீது கொண்ட காமமோ, மண்ணின் மீது கொண்ட காமமோ, பொருளின் மீது கொண்ட காமமோ, பதவியின் மீது கொண்ட காமமோ, பெண்ணின் மீது கொண்ட காமமோ எதுவாக வேண்டுமானாலும் இருக்கலாம். தனக்கு உரியது அல்லாததை அடைய நினைக்கும் வெறித்தனமே காமம். தன்னாக்கமின்றி மிருக நிலைக்குக் கொண்டுபோகக் கூடியது காமம். தமக்கு உரியவர் அல்லாதவர் மீது கொள்ளும் வெறித்தனமான ஆசை. இது ஒரு மனிதனிடம் வந்து விட்டால் அவனுடைய உறவுகளில் அமைதி நிலவாது. நல்லுறவுகள் சிதைந்து போகும். உறவுகளை அழிப்பதோடு ஒருநாள் தானே அழியக் காரணமாக அமையும். அத்தகைய காமத்தைக் கைவிடுமாறு கீழ்வரும் பாடலடிகள் சுட்டுகின்றன.

*ஊருள் எழுந்தஉருகெழுசெந்தீக்கு*
*நீருள்குளித்தும் உயல் ஆகும் - நீருள்*
*குளிப்பினும், காமம் சுடுமே; குன்று ஏறி*
*ஒளிப்பினும், காமம் சுடும்*

(நாலடியார் - பிறன்மனை நயவாமை - 10)

காமத்தின் காரணமாகத் தனது நல்லுறவுகளை எல்லாம் இழந்து இறுதியில் தானே அழிந்த இராவணன் கதையை இராமாயணம் சொல்கிறது. எனவே தனது உறவுகளை விட்டுவிடாமல், காமத்தில் வீழ்ந்து விடாமலும், தகாத உறவுகளை வளர்த்துக் கொள்ளாமலும் இருப்பதே மனித உறவுகளை வளர்க்கும் வழி என்பதை மக்கள் உணர்தல் தேவையாகின்றது.

உறவுகளை வளர்த்துக் கொண்டு வளம்பெற நினைப்பவர் அருகிலே இருப்பவர்களாக இருந்தாலும் மனதில் வஞ்சம் உடையவர்களுடன் உறவு கொள்ளாமல் வெகுதூரத்தில் இருப்பவர்களாக இருந்தாலும் மனதில் வஞ்சமில்லாதவர்களின் உறவை வளர்த்துக் கொள்ளுதல் சிறந்தது என்பதை,

*பல நாளும் பக்கத்தார் ஆயினும், நெஞ்சில்*
*சில நாளும் ஒட்டாரோடு ஒட்டார் - பல நாளும்*
*நீத்தார் என, கைவிடல் உண்டோ - தம் நெஞ்சத்து*
*யாத்தரோடு யாத்த தொடர்பு* (நாலடியார் - நட்பு ஆராய்தல் - 4)

என்ற பாடல் வரிகள் அறிவுறுத்துகின்றன.

நட்புக் கொண்டு உறவினர்களாக ஏற்றுக் கொண்டவர்களிடம் சிறுசிறு குற்றம் குறைகள் இருந்தாலும் அவற்றைப் பெரிதுபடுத்தாமல் நிறைகளை மட்டும் எடுத்துக்கொண்டு தொடர்ந்து உறவுகளை வளர்த்துக் கொள்ளுதல் நல்லது என்பதைக் கீழ்வரும் பாடல் அடிகள் சுட்டுகின்றன.

*நல்லார் எனத்தாம் நனிவிரும்பிக் கொண்டாரை*
*அல்லார் எனினும், அடக்கிக் கொளல் வேண்டும்*
*நெல்லுக்கு உமிஉண்டு; நீர்க்கு நுரைஉண்டு*
*புல் இதழ் பூவிற்கும் உண்டு"*

(நாலடியார் - நட்பிற் பிழைபொறுத்தல் - 1)

மனித உறவுகளில் ஒருவருக்கொருவர் உதவி செய்து வாழ்வது தேவையானது. ஆனால் அவ்வாறு உதவி செய்யும்போதும் கவனித்துச் செய்யாவிடில் அந்த உதவியே தீதாக முடிந்து உறவுகளில் விரிசல் ஏற்படக் காரணமாகும்.

*நன்றாற்ற லுள்ளுந் தவறுண்டவரவர்*
*பண்பறிந் தாற்றாக் கடை* (குறள் 469)

என்னும் குறளின்படி கயவர்களுக்குப் பலநூறு உதவி செய்தாலும் அது தமக்கே தீமையை விளைவிக்கும் என்பதைத்தான் கீழ்வரும் பாடலடிகளும் உணர்த்துகின்றன.

*ஒரு நன்றி செய்தவர்க்கு ஒன்றி எழுந்த*
*பிழை நூறு சான்றோர் பொறுப்பர்; கயவர்க்கு*
*எழுநூறு நன்றி செய்து ஒன்று தீது ஆயின்*
*எழுநூறும் தீதாய் விடும்* (நாலடியார் - கயமை - 7)

தனக்குப் பிறர் செய்யும் உதவியை மறப்பது மட்டுமின்றி அந்த உதவியின் தரத்தைக்கூட அறியாத கீழ்மையான நெஞ்சம் படைத்தவர்களுக்கு உதவி செய்யாமல் இருப்பதும் மனித உறவுகளில் கவனத்தில் கொள்ள வேண்டியதாகும் என்பதைக் கீழ்வரும் பாடல் வரிகள் சுட்டுகின்றன.

*தினை அனைத்தே ஆயினும் செய்த நன்று உண்டால்*
*பனை அனைத்தா உள்ளுவர் சான்றோர்; பனை அனைத்து*

*என்றும் செயினும், - இலங்கு அருவி நல்நாட*
*நன்று இல நன்று அறியார் மாட்டு* (நாலடியார் - கீழ்மை - 4)

மனித உறவுகளை வளர்த்துக் கொள்வதில் இன்னார், இனியர், எம்முடையவர் என்று பாராமல் துன்பம் வந்தபோது அவர்கள் யாராக இருந்தாலும் தம்மால் இயன்ற உதவியைச் செய்து சுற்றத்தை வளர்த்துக் கொள்ளும் பண்புடையவர்கள் எல்லோரிலும் முதன்மையானவர்களாகக் கருதப்படுவார்கள் என்பதைக் கீழ்வரும் பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

*இன்னர்; இளையர்; எமர்; பிறர்' என்னும் சொல்*
*என்னும் இலர் ஆம் இயல்பினால் துன்னித்*
*தொலை மக்கள் துன்பம் தீர்ப்பாரே - யார்மாட்டும்*
*தலை மக்கள் ஆகற் பாலார்* (நாலடியார் - சுற்றம் தழால் - 5)

மேற்கூறியவாறு பிறருக்குத் துன்பம் வருகிறபோது உதவாத மனம் படைத்தவர்கள் காலச்சுழல் மாறும்போது தனக்குத் துன்பம் வந்தால் உதவுவாரற்றுத் தன்னிடமுள்ள நல்லியல்புகளை எல்லாம் இழந்து துன்புற இயலும் என்பதைத்தான் கீழ்வரும் பாடல் வரிகள் சுட்டுகின்றன.

*பிறந்த குலம் மாறும்; பேர் ஆண்மைமாயும்*
*சிறந்த தம் கல்வியும் மாயும் - கறங்கு அருவி*
*கல்மேல் கழுஉம் கணமலை நல் நாட*
*இன்மை தழுவப் பட்டார்க்கு* (நாலடியார் - இன்மை - 5)

இவ்வாறு மனித உறவுகளை வளர்த்துக் கொள்ளும்போது மனதில் கொள்ள வேண்டியவற்றை நாலடியார் பாடல்கள் உணர்த்துகின்றன. இனி, பழமொழி நானூறு உணர்த்தும் மனித உறவுகள் குறித்துச் சிந்திப்போம்.

## பழமொழி நானூறு கூறும் மனித உறவுகள்

பழமொழிகள் மூலமாக நல் அறத்தை எடுத்துரைக்கும் பழமொழி நானூற்றில் இடம்பெற்றுள்ள கருத்துகள் மனித உறவுகளைச் செம்மைப் படுத்திக் கொள்ளத் துணைப் புரிவன.

மனித உறவுகளிலேயே முதன்மையானது பெரியோரை மதித்தல் என்பதாகும். வயதிலும் பதவியிலும் அனுபவத்திலும் மூத்தவராக இருப்பவர்களை நெறிதவறித் தங்களுக்கு நிகராக வைத்துச் சொல்லக்

கூடாதவற்றைக் கூறுதல் தவறானதாகும். அவ்வாறு சிறியார் சொல்வது நல்வழிகாட்டும் உறவைச் சிதைத்துக் கொள்வதோடு, நிலவைப் பார்த்து நாய் குரைப்பதற்குச் சமமாகும்.

*நெறியால் உணராது, நீர்மையும் இன்றிச்*
*சிறியார், எளியரால் என்று - பெரியாரைத்*
*தங்கள் நேர் வைத்துத் தகவல்ல கூறுதல்*
*திங்களை நாய் குரைத் தற்று* (பழமொழி - 108)

பெரியவர்களிடத்தும் சிறியவர்களிடத்தும் நல்லுறவை வளர்த்துக் கொள்ள வேண்டுமானால் தம்மைத்தாமே புகழ்ந்து உரைத்துக் கொள்ளாமல் அடக்கமுடையவர்களாக இருத்தல் அவசியம். நிறைகுடம் தளும்பாமல் இருப்பதைப் போன்று அடக்கமுடன் செயல்படுதல் சிறந்தது.

*கற்று அறிந்தார் கண்ட அடக்கம்; அறியாதார்*
*பொச்சாந்து தம்மைப் புகழ்ந்து உரைப்பர், தெற்ற-*
*அறைகல் அருவி அணிமலை நாட*
*நிறைகுடம் நீர் தளும்பல் இல்* (பழமொழி - 10)

தன்னுடைய உறவினராக இருந்தாலும், நண்பர்களாக இருந்தாலும் அவர்கள் ஒரு தீங்கு செய்துவிட்டபோது உடனே அவர்களை விட்டு விலகிவிடக் கூடாது. அவர்கள் செய்த தீமையைத் தவறுதலாகத் தாங்களே செய்ததாக நினைத்துப் பொறுத்துக் கொள்ளுதலே உறவுகளை வளர்க்கும் பண்பாகும்.

*தம் தீமை இல்லாதார், நட்டவர் தீமையையும்*
*எம் தீமை என்றே உணர்ப, தாம் - அம்தண்*
*பொருதிரை வந்து உலாம் பொங்கு நீர்ச்சேர்ப்ப*
*ஒருவர் பொறை, இருவர் நட்பு* (பழமொழி - 133)

தகுதியற்றவர்களை மிகவும் புகழ்ந்து கூறுதல் நாயைப் புலியென்று கூறுவதற்குச் சமமாகும். அப்படிப்பட்ட உறவுகள் போலியானவை.

*தாயானும் தந்தையாலானும், மிகவுஇன்றி,*
*வாயின் மீக்கூறுமவர்களை ஏத்துதல்*

*நோய் இன்று எனினும், அடுப்பின் கடை முடங்கும்*
*நாயைப் புலியாம் எனல்* (பழமொழி - 68)

மக்களிடம் பழகும்போது தன்னைச் சார்ந்தவர்களாக இருந்தாலும், சாராதவர்களாக இருந்தாலும் பிறருக்கு நாம் செய்வது தமக்கும் திரும்ப வரும் என்கிற வினப்பயன் இல்லாமல் பிறருக்குத் தீமை செய்து, அடுத்தவர் மனதை நோகடிப்பது மனித இயல்பாகாது. அது மனித உறவுகளையும் வளர்க்காது என்பதை,

*வினைப்பயன் ஒன்று இன்றி, வேற்றுமைகொண்டு*
*நினைத்துப் பிறர் பனிப்ப செய்யாமை வேண்டும்*
*புனப்பொன் அவிர் சுணங்கின் பூங்கொம்பர் அன்னாய்*
*தனக்கு இன்னா, இன்ன பிறர்க்கு* (பழமொழி - 45)

தன் சுற்றத்தார்க்கும் மற்றவர்களுக்கும் தங்களிடமுள்ளதைக் கொடுத்துப் பகிர்ந்து வாழ்வதே மனித உறவிற்குரிய பண்பாகும். இறைக்க இறைக்கக் கிணற்றில் நீர் ஊறுவது போன்று கொடுக்கக் கொடுக்க அவர்கள் வாழ்வும் வளம் பெறும்.

*இரப்பவர்க்கு ஈயக் குறைபடும் என்று எண்ணிக்*
*கரப்பவர் கண்டறியார் கொல்லோ ? - பரப்பில்*
*துறைத் தோணிநின்று உலாம் தூங்கு நீர்ச் சேர்ப்ப*
*இறைத்தோறும் ஊறும் கிணறு* (பழமொழி - 379)

மனிதர்களிடம் காணும் குற்றம் குறைகளாலும் சில காரணங் களுக்காகவும் பகைமை ஏற்பட்டுவிட்டால் அதற்கான காரணத்தை ஆராய்ந்து உடனேப் பகைமையைப் போக்கிக் கொள்ள வேண்டும். அவ்வாறு செய்யாமல் பகைமையைப் பெரிதாக்கி உறவுகளை உதறித் தள்ளிக் கொண்டே வந்தால் ஒருநாள் தனிமைப்பட நேரிடும். உறவுகள் என்பது பல மரங்கள் நிறைந்த தோப்பாகும். தனிமரம் எப்பொழுதும் தோப்பாகாது.

*எதிர்த்த பகையை இளைது ஆய போழ்தே*
*கதித்துக் களையின் முதிராது - எதிர்த்து*

*நனி நிற்பச் செய்தவர் நண்பு எலாம் தீரத்*
*தனிமரம் காடு ஆவது இல்* (பழமொழி - 287)

நல்லுறவுகள் நீடிக்க வேண்டுமானால் முதலில் நாவடக்கம் தேவை. பிறர் மனம் புண்படும்படியாகப் பேசுதல் கூடாது. கல் கூடத் தேய்ந்து மறைந்து விடலாம். ஆனால் கடுஞ்சொல் மறையாமல் உறவுகள் முறிய ஏதுவாகும். எனவே தான் துன்புற்றபோது பிறரைக் கடுஞ்சொல் கூறாமல் இருக்கப் பழகிக் கொள்ள வேண்டும் என்பதைக் கீழ்வரும் பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

*கெடுவல் எனப்பட்ட கண்ணும், தனக்கு ஓர்*
*வடுஅல்ல செய்தலே வேண்டும் - நெடுவரை*
*முற்றுநீர் ஆழி வரையகத்து ஈண்டிய*
*கல்தேயும், தேயாது, சொல்* (பழமொழி - 40)

இவ்வாறு சில முக்கியப் பண்புகளை மனதில்கொண்டு செயல்பட்டால் மனித உறவுகளில் விரிசல் ஏற்படாது என்பதைப் பழமொழி நானூறு வழி அறிந்தோம். இனி நான்மணிக்கடிகை கூறும் மனித உறவுகள் குறித்துக் காண்போம்.

## நான்மணிக்கடிகை கூறும் மனித உறவுகள்

ஒவ்வொரு பாடலிலும் நான்கு மணி போன்ற அறங்களை எடுத்துரைக்கும் நான்மணிக்கடிகையில் மனித உறவுகள் வலுப்பெறவும் சில வழிமுறைகள் கூறப்பட்டுள்ளன.

*மெய்சிதைக்கும், ஒற்றுமை இன்மை; ஒருவனைப்*
*பொய் சிதைக்கும், பொன்போலும் மேனியை; பெய்த*
*கலம் சிதைக்கும் பாலின் சுவையை; குலம் சிதைக்கும்*
*கூடார்கண் கூடி விடின்* (நான்மணிக்கடிகை - 23)

ஒற்றுமையற்ற நிலை உறவுகளைச் சிதைக்கச் செய்யும் ஒருவன் கூறுகின்ற பொய்யானது அவனது உடலைச் சிதைத்துவிடும். கலம் சுத்தமில்லை யென்றால் அதில் ஊற்றப்படும் பாலின் சுவை கெட்டுவிடும். தகாதவர்களிடம் கொள்ளும் உறவானது குலத்தையே சிதைக்கச் செய்யும். அதனால் தக்காரோடு உறவுகொள்ள வேண்டுமென்பதை மேற்கண்ட பாடல் உணர்த்துகின்றது.

உறுப்புகளில் கண் முதன்மையானதாகும். அதைப்போன்று பெற்ற தாயே முதல் உறவாகிறார். எனவே அவனை முதலில் மதிக்கப் பழகிக் கொள்ளுதல் நல்உறவுகளை வளர்க்க வழிகோலும் என்பதைக் கீழ்வரும் பாடல் வரிகள் சுட்டுகின்றன.

*கண்ணின் சிறந்த உறுப்பு இல்லை; கொண்டாளின்*
*துன்னிய கேளிர் பிறர் இல்லை; மக்களின்*
*ஒண்மையவாய்ச் சான்ற பொருள் இல்லை; ஈன்றாளின்*
*என்னக் கடவுளும் இல்* (நான்மணிக்கடிகை - 57)

மனித உறவுகள் செம்மைப்பட வேண்டுமானால் யாரையும் எளியர் என்று எண்ணி நகையாடுதல் கூடாது. அதேபோன்று கோபப்பட்டுக் கூறக் கூடாத வார்த்தைகளைச் சொல்லுதல் கூடாது. இவையாவும் உறவுகளை வளரவிடாமல் சிதைத்துவிடும் என்பதைக் கீழ்வரும் பாடல் வரிகள் சுட்டுகின்றன.

*எள்ளற்க, என்றும் எளியர்என்று; என் பெறினும்*
*கொள்ளற்க, கொள்ளார் கைமேற்பட ! உள்சுடினும்*
*சீறற்க, சிற்றில் பிறந்தாரைக் கூறற்க*
*கூறல்லவற்றை விரைந்து* (நான்மணிக்கடிகை - 3)

எப்படிப்பட்ட சூழலிலும் கொலை செய்வது தீமையானதாகும். கல்வியறிவு அற்றவர்களாக வளரவிடுதல் தீமையானதாகும். உரிய நேரத்தில் செய்யாத காரியம் நலம் பயக்காது. அதைப்போன்றே நல்ல கொள்கையைப் பின்பற்றாதவர்களிடம் கொள்ளும் உறவானது குலத்திற்கே தீதாக அமைந்துவிடும் என்பதைக் கீழ்வரும் பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

*எல்லா இடத்தும் கொலை தீது; மக்களைக்*
*கல்லா வளரவிடல் தீது; நல்லார்*
*நலம்தீது; நாண் அற்று நிற்பின்; குலம்தீது*
*கொள்கை அழிந்தக்கடை* (நான்மணிக்கடிகை - 95)

நான்மணிக்கடிகை உறவுகளுக்கு வழிவகுத்துரைப்பது போன்றே திரிகடுகம் கூறும் மனித உறவுகள் பற்றி இனிக் காண்போம்.

## திரிகடுகம் கூறும் மனித உறவுகள்

மற்றவர்கள் தம்மைப் புகழ்ந்து கூறுமிடத்துக் கர்வம் கொள்ளாமல் நாணி நிற்பதும், புகழாமல் இழித்துக் கூறும்போதும், கோபம் கொள்ளாமல்

பொறுமையுடன் இருத்தலும், அறவழி நடத்தலைப் பேராண்மையாகக் கொள்ளுதலும் ஆகிய பண்புகள் வாய்க்கப் பெற்றிருந்தால் தம்மை நோக்கி உறவுகள் தானாகவே வந்து சேரும் என்பதைக் கீழ்வரும் பாடல் வரிகள் சுட்டுகின்றன.

*பிறர் தன்னைப் பேணுங்கால் நாணலும் பேணார்*
*திறன் வேறு கூறின் பொறையும், அறவினையைக்*
*கார் ஆண்மைபோல ஒழுகலும் இம்மூன்றும்*
*ஊராண்மை என்னும் செருக்கு* (திரிகடுகம் - 6)

பிறர் செய்த நன்றியை மறந்த நாணமற்றவர்களும் சான்றோர் முன்னிலையில் தன்னைப் பற்றிப் பெருமை பேசுபவனும் தன்னிடம் ஒப்படைக்கப்பட்ட அடைக்கலப் பொருளை எடுத்துக் கொள்பவனும் ஆகிய இத்தகைய தீய பண்புகளை உடையவர்கள் தமக்குப்பின் தம் பெயர் சொல்லும் உறவின்றி அற்றுப் போவார்கள். எனவே மேற்கூறப்பட்ட இழிபண்புகளை விட்டுவிடுதல் நலம் என்கிறது கீழ்வரும் பாடல்.

*நன்றி பயன் தூக்கா நாண் இலியும், சான்றார்முன்*
*மன்றில் கொடும்பாடு உரைப்பானும், நன்றுஇன்றி*
*வைத்த அடைக்கலம் கொள்வானும் - இம்மூவர்*
*எச்சம் இழந்து வாழ்வார்* (திரிகடுகம் - 62)

திரிகடுகம் போன்று சிறுபஞ்சமூலம் என்னும் நூலில் கூறப்பட்டுள்ள மனித உறவுகள் குறித்து இனிச் சிந்திக்கலாம்.

## சிறுபஞ்சமூலம் உணர்த்தும் மனித உறவுகள்

உடல் நலத்திற்கு மருந்து தேவை போன்று மனநலத்திற்கு நற்பண்புகள் தேவையாகின்றன. அப்பண்புகளை வளர்த்துக் கொண்டால் உறவுகள் மகிழ்ச்சியைத் தரும் என்பதைச் சிறுபஞ்சமூலப் பாடல்கள் கூறுகின்றன. முதலில் நாம் சிந்திக்க வேண்டியது நாவடக்கத்தை. பேசத் தெரியுமென்று எதை வேண்டுமானாலும் பேசிவிடக் கூடாது. வன்சொல் பேசினால் பகைமைதான் உருவாகும். இன்சொல் பேசினால் பகைமை மாறி உறவுகள் வலுப்பெறும் என்பதைக் கீழ்வரும் பாடல் வரிகள் சுட்டுகின்றன.

*இன் சொல்லான் ஆகும், கிளைமை; இயல்பு இல்லா*
*வன் சொல்லான் ஆகும் பகைமை மன்; மென்சொல்லான்*
*ஆய்வு இல்லா ஆர் அருளாம்; அவ் அருள்நல் மனத்தான்*
*வீவு இல்லா வீடு ஆய் விடும்* (சிறுபஞ்சமூலம் - 90)

## ஆசாரக்கோவை கூறும் மனித உறவுகள்

நல்வழி நடந்து நல்லுறவுகளை வளர்த்து வாழ்வாங்கு வாழ்ந்து நிலைபேறு அடைய வேண்டுமானால் சில அடிப்படைப் பண்புகளை நாம் மனதுள் கொள்ள வேண்டும் என்பதை ஆசாரக்கோவைப் பாடல்கள் சுட்டுகின்றன.

ஒருவர் செய்த நன்றியை மறவாமல் இருத்தலும், பொறுமையுடன் செயல்படுவதும், இனிய சொற்களையே பேசுவதும், எந்த உயிருக்கும் தீமை செய்யாமல் இருத்தலும் நல்ல நூல்களைக் கற்பதும், பிறரிடம் ஒற்றுமையுடன் பழகுதலும் நன்மை தீமையைக் கண்டறியும் அறிவும், இவற்றோடு நல்ல மனிதர்களோடு உறவு வைத்துக் கொள்வதும் நல்வாழ்விற்கு வழிகோலும் என்பதைக் கீழ்வரும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

*நன்றி அறிதல், பொறையுடைமை இன்சொல்லோடு*
*இன்னாத எவ்உயிர்க்கும் செய்யாமை, கல்வியோட*
*ஒப்புரவு ஆற்ற அறிதல், அறிவுடைமை*
*நல் இனத்தாரோடு நட்டல் - இவை எட்டும்*
*சொல்லிய ஆசார வித்து* (ஆசாரக்கோவை - 1)

சுற்றாத்தாரோடு ஒட்ட ஒழுகுதல் அவசியமானது. அதைவிடப் பெற்ற தாயையும், தந்தையையும் மதித்து நடத்தல் மிகவும் அவசியமானது என்பதைக் கீழ்வரும் பாடல்கள் சுட்டுகின்றன.

*வைகறை யாமம் துயில் எழுந்து, தான் செய்யும்*
*நல் அறமும் ஒண்பொருளும் சிந்தித்து, வாய்வதின்*
*தந்தையும் தாயும் தொழுது எழுக!' என்பதே -*
*முந்தையோர் கண்ட முறை* (ஆசாரக்கோவை - 4)

ஒழுக்கமுடன் வாழக் கற்றுக் கொண்டவன் வாழ்வின் பேறுகளைப் பெற்று மனித உறவுகளில் மகிழ்ந்து நல்வாழ்க்கை வாழ்வான் என்பதைக் கீழ்வரும் பாடல் உணர்த்துகின்றது.

*பிறப்பு, நெடுவாழ்க்கை, செல்வம், வனப்பு*
*நிலக்கிழமை, மிக்கூற்றம், கல்வி, நோய்இன்மை*
*இலக்கணத்தால், இவ்வெட்டும் எய்துப - என்றும்*
*ஒழுக்கம் பிழையா தவர்* (ஆசாரக்கோவை - 2)

மனித உறவுகளில் மிகவும் முக்கியமானது நாடாளும் அரசன், தனக்குக் கல்வி கொடுக்கும் ஆசிரியர், தம்மை ஈன்ற தாய், தந்தை, தம்மைவிட மூத்த பெரியோர்கள் இவர்களை வணங்கி வாழ்வதே நற்பண்பு ஆகும் என்பதைக் கீழ்வரும் பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

அரசன் உவாத்தியான், தாய், தந்தை, தம்முன்,
நிகர் இல் குரவர் இவ்ஐவர் இவரைத்
தேவரைப் போலத் தொழுது எழுக!' என்பதே -
யாவரும் கண்ட நெறி (ஆசாரக்கோவை - 16)

ஆசாரக்கோவையின் செய்திகள் போன்று 'ஏலாதி' என்னும் அற இலக்கியத்தில் கூறப்பட்டுள்ள மனித உறவுகள் குறித்த செய்திகளை இனிக் காண்போம்.

## ஏலாதி கூறும் மனித உறவுகள்

மனித உறவுகளை மதித்து நடப்பவர்கள் இரக்கக் குணம் உடையவர்களாக இருத்தல் அவசியமாகும். பிறர் உதவியை நாடி நிற்பவர்களுக்கு உதவி செய்து வாழ்வதே அத்தகைய பண்பாகும் என்பதைக் கீழ்வரும் பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

*தாய் இழந்த பிள்ளை, தலை இழந்த பெண்டாட்டி*
*வாய் இழந்த வாழ்வினார், வாணிகம் போய் இழந்தார்*
*கைத்து ஊண் பொருள் இழந்தார், கண்ணிலவர்க்கு ஈய்ந்தார்*
*வைத்து வழங்கி வாழ்வார்* (ஏலாதி - 78)

தம்மைச் சேர்ந்தவர்களுக்கு ஏற்படும் துன்பமோ இன்பமோ அது தமக்கு ஏற்பட்டதாகும் என்ற மனம் உடையவர்கள் நல்லுறவுகளை

வளர்த்துப் பண்பாளர்களாக வாழ இயலும் என்பதைக் கீழ்வரும் பாடல் சுட்டுகிறது.

*சாக்காடு, கேடு, பகை, துன்பம், இன்பமே*
*நாக்கு ஆடு நாட்டு அறைபோக்கும், என நாக்காட்ட*
*நட்டார்க்கு இயையின், தமக்கு இயைந்த கூறு உடம்பு*
*பட்டார் வாய்ப்பட்டது பண்பு* (ஏலாதி - 79)

ஏழைகள், நோய்வாய்ப்பட்டவர்கள், கண் இழந்தவர்கள், வேறு போக்கிடம் இல்லாதவர்கள், வாழ்க்கை இழந்தவர்கள் இவர்களுக்கு உணவு கொடுத்து உதவி செய்பவர்கள் நற்பேறுகளைப் பெற்று வாழ்வார்கள் என்பதைக் கீழ்வரும் பாடல் வரிகள் சுட்டுகின்றன.

*புலையாளர், புண்பட்டார், கண்கெட்டார், போக்கு இல்*
*நிலையாளர், நீர்மை இழந்தார், தலையாளர்க்கு*
*ஊண் கொடுத்து, ஊற்றாய் உதவினார் - மன்னராய்க்*
*காண் கொடுத்து வாழ்வார் கலந்து* (ஏலாதி - 80)

## இன்னா நாற்பது கூறும் மனித உறவுகள்

கண் இல்லாதவனுடைய அழகும், எண்ணிக்கை தெரியாதவன் போடும் கணக்கும், தானும் அனுபவிக்காது பிறருக்கும் கொடுத்து உதவாது சேர்த்து வைக்கும் பெரும்பொருளும் ஒருநாளும் நன்மையைத் தரா. அதைப்போலவே விரும்பத்தகாத பகைவர்களுடன் உறவு வைத்துக் கொள்வதும் நன்மையைத் தராது என்பதைக் கீழ்வரும் பாடல் வரிகள் சுட்டுகின்றன.

*உண்ணாது வைக்கும் பெரும்பொருள் வைப்பு இன்னா*
*நண்ணாப் பகைவர் புணர்ச்சி நனி இன்னா*
*கண் இல் ஒருவன் வனப்பு இன்னா; ஆங்கு இன்னா*
*எண் இலான் செய்யும் கணக்கு* (இன்னா நாற்பது - 16)

## இனியவை நாற்பது கூறும் மனித உறவுகள்

தன்னிலை தாழ்தல் என்னும் மானம் அழிந்த பிறகு வாழாமல் இருப்பது நல்லது. மனதுள் ஊனமின்றிப் பிறருக்குக் கொடுத்து உதவும் உள்ளம் உடையவர்களாகப் பெரும் பொருள் வைத்திருப்பது நல்லது.

அதேபோன்று தாளம் தப்பாத இசைபோன்று அடக்கமுடன் மக்களோடு மக்களாக உறவு வைத்துக் கொண்டு வாழ்வது நல்லதாகும் என்பதைக் கீழ்வரும் பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

*மானம் அழிந்தபின், வாழாமை முன் இனிதே*
*தாளம் அழியாமைத் தான் அடங்கி, வாழ்வு இனிதே*
*ஊனம் ஒன்று இன்றி, உயர்ந்த பொருள் உடைமை*
*மானிடவர்க்கு எல்லாம் இனிது* (இனியவை நாற்பது - 13)

தனது கைப்பொருளைப் பிறருக்குக் கொடுத்து வாழ்வது நல்லது. உயர்ந்த எண்ணத்தோடு ஊக்கமுடன் உழைத்து வாழ்தல் இனிது. எளியவர் இவர் என்று பிறரை இகழ்ந்து உரைக்காமல் வாழ்வது மிகவும் சிறந்ததாகும். அதுவே, மனித உறவுகளை ஒளிரச் செய்யும் வழியாகும் என்பதைக் கீழ்வரும் பாடல் வரிகள் சுட்டுகின்றன.

*கயவரைக் கை இகழ்ந்து வாழ்தல் இனிதே;*
*உயர்வு உள்ளி ஊக்கம் பிறத்தல் இனிதே*
*எளியர், இவர் !' என்று இகழ்ந்து உரையாராகி*
*ஒளிபட வாழ்தல் இனிது* (இனியவை நாற்பது - 29)

## முதுமொழிக் காஞ்சி கூறும் மனித உறவுகள்

விண்ணுலகில் வீடுபேறு அடையும்படி மண்ணுலகில் வாழ்வதே வாழ்க்கையாகும் என்பதை உணர்த்தும் வகையில் உலக நிலையாமையை எடுத்துரைக்கும் முதுமொழிக்காஞ்சியும் மனித உறவுகளைப் பற்றிச் சுட்டுகின்றன.

இந்த உலகில் வாழும் எல்லா மக்களுக்கும் மனித உறவுகள் தேவை. தனது கணவனின் மனமறிந்து நடவாத மனைவி சிறந்த தாரமாக மாட்டாள். தனது மனைவியைப் பேணாமல் வாழ்பவன் நல்ல மனிதனல்லன். நெகிழ்வுத்தன்மை இல்லாதது நல்ல நட்பாகாது. அழிக்கும் தன்மை யுடையவன் நல்ல சிற்பி ஆகமாட்டான். வஞ்ச நெஞ்சமுடையவன் நண்பனாக முடியாது. ஆராயாமல் கற்றது கல்வியாகாது. வாழ்வை உணராமல் வருந்துதல் கூடாது. அறம் அறிந்து உதவாதவன் செய்த உதவி

ஈகையாகாது. மனம் ஒன்றி நோற்காத நோன்பு நல்லதல்ல. மறுமை என்ற ஒன்றை அறியாமல் இருப்பவர்களின் முதுமை பயனற்றதாகும். எனவே இவைபோன்ற உறவுகளின் பண்புகளை ஒருவன் உணர்தல் வேண்டும் என்பதைக் கீழ்வரும் பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

*ஆர்கலி உலகத்து மக்கட்கு எல்லாம்*
*நீர் அறிந்து ஒழுகாதாள் தாரம் அல்லள்*
*தாரம் மாணாதது வாழ்க்கை அன்று*
*ஈரம் அல்லாதது கிளை நட்பு அன்று*
*சோராக் கையன் சொல்மலை அல்லன்*
*நேரா நெஞ்சத் தோன் நட்டோன் அல்லன்*
*தேராமல் கற்றது கல்வி அன்று*
*வாழாமல் வருந்தியது வருத்தம் அன்று*
*அறத்து ஆற்றின் ஈயாதது ஈகை அன்று*
*திறத்து ஆற்றின் நோலாதது நோன்பு அன்று*
*மறுபிறப்பு அறியாதது மூப்பு அன்று* (முதுமொழிக்காஞ்சி 5)

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் இடம்பெறும் அற இலக்கியங்கள் மனித மனதை நல்வழிப்படுத்தி, மனித உறவுகளை வலுப்பெறச் செய்து, இம்மைக்கும் மறுமைக்கும் பயன்தரக்கூடிய வழிமுறைகளை எடுத்துரைக்கின்றன. வெறும் அறமாக மட்டும் இல்லாமல் அந்த அறவாழ்க்கையே ஆறறிவு படைத்த மனிதன் உறவுகொண்டு வாழ வழி வகுக்கும் என்பதையும் எடுத்துரைக்கின்றன.

## 5. பக்தி இலக்கியத்தில் மனித உறவுகள்

இறைவன் மீது ஆர்வலர்களாகிய பக்தர்கள் உள்ளம் உருக வழிபாடு செய்து பாடியவையே பக்திப் பாடல்கள் எனப்படும். இப்பாடல்கள் உணர்வாலும் அளவாலும் உலகிலுள்ள எம்மொழியிலும் காணப்படாத அளவு தமிழில் காணப்படுகின்றன. தேவாரம், திருவாசகம், நாலாயிரத் திவ்வியப்பிரபந்தம் எனப்படும் இவை பக்தி இலக்கியத்தின் பெரும்பகுதி யாகும். மறைத்திரு தனிநாயக அடிகளார்

> *ஆங்கிலம் வணிகத்தின் மொழியென்றும், இலத்தீன் சட்டத்தின் மொழியென்றும், கிரேக்கம் இசையின் மொழியென்றும், செருமன் தத்துவத்தின் மொழி யென்றும், பிரெஞ்சு தூதின் மொழியென்றும் இத்தாலி காதலின் மொழியென்றும் கூறுவது ஒரு புடை ஒக்குமெனின் தமிழைப் பக்தியின் (இரக்கத்தின்) மொழியெனல் பொருந்தும்*

என்று சிறப்பித்துக் கூறுவார். இறைவன் தொடர்புடைய பாடல்கள் இரக்கத்தையே அடிப்படையாகக் கொண்டுள்ளன. உள்ளத்தை உருக்கும் பக்திப் பாடல்கள் தமிழ் இலக்கிய வரலாற்றில் இடைக்காலத்தில் தோன்றித் தமிழையும் பண்பாட்டையும் காத்தன எனில் மிகையாகாது.

தமிழ் இலக்கிய வரலாற்றைப் பொறுத்தவரையில் பரிபாடல் காலத்திலிருந்து, பாரதியாரின் கண்ணன் பாட்டு வரை பல்வகை இசைத்தமிழ் மரபாகத் தமிழ் வளர்ந்தது. காரைக்கால் அம்மையார், சேரமான் பெருமாள், முதலாழ்வார் மூவர் தொடங்கிக் கி.பி. 7, 8, 9 ஆம் நூற்றாண்டளவில் அடித்த பக்திப் பேரலைகள் பலவாகும். பன்னிரு திருமுறையும் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தமும் பக்திப் பேழைகளாகும். நாயன்மார்கள், ஆழ்வார்களைத் தொடர்ந்து அருணகிரிநாதர், பட்டினத்தார், தாயுமானவர், இராமலிங்க அடிகள் என இப்பக்தி வெள்ளம் தமிழ் இலக்கிய வரலாற்றில் உயிர் ஆறாகப் பெருக்கெடுத்துப் பாய்ந்தது. இசுலாமிய,

கிறித்துவ இசைப் பாசுரங்களும் ஈடு இணையற்ற எல்லைகளை எட்டின. நாட்டுப்பாடல்கள் முதல்கொண்டு பாரதியாரின் கவிதைகள் வரையில் பக்திப் பாடல்கள் பெருகி உள்ளன. இவையனைத்தும் இறைவனோடு தொடர்புடைய அடியார்களால் பாடப்பட்டவையாக இருந்தாலும் பொதுமக்களின் வாழ்விற்காகப் பாடப்பட்டவை எனலாம்.

உலக வாழ்வில் பல்வேறு விதமான இன்னல்களையும் சிக்கல்களையும் எதிர்நோக்கும் மக்கள் நடுக்கடலில் சிக்கித் தவிப்பது போன்று அல்லல்படுகிறபோது அவர்களுக்கு வழிகாட்டிக் காக்கும் இறைவனாகிய தெப்பம் ஒன்றுண்டு என்று வழிகாட்டும் நிலையில் பக்திப் பாடல்கள் பாடப்பட்டன. இவையாவும் மனித உறவுகளுக்கு வழிகாட்டுவதாகவே உள்ளன.

பக்தி இலக்கியங்கள் பரந்துபட்டவை. அவற்றுள் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகியோரின் தேவாரப் பாடல்கள் மற்றும் ஆழ்வார்களாகிய குலசேகராழ்வார், திருமங்கையாழ்வார் ஆகிய ஐவரின் பக்திப் பாடல்கள் உணர்த்தும் மனித உறவுகள் மட்டும் இங்கே கொடுக்கப்பட்டுள்ளன.

## திருஞானசம்பந்தரும் மனித உறவுகளும்

சீர்காழியில் அந்தணர் குலத்தில் சிவபாத இருதயருக்கும் பகவதியாருக்கும் மகனாக ஞானசம்பந்தர் தோன்றினார். பால் மணம் மாறாத சிறுவனாக இருந்தபோதே பாட்டுப் பாடத் தொடங்கித் 'தோடுடைய செவியன்' என இறைவனைத் துதித்தார். ஆளுடைய பிள்ளை, காழி வள்ளல் என்றெல்லாம் இவர் அழைக்கப்பட்டார். முதல் மூன்று திருமுறைகளாக இவர் பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன.

தலைவன் தலைவி பாவத்தில் பாடப்பட்ட திருஞான சம்பந்தரின் பாடல்கள் வாழ்வின் எளிமையை எடுத்துரைக்கின்றன. முதிர்ந்த ஆமை[illegible]னது ஓடும், இளமையான பாம்பும், பன்றியினது கொம்பும் ஆகிய[illegible]ற்றை அணிந்து, சதை வற்றிய மண்டை ஓட்டையே உண்கலனாகக் கொண்[illegible]டு, பிச்சையேற்று, என் உள்ளத்தை யானறியாமல் உடையவராகிய அடி[illegible]ர்கள் தன் பாதத்தைக் கையால் வணங்கிப் போற்ற இடப

வாகனத்தில் ஊர்ந்தவனும் பிரமாபுரத்தில் பொருந்தியவனும் ஆகிய பெருமான் இவன் என்று சிவபெருமானின் பெருமையை உள்ளடக்கி, அவரது எளிமையை எடுத்துரைக்கும் கீழ்வரும் பாடல் இறைவனே எளிய தோற்றத்துடன் காட்சி அளித்து, தம்மை நாடியவர்களுக்கு அருள் வழங்கும் தன்மையில் இருக்கிறபோது மனிதர்களாகிய நாம் வீணான பகட்டுக் கொண்டு நம்மை நாடி வருவோருக்கு இன்முகம் காட்டிப் பழகாமல் போவது அறமாகாது. மனிதப் பண்பாகாது என்பதை உணர்த்துவதாக அமைந்துள்ளது.

*முற்றல் ஆமையிள நாகமொடு ஏனம்*
*முளைக் கொம்பு அவை பூண்டு*
*வற்றலோடு கலனாப் பலி தேர்ந்தெனது*
*உள்ளம் கவர் கள்வன்*
*கற்றல் கேட்டல் உடையார் பெரியார்கழல்*
*கையால் தொழுது ஏத்தப்*
*பெற்றம் ஊர்ந்த பிரமாபுர மேவிய*
*பெம்மான் இவன் அன்றே*

(திருஞானசம்பந்தர் தேவாரம் தோடுடைய செவியன் பதிகம் - 2)

மனித உறவுகளை முறிக்கும் வலிமை ஆணவத்திற்கு உண்டு. அந்த ஆணவம் மனிதர்களிடம் இருக்குமாயின் அவர்களால் சக மனிதர்களோடு உண்மையான உறவை வளர்த்துக் கொள்ளுதல் இயலாது என்பதைத் திருஞானசம்பந்தர் உணர்த்துகின்றார். அதாவது பௌத்தரும் சமணரும் இல்வாழ்க்கையை வெறுத்துத் துறவு வாழ்க்கையை ஆதரிப்பவர்கள். மக்களையும் அவ்வாறே வழிகாட்டுபவர்கள். ஆனால் திருஞானசம்மந்தர் இல்வாழ்வில் இருந்துகொண்டே ஆணவம் என்ற பற்றை நீக்கிய துறவை மேற்கொண்டு வாழ வழிகாட்டுகிறார். அதனை இப்பாடல் உணரச் செய்கிறது.

*அருநெறிய மறை வல்ல முனியகன்*
*பொய்கையலர் மேய*
*பெரு நெறிய பிரமாபுர மேவிய*
*பெம்மான் இவன் தன்னை*
*ஒரு நெறிய மனம் வைத்துணர் ஞானசம்*
*பந்தன் உரை செய்த*
*திருநெறிய தமிழ்-வல்லவர் தொல்வினை*
*தீர்தல் எளிதாமே*

(திருஞானசம்மந்தர் தேவாரம் தோடுடைய செவியன் பதிகம் - 10)

திருஞானசம்மந்தரின் தேவாரப் பதிகங்கள் யாவும் இறைவனை வணங்குதலே கல்வியின் பயன்; மனிதர்களிடமுள்ள குறைகள் யாவும் அவனுடைய திருவடிகளை வணங்கினால் நீங்கும்; அத்திருவடிகளை இடைவிடாமல் வணங்கியவர் தங்கள் வினைகள் ஒழிந்து வீடுபேறு அடைவர்; அத்துடன் இப்பிறப்பில் உலகியல் சிறப்புகளை அடைந்து புகழ் பெறுவர்; மறுமையில் வீடு பெறுவர்; அதுமட்டுமன்றி உண்மையான இறைப்பற்று உடையவர்கள் மனித உறவுகளை மதித்து நடப்பர். ஆகவே, இம்மைப் பயனும் மறுமைப் பயனும் பெற்று மனித உறவுகளோடு மகிழ்ந்து வாழ இறைவனடிகளை வணங்குங்கள் என்று உணர்த்துவதாக அமைந்துள்ளன.

## திருநாவுக்கரசரும் மனித உறவுகளும்

மருள்நீக்கியார் என்னும் இயற்பெயருடைய திருநாவுக்கரசர் திருமுனைப் பாடி நாட்டில் திருவாமூரில் புகழனார்க்கும் மாதினியார்க்கும் மகவாகத் தோன்றினார். இளம் வயதிலேயே பெற்றோரை இழந்த இவர், தம் தமக்கையாராகிய திலகவதியாரால் வளர்க்கப்பட்டு வந்தார். சமணர் தம் சூழ்ச்சியால் இவர் அம்மதத்தில் சேர்ந்து ‘தருமசேனர்’ என்ற பெயருடன் வாழ்ந்து வந்தார். திலகவதியார் தம் தம்பி மீண்டு வர வேண்டுமென்று நோன்பு நோற்று இறைத்தொண்டு செய்து கொண்டிருந்தார். அதனால் இறைவனால் மருள்நீக்கியாருக்குச் சூலை நோய் ஏற்பட்டது. அதன்பிறகு மீண்டும் சைவம் சேர்ந்து திருநாவுக்கரசரானார்.

நாவுக்கரசர் சமணத்திலிருந்து சைவம் வந்த பிறகு சமணம் போற்றிய முதலாம் மகேந்திர பல்லவன் பல துன்பங்களை நாவுக்கரசருக்கு இழைத்தான். ஆனால் அதற்கெல்லாம் நாவுக்கரசர் பணியவில்லை. மனித உறவுகளை மையப்படுத்திய இல்வாழ்வைப் போற்றும் இறைக் கொள்கையிலிருந்து அவர் விலகவில்லை. உண்மை வழியில் நின்றார்.

இன்றைய காலக்கட்டத்தில் அதிகார வர்க்கத்தினர் அடிமைப் படுத்துகிறபோது அவர்களுக்குப் பணிந்து நடப்பவர்களும் அதிகார வர்க்கத்தினரிடம் ஆதாயம் தேடிச் சரண் அடைந்து அன்புறவுகளை இழப்பவர்களும் நிறையப் பேர் உள்ளனர். அத்தகைய அடிமை நிலை கூடாது என்பதை மனிதர்களுக்கு உணர்த்துவதாகக் கீழ்வரும் பாடிலடிகள் அமைந்துள்ளன.

*நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்*
*நரகத்தில் இடர்ப்படோம் நடலையில்லோம்*
*ஏமாப்போம் பிணியறியோம் பணிவோம் அல்லோம்*
*இன்பமே எந்நாளும் துன்பமில்லை*
*தாமார்க்கும் குடியல்லாத் தன்மையான*
*சங்கரன் நற்சங்கவெண் குழையோர் காதில்*
*கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்*
*கொய்மலர்ச் சேவடி இணையே குறுகினோமே*
(நாவுக்கரசர் தேவாரம் நாமார்க்கும் குடியல்லோம் பதிகம் - 1)

மனித உறவுகளைச் சிதைக்க வல்லது கோபம். தெரிந்தோ தெரியாமலோ ஒருவர் பிழை செய்துவிட்டால் அதற்காக அவரை வெறுத்து ஒதுக்கி விடுதல் கூடாது. அவர்கள் செய்த பிழையைச் சுட்டிக்காட்டி நல்வழிப்படுத்துதல் வேண்டும். இல்லையெனில் உறவுகள் முறியும். வாழ்க்கை சுவைக்காது. இது குடும்ப வாழ்க்கைக்கும் சமுதாய வாழ்க்கைக்கும் பொருந்துவதாகும். இறைவன் மனிதர்கள் செய்யும் பிழைகளை எல்லாம் பொறுத்துக் கொள்கிறார். அப்படி இருக்க மனிதர்களாகிய நாம் ஒருவருக்கொருவர் பிழை பொறுத்தல் வேண்டும் என்பதை நாவுக்கரசர் சுட்டுகின்றார்.

*உன்பால் அன்பர் பிழைபொறுத்தி என்பதுவும் பெரியோய்*
*நின்றன் கடனன்றே பேரருள் உன் பால தன்றே"*

மனித உறவுகளுக்கு ஆதாரமாய் விளங்குவது அன்பு. இந்த உணர்வே மனிதர்களைப் பிணைக்கின்றது. அதனால்தான் இந்த உலகைப் படைத்து, நிற்பன, நடப்பன, நிலம், நீர், நெருப்பு, காற்று ஆகிய அனைத்திலும் நிறைந்து நிற்கக் கூடிய இறைவன் அன்புணர்வுடையோருக்கே எளியனாகத் தோன்றி அருள்பாலித்து உறவு கொள்கிறான். இந்த உலக மனிதர்களும் அவ்வாறே இருத்தல் வேண்டும் என்பதையே நாவுக்கரசர் உணர்த்துகின்றார்.

*நிற்பனவும் நடப்பனவும் நிலனும் நீரும்*
*நெருப்பினொடு காற்றாகி நெடு வானாகி*
*அற்பமொடு பெருமையுமாய் அருமையாகி*
*அன்புடையார்க் கெளிமையதாய் அளக்கலாகாத்*

*தற்பரமாய்ச் சதா சிவமாய்த் தானும் யானும்*
*ஆகின்ற தன்மையனை நன்மை யோடும்*
*பொற்புடைய பேசக் கடவோம் பேயர்*
*பேசுவன பேசுதுமே பிழையற் றோமே*
(திருநாவுக்கரசர் தேவாரம் நாமார்க்கும் குடியல்லோம் பதிகம் - 7)

## சுந்தரர் பாடல்கள் உணர்த்தும் மனித உறவுகள்

சுந்தரர் திருமுனைப்பாடி நாட்டில் திருநாவலூரில் அந்தணர் மரபில் சடையனார்க்கும் இசைஞானியார்க்கும் மகனாகப் பிறந்தார். அவரை நரசிங்க முனையரையர் என்ற மன்னர் எடுத்து வளர்த்தார். முதற்கண் திருவெண்ணெய் நல்லூரில் மணமேடையில் சிவபெருமானால் தடுதாட் கொள்ளப்பட்டார். தம்பிரான் தோழர் நாவலூரார், வன் தொண்டர் என்றெல்லாம் அழைக்கப்பட்டார். இறைவனைப் "பித்தா பிறைசூடி" எனப் பாடத் தொடங்கினார். இவர் பாடல்களில் இயற்கை வருணனைகளும், வரலாற்றுச் செய்திகளும், நாடு நகர் பற்றிய குறிப்புகளும் மிகுதியாக உள்ளன. அவற்றோடு மனித உறவுகள் பற்றிய குறிப்புகளும் உணர்த்தப்படுகின்றன.

> *கொடிதாகிய வினைக்கடலில் தடுமாறுகின்ற உயிர்களுக்குக் கருணையினால் மிகவும் இரங்கி அருள் செய்த முக்தி பெறுதலாகிய பெருஞ் செல்வத்தைத் தருபவனும் தீமையை அழிப்பவனும், கருநிறம் பொருந்திய கழுத்தையும் எட்டுத் திருக்கரங்களையும் உடைய என் தலைவனும் இடப்பாகத்தில் உமையைக் கொண்டவனும் செவ்வானம் போலத் திருமேனி உடையவனும் பாம்பு ஆடப்பெற்ற சடையை உடையவனும் தன் புன்னகையால் திரிபுரங்களை அழித்தவனும் கெடில நதியின் வடபாலுள்ள திருவதிகை வீரட்டானத்தில் உள்ளவனுமான எம்பெருமானை ஒரு கணப்பொழுதும் நான் மறந்து அலட்சியம் செய்வேனோ*

என்று தனக்குள் கூறிக் கொள்வது போன்று அமைந்துள்ளன அவருடைய பாடலடிகள்.

அத்துடன் வினைக்கடலில் தடுமாறி இருக்கும் உயிர்களுக்கு இறைவன் அருள் செய்வதுபோன்று துன்பத்திலுள்ள மக்களுக்கு

மனிதர்களாகிய நாமும் உதவி செய்து உறவுகளுக்கு அன்பு காட்ட வேண்டும் என்பதையும் உணர்த்துகின்றார்.

*வெய்தாய வினைக்கடலில் தடுமாறும் உயிர்க்கு*
*மிக இரங்கி அருள்புரிந்து வீடுபேறு ஆக்கம்*
*பெய்தானைப் பிஞ்ஞகனை மைஞ்ஞவிலும் கண்டத்து*
*எண்தோள்எம் பெருமானைப் பெண்பாகம் ஒருபால்*
*செய்தானைச் செக்கர் வான் ஒளியானைத் தீவாய்"*
*அரவாடு சடையானைத் திரிபுரங்கள் மேவ*
*எய்தானை எறிகெடில வடிவீரட்டானத்து*
*உறைவானை இறைபோதும் இகழ்வன் போலி யானே"*
(சுந்தரர் தேவாரம் பிறைசூடி பதிகம் - 7)

## குலசேகராழ்வார் பாடல்கள் உணர்த்தும் மனித உறவுகள்

சேர நாட்டில் கொல்லி நகர் என்னும் தலைநகரில் அரசாண்ட 'திருட விரதன்' என்கிற அரசனுக்கு மகனாகக் குலசேகராழ்வார் பிறந்தார். அரச குமாரர்களுக்கு உரிய கலைகளைக் கற்றுப்பின் இளவரசரானார். மூவேந்தர்களையும் வென்று கொல்லிக் காவலன், கூடல் நாயகன், கோழிக்கோன், குலசேகரன் என்னும் விருதுகளைப் பெற்று வந்தார். பின்னர் இவருக்கு முடிசூட்டி மன்னர் வனம் அடைந்தார். ஓர் அரசகுமாரியை மணந்து 'திருடவிரதன்' என்ற ஒரு மகனையும், 'இளை' என்ற ஒரு மகளையும் பெற்றார். இராமாயணச் சொற்பொழிவை எப்போதும் கேட்டு வந்தார். வைணவர்களைக் கண்டால் சிறப்பாக உபசரிக்கும் பண்புடையவராய், அரச போகங்களில் பற்றற்று வாழ்ந்து வந்தார்.

குலசேகரர், திருவரங்கத்தின் பெருமையை அறிந்து அங்குச் சென்று பெரிய பெருமானைக் கண்டு வணங்க விரும்பினார். அவ்வாறு இவர் சென்றால் மீண்டு வரமாட்டார் என உணர்ந்த மந்திரிகள், இவர் புறப்பட இருந்த நாளன்று, பாகவதர்களை வரவழைத்தனர். இவரும் பயணத்தை நிறுத்திப் பாகவதர்களை உபசரித்தார். இவ்வாறு பலமுறை நிகழ்ந்தது. இதனால் அரண்மனையில் உள்ள அந்தரங்க இடங்களிலும் பாகவதர்கள் சென்று வந்தனர். அது கண்டு பொறுக்காத சில அமைச்சர்கள், இவர்களிடம் அரசனுக்கு வெறுப்பு உண்டாக்க நினைத்தனர். அதனால் ஒரு ஸ்ரீ ராமநவமி அன்று பெருமானுக்குத் திருமஞ்சனம் நடந்தபோது, உயர்ந்த முத்துமாலையை ஒளித்து வைத்தனர்.

பின் அர்ச்சகர்கள் மாலை இல்லை என்று கூற, அரசர் கள்வனைக் கண்டுபிடியுங்கள் என்றார். உடனே, அமைச்சர்கள், தடையின்றிச் செல்லும் பாகவதர்களே அதை எடுத்திருக்க வேண்டுமென்றனர். அது கேட்ட அரசர் கோபித்து, ஒரு நல்ல பாம்பைக் குடத்திலிட்டு, பாகவதர்கள் எடுத்திருந்தால் இது என்னைக் கடிக்கட்டும் என்று கூறினார். அப்பாம்பு அவரைத் தீண்டாது போகவே, மந்திரிகள் பயந்து உண்மையைக் கூறினர். பின்பு இவர், பொய்மைகளுக்கு இடமான அரசாட்சியைச் செய்ய விரும்பாமல், தன் மகனுக்கு முடிசூட்டி, திருவரங்கம் அடைந்து சேவித்து, தன் மகளையும் அரங்கனுக்கே மணம் செய்து கொடுத்து, குலசேகரன் வீதி என்னும் மூன்றாம் பிரகாரத்தைக் கட்டி மற்றும் பல கைங்கரியங்களைச் செய்து வாழ்ந்து வந்தார்.

குலசேகராழ்வார் அரசனாக இருந்தும் பக்தியின் பொருட்டு பாகவதர்களை மதித்துப் பணிவிடை செய்து அன்புறவு கொண்டார். அவர் எழுதிய பெருமாள் திருமொழியில் அன்பு நிறைந்த பரம்பரையாக வருகிற நல் உறவுமுறையை உடைய பெண்கள் தாங்கள் தங்கள் தொடைகளிலே முறைமுறையே வைத்துக் கொண்டு, என் அப்பனே, எங்கள் குலத்துக்கு ஒப்பற்றதொரு விளக்கமானவனே ! என்று இவ்வாறு பலவாகத் துதித்து, உன் தந்தையார் யார் ? காட்டு என்ற அளவிலே உன்னுடைய சிவந்த சிறந்த விரலினாலும், கடைக் கண்ணாலும் இன்னார் என் தந்தையார் என்று காட்ட அந்தப் பேற்றினை நந்தகோபர் பெற்றார். நல்வினையில்லாத என்னுடைய பதியான வசுதேவர் நந்தகோபர் பெற்ற பேற்றினைப் பெறவில்லையே என்று தேவகி கூறுவதாகக் கீழ்வரும் பாடலடிகள் அமைந்துள்ளன.

*முந்தை நன் மறையன் புடைமகளிர்*
*முறைமுறை தந்தம் குறங்கிடை யிருத்தி*
*எந்தையே ! என் தன் குலப் பெருஞ்சுடரே !*
*எழு முகில் கணத்தெழில் கவரேறே !*
*உந்தை யாவன் ? என்றுரைப்ப நின்செங்கேழ்*
*விரலினும் கடைக்கண்ணினும் காட்ட*
*நந்தன் பெற்றனன் ! நல்வினையில்லா*
*நங்கன்கோன் வசுதேவன் பெற்றிலனே !*

(பெருமாள் திருமொழி)

இப்பாடலில் கண்ணனின் அன்பு நந்தகோபனைத் தந்தையாக ஏற்றது அன்புறவால் நிகழ்ந்தது. பெற்றவர் இருந்தும் அன்பு காட்டி வளர்ப்பவர்களே உறவாகின்றனர். எனவே உறவின் அடிப்படை அன்பே என்பதை உணர்த்துகிறது.

## திருமங்கையாழ்வார் பாடல்கள் உணர்த்தும் மனித உறவுகள்

சோழநாட்டில் திருவாலி நாட்டில் திருக்குறையலூரில் கள்ளர் மரபில் நீலன் என்பவனின் மகனாகத் தோன்றினார். மாவீரராகத் திகழ்ந்த இவர், திருவாலி நாட்டின் மன்னனாகவும், சோழனுக்குப் படைத் தலைவனாகவும் பணியாற்றினார். இவரது இயற்பெயர் 'கலியன்'. கலிநாடன், அருள்மாரி போன்ற பல பெயர்களும் இவருக்கு உண்டு. பரம வைணவ குலத்தைச் சேர்ந்த குமுதவல்லி என்னும் பெண்ணை மணந்து மதமும் மனமும் மாறி, மனைவியின் விருப்பப்படி நாள்தோறும் 1008 அடியவர்களுக்கு அமுதுபடைத்து வந்தார். இதனால் சோழப் பேரரசனுக்குத் திறை செலுத்தவும் பொருளின்றி வருந்தி, திருமால் அருளால் பொருள் பெற்றுச் சோழனுக்கு அளித்தார். இவர் மன்னனாய் இருந்தமையால் திருமங்கை மன்னன் என்ற பெயரும் உண்டு.

அடியார்களுக்கு அமுது படைக்கப் பொருளின்றி ஆழ்வார் வழிப்பறியில் ஈடுபட்டார். வழிபறிக்கத் திருமணங் கொல்லையில் திருவரசின் மேல் பதுங்கிக் கிடந்தபோது திருமால் தம் தேவியுடன் மணமக்கள் கோலத்தில் வந்தார். ஆழ்வார் அவர்களிடமே நகைகளைப் பறித்து மூட்டையாகக் கட்டிக் கொண்டு ஓட முற்பட்டார். அப்போது அம்மூட்டையை அசைக்கவும் முடியாது திணறி, திருமாலை நோக்கி நீர்தான் ஏதோ மந்திரம் செய்துவிட்டீர் என்று சினம் கொண்டார். அம்மந்திரத்தை உனக்கும் கூறுகிறேன் என்று, திருமால் ஆழ்வாரை அருகழைத்து நாராயண மந்திரத்தை அவரது திருச்செவியில் சார்த்தி, தன் அடியவராய் ஆட்கொண்டார்.

திருமங்கையாழ்வார் எழுதிய சிறிய திருமடல் என்னும் நூல், 'சீவான்மா' எனப்படும் உயிர் 'பரமான்மா' எனப்படும் இறைவனைச் சென்று சேரும் நிலையே தலைவனை அடையத் துடிக்கும் தலைவியின் நிலையாக இங்கு உருவாக்கப்பட்டுள்ளது. இதனை 'நாயகன் நாயகி' பாவம் என்பர். அதாவது உயிர் தலைவியாகவும் (நாயகி) இறைவன் தலைவனாகவும் (நாயகன்) உருவகப்படுத்தப்பட்டுள்ளது.

திருமங்கையாழ்வாரின் சிறிய திருமடல் என்னும் நூல் உலகப் பற்றுகளில் முழுவதுமாக ஆட்பட்டுவிடாமல் இறை உறவையும் நாடி மக்கள் வாழ்தல் வேண்டும் என்பதை உணர்த்துவதாக அமைந்துள்ளது. திருமங்கையாழ்வார் இறைபக்தி பெறுவதற்குக் காரணமானவர் அவரது மனைவியாவார். இல்வாழ்வின் துணையான மனைவி என்னும் உறவே அவரை இறைபக்தி அடையச் செய்தது. எனவே இல்லறம் என்பது நல்லறமாக இருந்து நல்லுறவால் வளர்ந்து வந்தால் எளிதில் இறையுறவு கிடைக்கும் என்பதையே திருமங்கையாழ்வாரின் வாழ்வும் பணியும் உணர்த்துகின்றன.

தமிழ் இலக்கிய வரலாற்றில் பக்தி இலக்கியம் என்பது ஒரு பரந்துபட்ட நிலை உடையது. சைவ அடியார்களும் வைணவ அடியார்களும் இறைவனையும் இறையடியார்களையும் போற்றி வாழ்ந்தார்கள். அவர்களுக்குத் தொண்டு செய்தார்கள். அதற்காக இல்வாழ்க்கையை விட்டுச் செல்லவில்லை. இல்வாழ்க்கையில் இருந்து பிறகு இறையுறவைப் பெற்றவர்கள் சிலர். இல்வாழ்க்கையில் இருந்துகொண்டே இறைவனுக்கும் அடியார்களுக்கும் தொண்டு செய்து இறையுறவைப் பெற்றவர்கள் சிலர். எப்படியேனும் இல்வாழ்க்கையை வெறுத்துத் துறவு பூண்டு இறைவனைத் தேடவில்லை.

சமணர்களும் பௌத்தர்களும் வாழ்வில் பற்றை விடச் சொன்னார்கள். அத்துடன் துறவை வலியுறுத்தினர். ஆனால் சைவ வைணவர்கள் இல்வாழ்க்கை என்னும் உறவை மதித்து, அதே நேரத்தில் அதில் சூழ்ந்துவிடாமல் இறையுறவை நாடவேண்டும் என்பதையும் அதற்கான வழிமுறைகளையும் தமது வாழ்க்கையிலும் பாடிய பாடல்கள் மூலமாகவும் எடுத்துரைத்தார்கள். எனவே பக்தி இலக்கியங்கள் நேரடியாகவும் மறைமுகமாகவும் மனித உறவுகளைச் சுட்டுவதை அறியலாம்.

## திருவாசகத்தில் மனித உறவுகள்

"திருவாசகத்திற்கு உருகாதார் ஒரு வாசகத்திற்கும் உருகார்" என்னும் பொன்மொழி யாவரும் அறிந்ததே. கல்லையும் கனிய வைக்கும் தன்மை வாய்ந்தது. தேன் கலந்து, பால் கலந்து, செழுங்கனி தீஞ்சுவை கலந்து என் ஊன் கலந்து உயிர் கலந்து உவட்டாமல் இனிக்கும் தன்மை

வாய்ந்தது திருவாசகம் என்கிறார் இராமலிங்க அடிகள். திருவாசகத்தைப் படித்த மக்கள் எல்லாம் மனம் உருகி, ஊன் உருகி, உயிர் உருகிப் பாடுவதற்கு என்ன காரணமாக இருக்கும் என்ற ஐயம் எழுகின்ற மக்கள் திருவாசகத்தைப் படிக்கின்றபோது உண்மைதான் என்று உள்ளம் உருகிப் போவார்கள். அந்த வகையில் திருவாசகத்தைப் படித்தபோது இறைவனின் பெருமைகளையும், இறைவனின் இரக்கத்தையும், இறைவன் செய்யும் அற்புதங்களையும் எடுத்துரைக்கும் திருவாசகத்தினுள் மனித வாழ்க்கையின் அடிப்படையான உறவுகளின் பண்புகள் குறித்தும் உணர்த்தப்படுகின்றன.

திருவாசகத்தை இயற்றிய மாணிக்கவாசகரின் பிறப்புக் குறித்து ஒரு புராணவரலாறு உள்ளது. அதாவது ஆகம நூல்களின் கருத்துகளைப் பற்றிச் சிவகணங்கள் சிவபெருமானிடம் கேட்டுக் கொண்டதால் சிவபெருமான் ஆகமத்தின் ஆழமான பொருளைக் கூறிக் கொண்டிருந்தார். அப்பொழுது ஒரு சிவகணம் மட்டும் கவனத்தைச் சிதறவிட்டு இருப்பதைக் கண்ட சிவன் மண்ணுலகில் பிறக்கும்படி கூறினார். மன்னித்து அருளும்படி சிவகணம் வேண்டவும் சிவன் சிவகணத்திடம் நீ மண்ணுலகில் பிறந்தாலும் எப்பொழுதும் என் நினைவாக இருப்பாய். குறித்த நேரத்தில் நீ தடுத்தாட் கொள்ளப்படுவாய் என்று கூறினார். அதன்படி திருவாதவூரில் வாதவூரன் பிறக்கிறார். உரிய நேரத்தில் இறைவனால் தடுத்தாட் கொள்ளப்படுகிறார். இறைவனின் திருத்தலங்களைத் தரிசித்து, இறைவன் புகழ்பாடித் தல யாத்திரை தொடங்கினார். அப்பொழுது பாடிய பாடல்களே திருவாசகப் பாடல்களாகும். அப்பாடல்கள் யாவும் இம்மைக்கும் மறுமைக்கும் மனிதர்களுக்கு நன்மை அளிப்பதாகும். அவற்றுள் மனித உறவுகளுக்கு அடிப்படையான பண்புகளும் மறைந்துள்ளன.

இந்த உலகத்தைப் படைத்த இறைவன் முதலும் முடிவும் இல்லாதவன். மக்கள் செய்கின்ற நல்வினை தீவினைகளுக்கு ஏற்றவாறு, வீடுபேற்றையும் பந்தமாகிய பிறவிப்பேற்றையும் வகுப்பவன். அசையாப் பொருள்களாகவும், அசையும் பொருள்களாகவும் விளங்கி நிற்பவன். யுகங்களின் தோற்றங்களையும் அவற்றின் முடிவுகளையும் கண்டவன். யாராக இருந்தாலும் அவரவர் நினைக்கும் வண்ணம் அருளை வழங்கும்

தலைவனாக விளங்குபவன். எவருடைய சிந்தையாலும் செயலாலும் எண்ணத்திற்கும் சொல்லுதற்கும் அரியவன் என்னும் கருத்தைக் கீழ்வரும் பாடலடிகள் சுட்டுகின்றன.

*அந்தமும் ஆதியும் அகன்றோன் காண்க*
*பந்தமும் வீடும் படைப்போன் காண்க*
*நிற்பதுஞ் செல்வதும் ஆனோன் காண்க*
*கற்பமும் இறுதியும் கண்டோன் காண்க*
*யாவரும் பெறவுறும் ஈசன் காண்க*

(திருவாசகம், திருவண்டப்பகுதி- 51-55)

இந்த உலகைப் படைத்த இறைவன் மனிதர்களுக்குச் செய்திருக்கும் நன்மைகள் எண்ணிலடங்கா. அத்தனை நன்மைகளுக்கும் நம்மால் நன்றி கூற இயலாது. என்வே நம்மால் முடிந்த கைம்மாறு இறைவனைப் போற்றுவதுதான். அத்தகைய கைம்மாறு கொடுத்தலைக் கீழ்வரும் பாடல் சுட்டுகின்றது.

போற்றியென்றும் புரண்டும் புகழ்ந்தும் நின்று
ஆற்றல் மிக்க அன்பால் அழைக்கின்றிலேன்
ஏற்று வந்தெதிர் தாமரைத் தாளுறும்
கூற்ற மன்னதோர் கொள்கையென் கொள்கையே

(திருவாசகம், திருச்சதகம்- 49)

வணக்கம் என்று வாயாரச் சொல்லியும், தரையில் உடல் முழுமையும் தோயுமாறு புரண்டும், இறைவா உன்னைப் பலவாறு புகழ்ந்து பாடியும், அவ்வாறே உறுதியுடன் நிலைத்தபடி உரிமையோடு கூடிய உள்ளத்து அன்பினால் உன்னை அழைக்கின்றிலேன். முன்னர்ப் பகைகொண்டு வந்து, பின்னர்ப் பணிவுடன் உன்னுடைய தாமரைத் திருவடிகளைச் சரணடைந்த கூற்றுவனைப் போன்றதாகிய ஒரு கோட்பாடே எனது கோட்பாடு என்கிறார் மாணிக்கவாசகர். இறைவனிடம் நன்றியுடன் இருத்தல் என்பது மனித உறவுகளிலும் நன்றி என்னும் பண்பு அவசியம் என்பதையும் பகைமை உணர்வுகள் இருக்கும் இடங்களிலும் பணிவு கொண்டு பழகும்போது உறவுகள் வலுப்பெறும் என்பதையும் உணர்த்துகின்றார்,

*மதியில் தண்மை வைத்தோன் திண்டிறல்*
*தீயில் வெம்மை செய்தோன் பொய்தீர்*
*வானிற் கலப்பு வைத்தோன் மேதகு*
*காலின் ஊக்கங் கண்டோன் நிழல்திகழ்*
*நீரில் இன்சுவை நிகழ்ந்தோன் வெளிப்பட"*

(திருவாசகம், திருச்சதகம்- 21-25)

என்னும் பாடலில் இறைவன் படைத்த இயற்கையின் அற்புதத்தைக் குறிப்பிடுகின்றார். திங்களில் தட்பத்தை வைத்தவன். பேராற்றல் வாய்ந்த கதிர் நெருப்பில் வெப்பத்தை உண்டாக்கியவன். பொய்ம்மை நீங்கிய மெய்ம்மையான விண்ணில், இவை அனைத்தையும் கலந்திருக்கச் செய்தவன். மேவிச் சென்றிடும் காற்றுக்கு வேகத்தைக் கண்டவன். நிழல் விளங்கும் நீரில், இனிய சுவையினை நிகழ்த்தியவன். இறைவன் எல்லாமானவன், எல்லாமே அவனாவான். அப்படி இருக்க மனிதர்களுக்குள் ஏற்றத் தாழ்வுகளை உண்டாக்கிக் கொண்டு உறவுகள் அழியுமாறு வாழ்வது ஏற்புடையதாகாது என்பதை உணர்த்துகின்றார்.

யான் எனது பொய்யினால் உன்னுடைய மெய்யான அன்பினைப் பெற முடியாத தன்மையை அடைந்துவிட்டேன். பொய்யையும் ஆணவத்தையும் விட்ட அடியார்கள் உன் நெறியுடன் வந்து சேர்ந்தனர். சிறப்பான செயல்களையும் செய்து புகழ் பெற்றனர் என்னும் கருத்தை உணர்த்தும் பாடல் வழி மனித உறவுகளுக்குள்ளும் பொய்மையும் ஆணவமும் இருந்தால் அது அழிவையே ஏற்படுத்தும். வாழும் போதும் மறையும் போதும் இவை இரண்டையும் விட்டொழித்தாலே மண்ணில் மனித உறவையும் விண்ணில் இறையுறவையும் ஏற்படுத்திக் கொள்ள இயலும் என்பதை உட்பொருளாக உணர்த்துகின்றது.

*புறமே போந்தோம் பொய்யும்*
*யானும் மெய்யன்பு*
*பெறவே வல்லேன் அல்லா*
*வண்ணம் பெற்றேன் யான்*

*அறமே நின்னைச் சேர்ந்த அடியார்*
*மற்றொன் றறியாதார்*
*சிறவே செய்து வழுவாது சிவனே*
*நின்தாள் சேர்ந்தாரே*

(திருவாசகம், திருச்சதகம் - 90)

இறைவன் பொய்மை நீங்கிய மெய்ம்மை வடிவானவன். அத்தகைய இறைவனைப் பணிந்து கொண்டால் பழைய வினைகள் நீங்கும். எனவே இறைவனிடம் நெருங்கவிடாமல் தடுப்பது மனிதர்களிடம் குடிகொண்டுள்ள பொய்மையே காரணமாகும். அத்தகைய பொய்மை என்னும் பண்பை மனிதன் விடுகிறபோதுதான் இறைவனிடம் மெய்யுறவு ஏற்படும் என்னும் கருத்தை வெளிப்படையாகச் சுட்டும் பாடல் வழி, உலக வாழ்வில் பொய்மையை விடுகிறபோதுதான் இம்மைக்குரிய உறவில் நன்மையும் மகிழ்ச்சியும் ஏற்படும் என்பதை உட்பொருளாக உணர்த்துகின்றார்.

*பணிவார் பிணிதீர்த்தருளிப்*
*பழைய அடியார்க் குன்*
*அணியார் பாதங் கொடுத்தி*
*அதுவும் அரிதென்றால்*
*திணியார் மூங்கிலனை யென்*
*வினையைப் பொடியாக்கித்*
*தணியார் பாதம் வந்தொல்லை*
*தாராய் பொய்தீர் மெய்யானே*

(திருவாசகம், திருச்சதகம் - 93)

இறைவன் கொடுமனம் படைத்தவர்களையும் கல்நெஞ்சம் படைத்தவர்களையும் மன்னித்து வெறுத்து ஒதுக்காமல் அவர்கள் நெஞ்சம் கரையும் வண்ணம் நன்மைகளைச் செய்து ஆட்கொள்ளும் அழகு வாய்ந்த உயர்ந்தவன். அத்தகைய இறைவன் தன்னை ஆட்கொண்டு அருள் செய்தவன். அத்தகைய உயரியவனை வாழ்த்தி வணங்குகின்றார் மாணிக்கவாசகர். இறைவன் பாதகநெஞ்சம் படைத்தவர்களை ஏற்றுக் கொள்வது போன்று மக்கள் செய்யமாட்டார்கள். கொடுமனம் படைத்தவர்களையும் கல்நெஞ்சம் படைத்தவர்களையும் உறவுகளாக ஏற்க

மாட்டார்கள். அத்தகையவர்களைக் கண்டு அஞ்சுவார்கள். எனவே வன்மையான நெஞ்சங்களை மென்மையான இதயங்களாக மாற்றிக் கொண்டால் மட்டுமே நல்லுறவுகள் வளரும். வாழ்வில் அமைதி நிலவும் என்பதை உணர்த்துகின்றார்.

*வன்னெஞ்சக் கள்வன் மனவலியன் என்னாதே*
*கன்னெஞ் சுருக்கிக் கருணையினால் ஆண்டுகொண்ட*
*அன்னந்திளைக்கும் அணிதில்லை அம்பலவன்*
*பொன்னங்கழலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ*

(திருவாசகம் - திருகோத்தும்பீ - 225)

மனித வாழ்க்கை என்றாவது ஒருநாள் மறையக் கூடியது. நோய் வாய்ப்பட்டு, முதுமையடைந்து, நடக்க இயலாமல் தாய்ப் பசுவால் தள்ளப்படுகின்ற கன்றினைப் போல நான் இருந்தேன். நாயானது தான் பெற்ற பொருட் செல்வத்தை அறிந்து கொண்டு விரும்புவதில்லை. அதைப்போன்றே அருட்செல்வத்தின் அருமையை அறிந்து விரும்பாதவனாக அடியேன் இருந்து வந்தேன். அத்தகைய நாயடியேனைத் தாயின் தண்ணருள் கொண்டபடி என்னை வந்து ஆட்கொண்டான். அத்தகைய இறைவனை வாழ்த்திப்பாடுவதாக மாணிக்கவாசகர் எடுத்துரைக்கின்றார். நோய் ஏற்படுகின்றபோதும், மூப்பு ஏற்படுகின்ற போதும் பிறரின் உதவி தேவைப்படுகின்றது. எந்த உறவுகளும் இல்லாதவர்கள் அனாதைகளாகத் துன்பப்படுகிறார்கள். நோயற்று இருக்கிற போதும் மற்றவர்களிடம் கனிவாகப் பேசி, கனிவாக நடந்து நல்லுறவுகளை வளர்த்துக் கொண்டிருந்தால் நோய் வருகிற போதும் மூப்பு வருகிறபோதும் உறவுகள் கை கொடுக்கும். எனவே தமது நிலைமை நன்றாக இருக்கும்போது ஆணவம் கொள்ளாமல் நல்லுறவுகளை வளர்த்துக் கொள்ளுதல் தேவை. இறைவனைப் போன்று மனிதர்கள் உதவ மாட்டார்கள்.

*நோயுற்று மூத்து நான் நுந்து கன்றாயிங்கிருந்து*
*நாயுற்ற செல்வம் நயந்தறியா வண்ணமெல்லாம்*
*தாயுற்று வந்தென்னை ஆண்டுகொண்ட தன் கருணைத்*
*தேயுற்ற செல்வற்கே சென்றூதாய் கோத்தும்பீ*

(திருவாசகம் - திருகோத்தும்பீ - 224)

இந்த உலகில் வாழ்கின்ற மக்கள் அனைவரும் பொய்யான செல்வத்தை மெய்யான செல்வமெனக் கருதி, அதனுள் மூழ்கி அன்றாடம் கிடந்துழன்ற அடியேனை இறைவன் ஆட்கொண்டான். எனவே, நீ அவனிடத்தில் சென்று, தலைவா ! என்னுடைய அருமையான உயிரே ! என்று சொல்லிப் பாடுவாயாக என்று தும்பியிடம் மாணிக்கவாசகர் கூறுவதாக அமைந்துள்ள பாடலின் கருத்திற்குள் மனித உறவுகள் சார்ந்த அறம் மறைந்துள்ளது. இந்த உலகில் உள்ள அனைத்துமே பொய்யானவை. நிலையில்லாதவை. அதனை உணராமல் மனிதர்கள் பொய்யானவற்றை மெய்யானதாக நினைத்து ஒருவரை ஒருவர் பகைத்துக் கொண்டு உறவுகளை அழித்துக் கொள்கின்றனர். மனித உறவுகளை வளர்த்துக் கொள்ள இயலாதவர்கள் இறையுறவை நாடுவது இயலாது.

*பொய்யாய செல்வத்தே புக்கழுந்தி நாள்தோறும்*
*மெய்யாக் கருதிக் கிடந்தேனை ஆட்கொண்ட*
*ஐயா என் ஆருயிரே அம்பலவா என்றவன்றன்*
*செய்யார் மலரடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ !*

**(திருவாசகம் திருகோத்தும்பீ - 231)**

இந்த உலகில் வாழும் மக்களுள் பலர் பழிபாவத்திற்கு அஞ்சாமல் வாழ்கிறார்கள். அழிகின்ற உடலை நிலையானதாக நினைத்து அறமல்லாத செயல்களைச் செய்கிறார்கள். இவற்றை எல்லாம் இறைவன் நம்பிக்கை அற்றுப்போய் உள்ளவர்களும் பொய்யான பக்தர்களாக வேடந்தரித்தவர் களுமே செய்கிறார்கள். அத்தகைய இறை அச்சம் அற்றவர்களைக் கண்டு தாம் அஞ்சுவதாக மாணிக்கவாசகர் பாடுகின்றார். பழிபாவத்திற்கு அஞ்சி வாழும் மக்களே அறவழியில் வாழ முடியும். அவர்களே இம்மையில் நல்லுறவுகளை வளர்த்துக் கொள்ள இயலும்.

*தகையிலாப் பழியும் அஞ்சேன்*
*சாதலை முன்னம் அஞ்சேன்*
*புகைமுகந் தெரிகை வீசிப்*
*பொலிந்த அம்பலத்துளாடும்*
*முகைநகைக் கொன்றை மாலை*
*முன்னவன் பாத மேத்தி*

*அகம் நெகா தவரைக் கண்டால்*
*அம்மநாம் அஞ்சுமாறே*

(திருவாசகம் - அச்சப்பத்து - 520)

மனித உருவில் இருந்துகொண்டு விலங்குகள் செய்கின்ற செயல்களைச் செய்யும் நல்லொழுக்கம் அற்றவர்கள் தோற்பாவை போன்று பழிபாவக் களியாட்டங்களில் விழுந்து கிடக்கின்றனர். அத்தகையவர்கள் இந்த உலகில் மனித உறவுகளை மதிக்கத் தெரியாதவர்கள். அத்தகையவர்கள் நல்லுறவுகளை வளர்த்துக் கொள்ளுதல் இயலாதது. இந்த உலகிலேயே மனிதர்களிடம் பண்பான உறவை வளர்க்க இயலாதவர்கள் நிச்சயமாக விண்ணுலகில் இறைவனின் உறவைப் பெறுதல் இயலாதது.

*சீலமின்றி நோன்பின்றிச்*
*செறிவேயின்றி அறிவின்றித்*
*தோலின் பாவைக் கூத்தாட்டாய்ச்*
*சுழன்று விழுந்து கிடப்பேனை*
*மாலுங்காட்டி வழிகாட்டி*
*வாரா உலக நெறியேறக்*
*கோலங்காட்டி ஆண்டானைக்*
*கொடியேன் என்றோ கூடுவதே*

(திருவாசகம் - ஆனந்தமாலை - 643)

ஒருநாளின் பாதியெனும் இரவில், நன்றாக உறங்குவேன். மறுபாதியெனும் பகலில் என்னுடைய வயிற்றுக்கே இரைதேடித் துன்பத்தில் சிக்கித் தவித்து, உடலைவிட்டு உயிரானது பிரிந்து, விழுந்துபடவும் இருந்தேன் நான். அத்தகைய தன்மை படைத்த அடியேனை என்னுடைய சாதி, குலம், பிறப்பு ஆகிய அனைத்தையும் அறுத்தெறிந்து இந்த உலகம் அறியுமாறு ஆண்டு கொண்ட முதற்பொருளானவன் அவன். அத்தகையவன் எனக்கு அருள் செய்ததைப் போன்று அவனுடைய அந்த அருளை வேறு எவரால் தான் பெற இயலும். இஃது ஓர் அதிசயமே என்று கீழ்வரும் பாடலில் இறைவனின் தன்மையை வியக்கிறார் மாணிக்கவாசகர். வெளிப்படையாக மேற்கூறிய இக்கருத்தைக் கீழ்வரும் பாடல் உணர்த்தினாலும் மறைமுகமாக இந்த

உலகில் உறக்கமும் உணவுமே முக்கியமானதாக நினைத்துப் பிறரின் உணர்வுகளை மதிக்காமல் தான் மட்டுமே வாழ வேண்டும் என்று சுயநலப் போக்கில் வாழ்பவர்கள் ஒருநாள் மடிந்துதான் போவார்கள். இந்த உலக மக்களிடம் பண்புடன் பழகத் தெரியாதவர்கள் இறைவனின் அன்பைப் பெற்று நற்கதி அடைவது நிச்சயமாக இயலாதது. அதனால் இந்த உலக வாழ்வில் நற்பண்புகளுடன் வாழ்தல் முதன்மையானது. அதன் பிறகே இறைவனின் திருவடிகளை அடைய இயலும்.

*பாதி எனும் இரவுறங்கிப் பகலெமக்கே யிரைதேடி*
*வேதனையால் அகப்பட்டு வெந்து விழக்கடவேனைச்*
*சாதிகுலம் பிறப்பறுத்துச் சகமறிய எனையாண்ட*
*ஆதியெனக் கருளிய வாறார் பெறுவார் அச்சோவே*

(திருவாசகம் - **661**)

திருவாசகம் என்னும் பக்திச் சுவை நிரம்பி, நெஞ்சையும் கனிவிக்கும் திருப்பாடல்களில் மாணிக்கவாசகர் இறைவனின் பெருமை களையும், இறைவனின் அருளையும் இறைவனின் அற்புதங்களையும் எடுத்துரைத்து, நமச்சிவாய வாழ்க, நாதன் தாள் வாழ்க, இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க என்று வாயார நெஞ்சாரப் போற்றினாலும் உட்பொருளாக இந்த உலக வாழ்விற்குரிய அறங்களையும் எடுத்துரைக்கின்றார். அதாவது இம்மைக்குரிய பண்புகளை உடையவர்கள் மனித உறவுகளை மதித்து நடப்பவர்களாகிய ஒழுக்கமான வழியில் வாழ்பவர்கள் மட்டுமே விண்ணுலகில் இறைவனின் அருளைப் பெற்று வீடுபேறு அடைய இயலும் என்பதை உணரச் செய்கின்றார் என்ற கருத்தை அறியலாம்.

## பெரியபுராணம் காட்டும் மனித உறவுகள்

தமிழ் இலக்கிய வரலாற்றில் பக்தி இலக்கியம் என்பது மிகப் பெரிய இடத்தைப் பெற்றுள்ளது. அவற்றுள் சைவம் சார்ந்த தமிழ்ப் புராணங்களில் சிறந்து விளங்குபவை மூன்றாகும். அவை திருத்தொண்டர் புராணம் எனப்படும் பெரிய புராணம், திருவிளையாடற் புராணம், கந்தபுராணம் என்பனவாகும். இவற்றுள் இறைவன் பால் அன்பு செலுத்தி வீடெய்திய தமிழ்நாட்டு மெய்த்தொண்டர் வரலாறுகளைத் தொகுத்துப் பெருங்காப்பிய நயங்களோடு செவ்வையுறக் கூறுவது பெரியபுராணம் ஒன்றேயாகும்.

இப்புராணமானது தமிழ்நாட்டில் வரலாற்றுக்குட்பட்ட காலத்தில், ஊரும் பேரும் உசாவியறியத் தக்க பல்வகை மரபுகளிலும் தோன்றித் திகழ்ந்த பயன் கருதாது பேரன்புடன் இறைவனை வழிபட்டு, திருவருள் பெற்ற சிவனடியார்களின் வரலாறுகளைத் தொகுத்துக் கூறுகிறது. இது உயர்வு நவிற்சியின்றி இணையற்ற இனிய செந்தமிழ் நடையில் கூறுகிறது. தேவாரம், திருவாசகம் போலத் தோத்திரப் பாடல்களாக மட்டுமல்லாமல் நாயன்மார் வரலாறு மூலம் பக்தி நெறியை வளர்க்கும் பாடல் தொகுப்பாகப் பெரியபுராணம் அமைந்துள்ளது.

சேக்கிழார் திருத்தொண்டர் சீர்பரவும் செஞ்சொற் காப்பியத்தை 'எடுக்கும் மாக்கதை' என்று கூறினார். அவர் தமது நூலுக்குப் பெரியபுராணம் என்று பெயர் சூட்டவில்லை. இதற்குத் திருத்தொண்டர் புராணம் என்று பெயர் வழங்கினார்.

1. பெரியோர் வரலாற்றைக் கூறுவதாலும்,
2. ஓதுவோருக்குப் பேசரிய பெருமை சேர்ப்பதாலும்,
3. பிறவாயாக்கைப் பெரியோனாகிய சிவபெருமானின் பெருமையை விளக்குவதாலும்,
4. அப்பெரியோன் அடியார்க்கு எளியனாக எழுந்தருளிய அருமையை விளக்குவதாலும்,
5. முன்னும் பின்னும் இதனையொத்த பெருநூல் தோன்றாமையாலும்,

இது பெரியபுராணம் என்று பாராட்டப்படுகிறது.

புராணம் என்று உலக வழக்கில் கூறப்பட்டாலும் பெரியபுராணம் புனைந்துரை நூல் அன்று. அஃதொரு வரலாற்று நூல். வாழ்வாங்கு வாழ்ந்த சான்றோர்களின் சரித நூல். பக்திச்சுவை நலம் பாரிக்கும் பெருநூல். அன்பர் அன்பினை இடையறாது விளைவிக்கும் இன் தமிழ் மறை நூல். திசையனைத்தின் பெருமையெல்லாம் தென்திசையே வென்றேறச் செய்த திருநூல். தமிழ்மொழியின் இசை முழுவதும் மெய்யுறக்கொண்டு விளங்கும் முழு முதல்நூல்.

தொண்டர்சீர் பரவுவார் எனப்படும் சேக்கிழாரால் எழுதப்பட்டது பெரிய புராணம். சுந்தரமூர்த்தி நாயனார் அறுபது நாயன்மார்களைப்

பற்றித் திருத்தொண்டத் தொகை என்பதைப் பதினொரு பாடல்களால் பாடினார். இவர் காலம் கி.பி. எட்டாம் நூற்றாண்டு. பின்பு வந்த நம்பியாண்டார் நம்பி கி.பி. 11ஆம் நூற்றாண்டில், திருத்தொண்டத் தொகையில் குறிப்பிட்ட தொகையடியார் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு பாடல் வீதம் 89 பாடல்களான திருத்தொண்டத் திருவந்தாதியைப் பாடினார். சுந்தரர் பாடிய அறுபதின்மருடன் சுந்தரர், அவர் தந்தை சடையநாயனார், தாய் இசைஞானியார் ஆகிய மூவரைச் சேர்த்து அறுபத்து மூவரையே அந்தாதி விளக்கியது. அதன் பிறகு பன்னிரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் அருண்மொழித் தேவர் என்ற சேக்கிழார் தோன்றி, அதனை விரித்துப் பாடினார். 12 சருக்கங்களையும் நாலாயிரத் திற்கு மேற்பட்ட பாடல்களையும் கொண்டது இப்பெருங்காப்பியம்.

காப்பியத் தலைவராகச் சுந்தரரை அமைத்து, அவர் கதையில் தொடங்கி, அவர் கதையுடனேயே முடிக்கவும் செய்கிறார். சுந்தரர் கைலாயத்திலிருந்து புறப்பட்டு மண்ணுலகிற் பிறந்து தம் மனைவியருடன் வாழ்ந்து மீண்டும் கைலாயம் சென்று சேர்ந்தது வரை கதைக்கோப்பு அமைகிறது. நாயன்மார்களிடத்தில் சேக்கிழார் கொண்டிருந்த பக்தி அளவிடற்கரியது. அவர்களின் பெருமித வாழ்வை விளக்குமிடத்தில்,

*கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்*
*ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்*
*கூடும் அன்பினில் கும்பிடலே அன்றி*
*வீடும் வேண்டா விறலின் விளங்கினார்*

எனச் சிறப்பாக எடுத்துரைக்கின்றார். மேலும்,

*பெருமையால் தம்மை ஒப்பார்*
*பேணலால் எம்மைப் பெற்றார்*
*ஒருமையால் உலகை வெல்வார்*
*ஊனமேல் ஒன்றும் இல்லார்*
*அருமையாம் நிலையில் நின்றார்*
*அன்பினால் இன்பம் ஆர்வார்*
*இருமையும் கடந்து நின்றார்*
*இவரை நீ அடைவாய்*

என அடியார் பெருமையை அவர் குறிப்பிடுகிறார்.

இல்வாழ்க்கையில் நாயன்மார்கள் ஈடுபட்டு இருந்தாலும் அவர்களின் வாழ்க்கை இலட்சியம் இறைவனுக்கும், இறைவன் அடியார்க்கும் தொண்டு செய்வதாகவே அமைந்திருந்தது. தன் பிள்ளையைக் கொன்று அடியார்க்கு உணவு சமைத்துக் கொடுத்ததும், சிவனடியார்க்குத் தொண்டு செய்யத் தன் மனைவியையே அனுப்பியதும், அடியார் வடிவில் வந்து தன்னைக் கொன்றவனை மன்னித்து அனுப்பியதுமான எல்லாச் செயல்பாடுகளும் இலட்சியத்தை மையப் படுத்தியவையே. பெரியபுராணம் காப்பியப் பண்புகள் நிரம்பிய புராணம் என்ற பெயர் தாங்கிய காப்பியமாகும்.

பெரியபுராணம் இல்லற வாழ்வில் இருந்து கொண்டு துறவற மனநிலையில் வாழ்ந்த அடியவர் வரலாறாகும். அன்பும் அருளும் கொண்ட மனித உறவுகளின் வாழ்வியல் பின்னல்களே பெரியபுராணம். சுந்தரரை வைத்தே பல அடியார் வரலாறுகளைத் தொடர்புபடுத்திக் கூறும் இந்நூல் உண்மைகள், உணர்வுகள், உந்துதல்கள் இவற்றை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்ட நூலாகத் திகழ்கிறது.

பெரியபுராணத்தில் காட்டப்படும் மனித உறவுகளை மூன்று நிலைகளில் பிரித்துக் காணலாம்.

## 1. அன்புறவு

உறவுகளுக்கு அடிப்படையாக இருப்பது அன்பு என்னும் உணர்வு. இந்த உணர்வை வெறும் வாய்வார்த்தையால் உணர இயலாது. செயலில் மட்டுமே அறிய இயலும். அதுவும் இல்வாழ்க்கைக்கு அன்பு மிகவும் அவசியம். அப்போதுதான் உறவு என்ற சொல்லிற்கே பொருள் இருக்கும் பெரியபுராணம் கூறும் அறுபத்து மூன்று நாயன்மார்களுள் இளையான்குடி என்னும் ஊரில் வசித்த மாறனார் என்பவரின் இல்வாழ்க்கை அன்பை அடிப்படையாகக் கொண்ட உறவால் அமைந்திருந்தது.

சிவனடியார்களுக்கு உணவளித்து அன்புடன் உபசரிப்பதைத் தமது கொள்கையாகக் கொண்டவர் மாறனார் என்ற செல்வந்தர். அவர் கொள்கைக்கு எள் முனையளவும் முகம் கோணாமல் ஒத்துழைத்து வாழ்ந்து வந்தார் அவரது மனைவியார். செல்வம் தேய்ந்து வறுமை வந்தது. அந்தச் சமயத்திலும் வீட்டிலுள்ள பொருட்களை விற்று அடியார்களுக்கு உணவளித்து உபசரித்து வந்தார்கள்.

விற்பதற்கு எந்தப் பொருட்களும் இல்லாத நிலை ஒன்று வந்தது. கணவனும் மனைவியும் பட்டினியால் வாடி இருந்தனர். நல்ல கும்மிருட்டு. இரவு நேரம். மழைபெய்து கொண்டிருந்தது. அந்த வேளையில் ஒரு சிவனடியார் வந்துவிட்டார். அவரை வரவேற்று மழையில் நனைந்த ஈரத்தைத் துடைத்து ஓர் இடத்தில் அமரச் செய்கிறார் மாறனார்.

அடியார் பசித்து வந்திருப்பதால் அவருக்கு உணவு தாயார் செய்ய என்ன செய்யலாம் என்று தன் மனைவியிடம் கேட்கிறார் மாறனார். அவரது மனைவி தமது நிலையை விளக்கிக் காட்டி, நன்கு யோசித்து அதன் பிறகு கூறுகின்றார். காலையில் வயலில் விதைத்து வந்த விதை நெல்லை எடுத்துவந்தால் சோறு சமைக்கலாம் என்று. அதன்படியே மாறனார் கொண்டு வருகிறார். அதனைச் சோறு செய்ய நன்கு கழுவி, வீட்டின் கூரையைப் பிய்த்து விறகாக்கிச் சமைத்து, அடியார்க்கு உணவு தயார் செய்கின்றனர்.

இங்கே அடியாரை உபசரிப்பது என்ற அன்போடு, மாறனாரின் மனைவி, கணவனது செயலோடு ஒன்றிச் செயல்பட்ட அன்பும் கலக்கிறது. கணவன் மனைவி உறவு என்பது புரிந்து கொள்ளுதல். அது அன்பால் மட்டுமே வரும். இறையடியார் மீது கொண்ட அன்புறவும் இங்கே வெளிப்படுகின்றது. இல்வாழ்க்கை உறவை மாறனார், வாழ்க்கை உணர்த்துகிறது. மாறனாரின் அன்பில் தோய்ந்த சுந்தரர், மாறனார்

*இளையான்குடி மாறன் அடியார்க்கும் அடியேன்* (சுந்தரர்)

என்று போற்றுகின்றார்.

இல்வாழ்க்கையில் இருந்த அன்புறவைப் போன்றே இறைவன் மீது கொண்ட உறவிற்குச் சான்றாகக் கண்ணப்ப நாயனாரைக் கூறலாம். வேடுவக் குலத்தில் பிறந்த அவர் தமது வேடுவ இயல்புப்படி, இறைவனுக்கு அசைவ உணவைப் படைக்கின்றார். அதுவும் வேட்டையாடிக் கொண்டு வந்த பன்றிக்கறியைச் சுட்டு, வெந்ததா என்று பல்லில் இட்டுப் பதம் பார்த்து ஒரு தாயைப்போல இறைவனுக்கு உண்ணும் என்று கூறிப் படைக்கின்றார். விலங்குகளால் தீங்கு வராமல் பாதுகாக்கிறார். இறைவன் கண்ணில் இரத்தம் வரத் தமது கண்ணைத் தோண்டி எடுத்து வைக்கிறார். மறு கண்ணிலும் இரத்தம் வர மறு கண்ணையும் தோண்ட முனைகிறார்.

ஆகம விதிப்படி பூசை செய்த சிவனடியாருக்குக் கண்ணப்பரின் அன்பை இறைவன் காட்டுகிறார். இங்கே இறைவனோடு கண்ணப்பர் கொண்டிருந்த அன்புறவு வெளிப்படுகிறது.

## 2. அருள் உறவு

அன்பில் தொடங்கி வளர்ச்சி அடைந்து இரக்கம் என்னும் பெரும் உணர்வைத் தருவதுதான் அருள் என்னும் உணர்வு. அந்த உணர்வு பகைவர்களையும் வஞ்சகர்களையும் துரோகிகளையும் மன்னிக்கும் தன்மை உடையது. அந்த அருள் உறவிற்கு அடையாளமாகத் திகழ்ந்தவர் மெய்ப்பொருள் நாயனார். சேது நாட்டு அரசரான அவர் சிவனடியார் தோற்றத்தையே மெய்ப்பொருளாக நினைத்து வாழ்ந்தமையால் மெய்ப் பொருள் நாயனார் என்று அழைக்கப்பட்டார். முத்தநாதன் என்ற மன்னன் போரிட்டு மெய்ப்பொருள் நாயனாரை வெல்ல முடியாமல் சிவனடியார் வேடந்தாங்கி வந்து வஞ்சகத்தால் குத்திக் கொல்கிறான். அதன் பிறகும் தமது மெய்க்காப்பாளன் தத்தனிடம், முத்தநாதனைப் பத்திரமாக அழைத்துச் சென்று பாதுகாப்பான இடத்தில் விட்டு வருமாறு வேண்டி ஆணையிட்டு அனுப்புகின்றார். மெய்ப்பொருள் நாயனாரின் அருளுக்கு ஈடு இணை ஏதுமில்லை. பகைமையையும் வஞ்சக துரோகத்தையும் வெல்லக் கூடிய அருள் உறவே வடிவமாகக் கொண்டு வந்தவர், மெய்ப்பொருள் நாயனார்.

## 3. அறவுறவு

பெரியபுராணத்தில் இடம்பெற்றுள்ள அடியார்களின் வாழ்க்கை அறவழியில் இருந்தது. அதற்கு ஒரு சான்றாக அப்பூதியடிகளின் வாழ்வைக் கூறலாம். திங்களூரில் வாழ்ந்த அப்பூதியடிகள் திருநாவுக்கரசரிடம் பேரன்பு கொண்டு, அவரது பெயரில் தண்ணீர்ப் பந்தல் முதலான பல அறச் செயல்களைச் செய்து வந்தார். அந்த ஊர் வழியாகச் சென்ற நாவுக்கரசர் தமது பெயர் அறநிலையங்களுக்கு வைத்தது யார் என்று கேட்டு விவரம் அறிந்து அப்பூதியடிகள் இல்லம் வந்தார். அமுது படைக்கத் தயார் செய்கின்றனர். மூத்த மகன் திருநாவுக்கரசு வாழை இலை அறுத்து வரும்போது பாம்பு தீண்டி இறந்து விடுகிறான். அப்புதல்வனைப் பெற்றோர் மறைத்து வைத்துத் திருநாவுக்கரசரை உணவுண்ண அழைக்கின்றனர்.

அதன் பிறகு நாவுக்கரசரின் பக்திப்பாவால் மகனை உயிர்ப்பெறச் செய்கிறார். இங்கே நாவுக்கரசரை ஒருமுறை கூடக் கண்களால் பார்த்தறியாத அப்பூதியடிகள் அவர் பெயரால் அறச் செயல்களைச் செய்கிறார். இங்கே அறச்செயல்களால் தமது அன்பினை வெளிப்படுத்திப் பக்தியுறவு கொள்கிறார் அப்பூதியடிகள்.

இவ்வாறு பெரியபுராணத்தில் மூன்று விதமான மனித உறவுகள் வெளிப்படுத்தப்படுகின்றன. தமது கொள்கையில் சிறிதும் பின்வாங்காத நாயன்மார்கள் அதற்கேற்ற வகையில் உறவுகளை அமைத்துக் கொண்டு மனித உறவுகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து அதன் வழி இறைவனோடு உறவு கொண்டு வாழ்ந்தார்கள் என்பதை உணரலாம்.

## சேரமான் பெருமாள் நாயனார் பாடல்களில் மனித உறவுகள்

உலகில் வாழும் உயிரினங்கள் அனைத்திற்கும் உணவுத் தேவையும், உணர்வுத் தேவையும் இன்றியமையாதன. இந்த இரண்டையும் இயற்கை வழி உயிரினங்கள் செயல்படுத்துகின்றன. மனிதர்கள் மட்டும் இந்த இரண்டையும் பகுத்தறிவு கொண்டு செயல்படுத்துகின்றனர். உறவு நிலையில் வாழ்வை அமைத்துக் கொள்கின்றனர். அந்த மனித உறவிற்குத் தேவையான விழிப்புணர்வைச் சேரமான் பெருமாள் நாயனார், தமது பாடல்களில் காட்டுகின்றார்.

சேரமான் பெருமாள் நாயனார் சேரநாட்டுப் பேரரசர். கார் கொண்ட கொடைக் கழறிற்றறிவார் எனப் போற்றப்படுபவர். திருச்சிலம்பு ஓசை கேட்டு வழிபடும் பேறு பெற்றவர். இறைவனின் திருவருட் பெறும் பேறுடைய வீரசுந்தாரின் இனிய தோழர். அவருடன் கயிலைக்குச் சென்று இறைவனின் இன்னருள் பெற்றவர். இவர் கி.பி. எட்டாம் நூற்றாண்டினர். இவர் அருளிய நூல்களாவன :

1. பொன் வண்ணத்தந்தாதி
2. திருவாரூர் மும்மணிக்கோவை
3. திருக்கயிலாய ஞானஉலா

என்பன அவற்றுள் பொன் வண்ணத்தந்தாதி நூறு பாடல்களை உடையது. ‘பொன் வண்ணம்’ எனத் தொடங்கி ‘பொன் வண்ணமே’ என நிறைவு பெறுதலானும் இப்பெயர் பெற்றது. இனி இப்பாடல்கள்வழியே சேரமான் உணர்த்தும் மனித உறவுகளின் விழிப்புணர்வை இனிக் காண்போம்.

பொன்வண்ணம் போல மேனி அழகாகப் பொலிவுற்று விளங்கும் மின்னல் போன்று நீண்ட சடையுடன் வெள்ளிக் குன்றமாகிய கையிலை மலை போன்று பெரிய இடம் வெண்மை நிறமாக உள்ளது. இறைவனுடைய மேனி ஒளி பொருந்தியதாகக் காணப்படுகிறது என்பதைக் கீழ்வரும் பாடல் சுட்டுகின்றது.

*பொன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்*
*மேனி பொலிந்திலங்கும்*
*மின் வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்*
*வீழ்சடை வெள்ளிக் குன்றம்*

(பதினொன்றாம் திருமுறை - 169)

இத்தகைய இறைவனை நெஞ்சம் அன்புத் தளிரை விடவும், கண்களில் நீர் பெருகவும், முகம் மலரவும், கைகள் குவியவும் எட்டு உறுப்புகளும் தரையில் தோயப் பணிந்தும் விளங்குபவர்களுக்கு நீண்ட சடையை உடைய இறைவன், உள் மனத்திலுள்ள வஞ்சனைகளைப் போக்கி, செம்மைப்படுத்தி வைப்பான். பெருமை பொருந்திய வீடுபேற்றை அளிப்பான் என்பதைக் கீழ்வரும் பாடலடிகள் சுட்டுகின்றன.

*நெஞ்சம் தளிர்விடக் கண்ணீர்*
*ததும்ப முகம் மலர*
*அஞ்செங் காதலும் கூம்பவட்*
*டாங்கம் அடிபணிந்து*
*தஞ்சொல் மலரால் அணியவல்*
*லோர் கட்டுத் தாழ்சடையான்*
*வஞ்சம் கடிந்து திருத்திவைத்*
*தான் பெரு வானக மே*

(பதினொன்றாம் திருமுறை - 179)

மனிதர்கள் தங்கள் மனதிலுள்ள வஞ்சனையைத் தீர்த்தால்தான் மற்றவர்களுடன் நல்லுறவுகளை வளர்த்துக் கொள்ள இயலும். நெஞ்சத்திலுள்ள வஞ்சனை நீங்க வேண்டுமானால் இறைவனை நெஞ்சில் நிறுத்தி மன முருகி வழிபட வேண்டும். ஏனென்றால், உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்கிற பாகுபாடின்றி அருள் வழங்குபவர். ஆனால் அவருக்கு ஆகாதவர் ஒருவர் மட்டுமே. அவர்களே வஞ்சகர். எனவே வஞ்ச நெஞ்சம் கூடாது என்பதை இப்பாடல் சுட்டுகிறது.

*படிறா யின சொல்லிப் பாழுடல்*
*ஓம்பிப் பலகடைச் சென்று*
*இடறாது ஒழிதும் எழு நெஞ்சமே*

(பதினொன்றாம் திருமுறை - 181)

உலகிலுள்ள அனைத்தையும் அனுபவித்து ஆள நினைப்பவர்கள் இறைவனை மறந்துவிடுதல் கூடாது. இறைவனை நினைத்து வழிபட்டால் சொர்க்கத்தை இறைவன் தருவார். உலக மாயையில் அடிமைப்பட்டுப் போனால் நரகம் மட்டுமே கிடைக்கும். இதை உணர்ந்தால் சகமக்களிடம் நல்லுறவுகள் நிலைக்கும் என்பதைத் தமது பாடல்கள் வழி உணர்ந்தும் சேரமான் இறைவனைப் புகழாத நாக்குகள் இரும்புக் கொழு போன்றவை. பேரொளியாக விளங்கும் பரம்பொருளின் புகழ் நுழையாத காதுகள் மரம் போன்றவை. இறைவனைத் தொழாத கைகள் மண் திணிந்த கல்போன்றன. இவைபோல இறைவன் பொருட்டுப் பயன்படாத உறுப்புகள் சடப்பொருள் களாகும் என்பதையும் சுட்டுகின்றார். அத்துடன் தீயவழிகளில் சேர்க்கும் பொருளும், இன்பமும் உறவுகளை முறிப்பதோடு அழிவுக்கும் அழைத்துச் செல்லும். இறைவனுடைய அருளால் கிடைக்கும் சிறிய ஒன்றும் நல்லுறவுகளை வளர்க்கும். இறைவனின் பொன் உலகை அடையச் செய்யும்.

*தனக்குன்றம் மாவையம் சங்கரன்*
*தன்னருள் அன்றிப் பெற்றால்*
*மனக்கெனானும் நஞ்சிற் கடையா*
*நினைவன் மதுவிரியும்*
*புனக் கொன்றையான் அருளால் புழு*
*வாகிப் பிறந்திடினும்*
*எனக் கென்றும் வானவர் பொன்னுல*
*கோடு ஒக்க எண்ணுவனே*

(பதினொன்றாம் திருமுறை - 211)

இறைவன் நீதி உடையவன். இந்த மனித உடம்பில் ஐம்புலன்களும், ஒன்பது வாயில்களும் மூன்று சரீரங்களும் உள்ளன. எலும்பு, நரம்பு, இறைச்சி, உதிரம், மஞ்சை இவற்றோடு இழித்துக் கூறப்படுகின்ற தோலால் போக்கப்பட்ட சிறுகுடிசை இது. இதனால் பயன் இல்லை. ஒலிக்கின்ற தெளிந்த புனலைச் செஞ்சடையில் கொண்டோனது மலரடிகளை

அடைந்தால் நற்கதி பெறமுடியும். இந்த பூமியில் நல்லுறவுகளும் வளரும் என்பதைச் சேரமான் உணர்த்துகின்றார்.

*உறைகின்றனர் ஐவர், ஒன்பது*
*வாயில் ஓர் மூன்றுளதால்*
*மறைகின்ற என்பு நாம்போட*
*இறைச்சி உதிரம் மச்சை*
*பறைகின்ற தோல் போர் குரம்பை*
*பயன் இல்லை போய் அடைமின்*
*அறைகின்ற தெண்புனல் செஞ்சடைக்*
*கொண்டோன் மலரடிக்கே*

(பதினொன்றாம் திருமுறை - 240)

இறைவன் கள்ள நெஞ்சமுடையவர்களிடமிருந்து விலகி அவர்களை வெறுத்து, கற்றவர்களுடைய உள்ளத்திலும் பொருந்தி இருப்பான். எனவே, நாமும் கள்ள நெஞ்சமுடன் பழகாமல், கள்ள நெஞ்சினருடன் உறவு கொள்ளாமல் இருப்பது நற்கதிக்கும், நல்லுறவிற்கும் வழிவகுக்கும் என்பதை,

*கள்ள வளாகங் கடிந்தடி*
*மைப்படக் கற்றவர்தம்*
*உள்ள வளாகத்து உறுகின்ற*
*உத்தமன்* (பதினொன்றாம் திருமுறை - 246)

என்ற பாடலடிகளில் உணர்த்துகின்றார். இதைத்தான் வள்ளுவரும்,

*உள்ளத்தால் உள்ளலுந் தீதே பிறன்பொருளைக்*
*கள்ளத்தால் கள்வே மெனல்* (குறள் - 282)

என்கின்றார். பிறனைக் காணாதவழி இகழ்ந்துரைத்துக் கண்டவழி அவற்கினியனாகப் பொய்த்து ஒருவன் உயிர்வாழ்தலின், அது செய்யாது ஒருவன் இறந்து விடுதல் அறநூல்கள் கூறும் ஆக்கத்தைத் தரும் என்பதை வள்ளுவர்,

*புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாதல்*
*அறங்கூறும் ஆக்கந் தரும்* (குறள் - 183)

எனக் கூறுகிறார். இதைத்தான் சேரமானும் சுட்டுகின்றார். அதாவது இந்த உலகில் பிறந்த மக்கள் நிலையில்லாத வாழ்வை நிலையென நினைத்து, தீயனவற்றைச் சிந்திக்கவும், தீயனவற்றைப் பேசவும், பிறரைப் புறம்பேசி இழிவானவற்றை எடுத்துரைத்தலுமே தொழிலாக நினைத்துச் செய்து வருகின்றனர். அதனால் நல்லுறவுகள் அறுபட்ட தீமைகள் பெருகி நற்கதியையும் அடைய வழியின்றிப் போகின்றன.

*சிந்தனை செய்ய மனம் அமைத்*
*தேன் செப்ப நா அமைத் தேன்*
*வந்தனை செய்யத் தலை அமைத்*
*தேன் கை தொழ அமைத்தேன்*
*பந்தனை செய்வதற்கு அன்பமைத்*
*தேன் மெய் அரும்ப வைத்தேன்*

(பதினொன்றாம் திருமுறை - 260)

அதாவது நல்லனவற்றைச் சிந்திக்க மனத்தை அமைத்தேன். துதிப் பாடல்களைப் பாட நாக்கை அமைத்தேன். வழிபாடு செய்யக் கையை அமைத்தேன். வணங்குவதற்குத் தலையை அமைத்தேன். உள்ளத்தில் கட்டுவதற்கு அன்பை அமைத்தேன் என்னும் இறைவனின் விருப்பத்தை மக்கள் அறியாமல், வாழ்வை உணராமல் பொய்மையானவற்றை நாடிச் சென்று மனித உறவுகளை மாசுபடுத்திக் கொள்ளும் நிலை வேண்டாம் என்று எச்சரிக்கின்றார் சேரமான்.

இந்த உலகில் நமக்காக வரையறை செய்யப்பட்ட வாழ்நாளில் பாதி இரவுகள் தூங்கியே கழித்து விடுகிறோம். எஞ்சியுள்ள நாள்களில் கொடிய நோய்கள் வந்து வருத்துகின்றன. ஆரம்ப நாள்களில் பிள்ளைப்பருவமும், அதன் பின்னர் வயோதிகமும், அச்சமும், கோபமும், பொறாமையும், ஆசைகளும் ஆகியவற்றோடு போராடுகின்ற போது இறப்பும் வந்துவிடும். இவற்றை உணராமல் மக்கள் அழியும் இன்பங்களுக்காக உறவுகளை மதிக்காமல் தான் என்னும் அகந்தை கொண்டு வாழ்வதோடு இறைவனையும் மறந்துவிடுவதால் நற்கதியை அடையும் வழி அறியாமல் அழிந்துவிடுகிறார்கள். எனவே, இவற்றை உணர்ந்து இறைவனின் பாதங்களைப் பற்றிக் கொண்டு நல்வழியில் நடந்து நல்லுறவுகளை வளர்த்துக் கொண்டால் நற்கதியை அடையலாம்.

*வேண்டிய நாள்களில் பாதி*
*கங்குல் மிக அவற்றுள்*
*ஈண்டிய வெந்நோய் முதலது*
*பிள்ளைமை மேலது மூப்பு*
*ஆண்டின அச்சம் வெகுளி*
*அவா அழுக்காறு இங்ஙனே*
*மாண்டன சேர்தும் வளர்புன்*
*சடைமுக்கண் மாயனையே*

(பதினொன்றாம் திருமுறை - 267)

இறைவனின் பெருமைகளையும், இறைவனைத் துதிக்கும் வழி முறைகளையும், நற்கதி அடையும் வழிகளையும் தமது பொன் வண்ணத்தந்தாதியில் எடுத்துரைக்கும் சேரமான் இறைவனின் அருள் நேரடியாகப் பெற்றவர். எனவே, தமது பாடல்களில் இறைமையை எடுத்துரைத்தாலும் இந்த உலக மக்கள் பொய்மையில் உழன்று, பொய்மையில் வாழ்ந்து நற்கதி அடையாமல் போவதைத் தடுக்கும் வகையில், தமது பாடல்களில் சிலவற்றை உட்பொருளாக வைத்துப் பாடுகின்றார். அதாவது ஐம்புலன்களும் இந்த உடலும், உயிரும் இறைவன் தந்தவை. அதன் காரணம் அவனைப் புகழ என்பதை உணர்ந்து வஞ்ச நெஞ்சகத்தைப் போக்கி வாழ்கின்றபோது இந்த உலக வாழ்விலும் நல்லுறவுகள் பெருகி விண்ணுலகில் நற்கதி அடைய முடியும் என்பதைச் சேரமான் பெருமாள் நாயனார் உணர்த்துகின்றார்.

# 6. காப்பியங்களில் மனித உறவுகள்

தமிழ் இலக்கிய வரலாற்றில் தொடர்நிலைச் செய்யுள்கள் என்னும் கதை தழுவிய இலக்கியங்கள் காப்பியங்கள் எனப் போற்றப்பட்டன. காலந்தோறும் பல இலக்கியங்கள் காப்பியம் என்ற பெயரைத் தாங்காமல் வேறுபெயர்களில் வழங்கப்பட்டாலும் அவையாவும் காப்பிய இலக்கியங் களாகும். அவற்றுள் முக்கியமானவை ஐம்பெரும் காப்பியங்களான சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி ஆகியவை ஆகும்.

சங்க இலக்கியத்திலேயே காப்பியக்குடி, காப்பியனார் எனப் பெயர்கள் இடம்பெற்றுள்ளன. தமிழில் தொடர்ந்து எழுதப்பட்டுவந்த தொடர்நிலைச் செய்யுள்களுக்குக் 'காப்பியம்' என்ற பெயர் சூட்டப்பட்டது. தண்டியலங்கார ஆசிரியர் காப்பிய இலக்கணம் எழுதிய பிறகு சில காப்பியங்கள் வெளிவந்தன. வடமொழியில் பஞ்சமா காவியங்கள் வெளிவந்த பிறகு தமிழில் ஏற்கெனவே எழுதப்பட்டிருந்த காப்பியங்களை சேகரித்து ஐம்பெருங் காப்பியங்களாகத் தொகுக்கப்பட்டன. எனவே, காப்பியம் என்பது தமிழ்ச்சொல். அது தொடர்நிலைச் செய்யுள்களுக்கு இடைக்காலத்தில் பயன்படுத்தப்பட்டது. இந்த ஐம்பெருங் காப்பியங் களோடு பெரியபுராணம் புராணக் காப்பியமாகவும், கம்பராமாயணம் இதிகாசக் காப்பியமாகவும், சீறாப்புராணம் இசுலாமியக் காப்பியமாகவும், தேம்பாவணி கிறித்துவக் காப்பியமாகவும், இன்னும் இராவணகாவியம், இயேசு காவியம் போன்ற 20ஆம் நூற்றாண்டு இலக்கியங்களும் காப்பிய வரிசையில் அடங்கும். இவற்றுள் சில காப்பியங்கள் சுட்டுகின்ற மனித உறவுகள் குறித்து இனிக் காண்போம்.

தமிழில் வெளிவந்த முதல் காப்பியம் என்ற சிறப்பிற்கு உரியது சிலப்பதிகாரம். சிலப்பதிகாரம் சாத்தனார் வேண்டுகோளின்படி இளங்கோவடிகள் எழுதியது. கோவலன் கண்ணகி என்ற வணிகக்குலத் தம்பதியரின் வாழ்வில் நடந்த நிகழ்வுகளை மையப்படுத்திய இந்த நூல்,

*அரைசியல் பிழைத்தோர்க்கு அறங்கூற்றாவதூஉம்*
*உரைசால் பத்தினிக் குயர்ந்தோர் ஏத்தலும்*
*ஊழ்வினை உருத்துவந் தூட்டும்* (சிலப்பதிகாரம்)

என்ற மூன்று உண்மைகளை வெளிப்படுத்துவதாக எழுதப்பட்டுள்ளது. இம்மூன்றுமே மனித உறவுகளைப் படம்பிடித்துக் காட்டும் நிலையில் காப்பியம் அமைந்துள்ளது. கோவலன் கண்ணகி ஆகிய இருவரின் வாழ்க்கையை அறிந்த சேரன் செங்குட்டுவன், கண்ணகிக்குக் கோயில் எழுப்ப நினைத்தான். அதற்காக வடபுலத்தில் சென்று கல் கொண்டு வரத் திட்டமிட்டான். இமயத்தில் கனகவிசயர் என்ற அரசர்கள் தமிழ் அரசர்களின் வீரத்தை இகழ்ந்திருந்தது சேரனின் நினைவுக்கு விருந்து. எனவே, அவர்கள் மேல் போர் செய்து வெற்றி கொண்டு, கனகவிசயரைச் சிறைபிடித்தான்.

*வாய் வாள் ஆண்மையின், வண்தமிழ் இகழ்ந்த*
*காய்வேல் தடக்கைக் கனகனும் விசயனும்*
*ஐம்பத் தருவர் கடுத்தேராளரொடு*
*செங்குட்டுவன் தன் சினவலைப் படுதலும்* (சிலப்பதிகாரம்)

அதாவது தோல்விகண்ட கனகவிசயரின் தலைமீது கல் கொண்டு வருகிறான். இந்த வெற்றியைச் சோழ, பாண்டிய அரசர்களிடம் காட்டி வருமாறு தமது அமைச்சரை அனுப்புகிறான். அவர்கள் சேரனின் வெற்றியைப் புகழ்ந்தாலும் கனகவிசயரின் தலைமீது கல்கொண்டு வந்ததை விரும்பவில்லை. தமது ஆற்றல் நழுவியபோது தோற்றவர்களும் மனிதர்களே. நம்மைப் போன்ற சக அரசர்களே. அவர்களை இகழ்கின்ற வகையில் இவ்வாறு செய்தல் தகாது. தமது வீரம் குறைந்த நிலையில் ஓடி ஒளிந்த அரசர்களை ஓடிப் பிடித்து வந்தது விரும்பத்தகாதது. தமிழக வரலாற்றிலேயே புதுமையானது என்று கூறி அனுப்புகின்றனர். இங்கே மனித உறவுகள் மறைந்து கிடக்கின்றன. அதாவது அரசர்கள் தம்மிடம் தோற்ற அரசர்களைக்கூட உரிய மரியாதையுடன் நடத்துவதுதான் தமிழர் பண்பாடு. அந்தப் பண்பாடு மனித உறவுகளை அடிப்படையாகக் கொண்டது. பகைவரை வெல்வதற்காகப் போர் செய்தாலும் அந்தப் போரில்கூட அறத்தைப் பின்பற்றுகிறவர்களாகத் தமிழக அரசர்கள் விளங்கினார்கள். எனவே கனகவிசயரை இழிவுபடுத்தியதைச் சோழ, பாண்டிய அரசர்கள் விரும்பவில்லை. பகை அரசர்களாக இருந்தாலும்

அவர்களை இழிவுபடுத்தும் வகையில் செயல்படுவது மனித உறவுகளை மாசுபடுத்துவதாகும் என்ற கருத்தையே இச்செய்தி உணர்த்துகிறது.

### மணிமேகலை உணர்த்தும் மனித உறவுகள்

ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்று எனவும், இரட்டைக் காப்பியங்களுள் ஒன்று எனவும் மணிமேகலை கூறப்படுகிறது. பௌத்தமதக் கருத்துகளை மையப்படுத்திய இந்தக் காப்பியம் மனிதர்கள் இரக்க உணர்வு உள்ளவர்களாக இருக்க வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்துகிறது. காப்பியத் தொடக்கத்தில் விழாவறை காதையில் காவிரிப் பூம்பட்டினத்தில் இருபத்தெட்டு நாள் நடைபெறும் இந்திர விழா பற்றிக் கூறுகிறது.

*பசியும் பிணியும் பகையும் நீங்கி*
*வசியும் வளனும் சுரக்கென வாழ்த்தி* (மணிமேகலை)

என விழாத் தொடங்குகிறது. அதாவது பசியில் வாடுவோர், நோயில் வாடுவோர் இவர்களுக்கு உதவி செய்து பகைமை உணர்வின்றி வாழ்தல் வேண்டும் என்ற மனித உறவின் அடிப்படையை இவ்வரிகள் சுட்டுகின்றன. மற்றவர்களுக்கு உதவி செய்வதைக்கூட ஒரு பகட்டாக நினைத்துப் பலர் செய்வதுண்டு. அவ்வாறு செய்பவர்கள் அறத்தை விலை கூறுபவர் ஆவர். தம்மால் திருப்பித்தர இயலாதவர்களுக்கு உதவி செய்வதே அறமாகும். அதுதான் உண்மையாக மனிதர்களை இரக்கத்தோடும் மனித நேயத் தோடும் மதிப்பதாக அமையும்.

*ஆற்றுநர்க்கு அளிப்போர் அறவிலை பகர்வோர்*
*ஆற்றா மாக்கள் அரும்பசி களைவோர்*
*மேற்றே உலகின் மெய்ந்நெறி வாழ்க்கை*
*மண்திணி ஞாலத்து வாழ்வோர்க்கு எலாம்*
*உண்டி கொடுத் தோர் உயிர் கொடுத்தோரே* (மணிமேகலை)

### சீவகசிந்தாமணி சுட்டும் மனித உறவுகள்

சமணத் துறவியான திருத்தக்க தேவரால் சீவகசிந்தாமணி என்னும் காப்பியம் எழுதப்பட்டது. சமணமதக் கருத்தை வலியுறுத்து வதற்காக இக்காப்பியம் எழுதப்பட்டது. வாழ்வின் எல்லாவிதமான இன்பங்களையும் அனுபவித்த ஓர் அரசன் எட்டுப் பெண்களை மணந்தும்

மனம் நிறைவடையாமல் தவிக்கிறபோது, அவனுக்கு வாழ்வின் நிலையாமையை எடுத்துரைத்து இறைவனடி சேரத் துறவு கொள்ளச் செய்யும் தன்மையில் இந்தக் காப்பியம் அமைந்துள்ளது. பரவலாக எல்லாவிதமான மனிதர்களையும் ஆசிரியர் இந்தக் காப்பியத்தில் உலவ விடுகிறார். எது ஒன்றிலும் அளவுகடந்துவிடக் கூடாது என்பதைத்தான் ஏமாங்கத நாட்டுச் சச்சந்தன் தன் மனைவி விமலை மீது கொண்ட பற்றினை ஆசிரியர் சுட்டுகின்றார். அதனால் நாட்டில் வாழும் மக்களை நினையாத அரசனின் இழிந்தப்போக்கைக் கண்டிக்கின்றார். பதவியும் பணமும் வாய்க்கப் பெற்றாலும் பணிவு ஒரு மனிதனுக்குத் தேவை. அந்தப் பணிவு உடையவன்தான் மனித உறவுகளை மதிக்க இயலும். அந்தப் பணிவு என்னும் பண்பு மனித உறவுகளை வளரச் செய்யும் என்பதை உணர்த்துவதாகக் கல்வி கற்ற பெரியோரின் செயலை விளக்கும் நிலையில் ஆசிரியர் கூறுகின்றார். அந்தப் பாடல் வருமாறு :

*சொல்லரும் சூற்பசும் பாம்பின் தோற்றம்போல்*
*மெல்லவே கருவிருந்து ஈன்று மேலலார்*
*செல்வமே போல் தலை நிறுவித் தேர்ந்த நூற்*
*கல்வி சேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே* (சீவகசிந்தாமணி)

**வளையாபதி உணர்த்தும் மனித உறவுகள்**

ஐம்பெருங்காப்பியங்களில் ஒன்றாக வைத்து எண்ணப்படும் வளையாபதி ஒரு காலத்தில் மிகவும் புகழோடு விளங்கியதென்பதை உரையாசிரியர் பலராலும் அது எடுத்தாளப்படுவதிலிருந்து அறியலாம். புறத்திரட்டிலிருந்தும் இலக்கண உரைகளிலிருந்தும் ஏறத்தாழ எழுபது செய்யுட்கள் மட்டுமே தேடித் தொகுக்கப்பட்டுள்ளன. இதில் கீழ்வரும் நயமிக்க பாடல் மனித உறவுகளைச் சுட்டுவதாக அமைந்துள்ளது.

*செந்நெல் அங்கரும்பினோடு இகலும் தீஞ்சுவைக்*
*கன்னலாய் கரும்புதன் கமுகைக் காய்ந்தெழும்*
*இன்னவை காண்கிலன் என்று கமுகும்*
*முன்னிய முகில்களால் முகம்பு தைக்குமே* (வளையாபதி)

அதாவது, நெல் கரும்புடன் போட்டியிட்டு அதனுயரம் வரை வளர்கிறது; கரும்பு கமுகைச் சினந்து மேலெழுந்து வளர்கிறது; இதைக்கண்ட கமுகு (பாக்குமரம்) இதைப் பார்க்கக் கூசி, மேகத்தினூடே

முகம் புதைக்கிறது. மேகத்தையும் எட்டிப் பிடித்துப் பாக்குமரம் வளர்கிறது என்பதைக் கூறும் கற்பனை நயம் மிக்க பாடல் இது. இயற்கையை இது எழிலுடன் விளக்கினாலும் ஓர் உண்மையைப் புலப்படுத்துகிறது. நெல்லோ, கரும்போ, கமுகு மரமோ இப்படித்தான் வளர வேண்டுமென்று இயற்கை விதித்திருக்கின்றது. அதை மீறி அவற்றால் ஒன்றும் செய்தல் இயலாது. அதைப்போல ஒவ்வொரு மனிதருக்கும் உரியதை இறைவன் ஏற்கெனவே வகுத்து வைத்திருக்கிறான். அதை உணர்ந்து போட்டி பொறாமை இன்றி வாழ்தலே சிறந்தது. அப்பொழுதுதான் மனித உறவுகள் வளரும். இல்லையேல் அழிவுகள் மட்டுமே மிஞ்சி நிற்கும் என்பதையே இப்பாடல் உணர்த்துகின்றது.

## குண்டலகேசி உணர்த்தும் மனித உறவுகள்

குண்டலகேசி ஒரு பௌத்தக் காப்பியம். மறைந்துபோன தமிழ் நூல்களுள் ஒன்று. உரையாசிரியர்களால் எடுத்தாளப்படும் சிறப்பு இதற்கும் உண்டு. புறத்திரட்டில் பத்தொன்பது செய்யுட்கள் காணப்படு கின்றன. பிறர் சாவதற்காக அழும் நாம் குழந்தைத் தன்மை செத்து இளைஞனாகி, பிறகு அப்பருவம் செத்து முதியவனாகி, இவ்வாறு நாள்தோறும் சாகிறோமே, அதற்கு அழாதது ஏனோ ? என ஒரு பாடலில் வாழ்வின் நிலையாமையைக் கற்பனை மெருகோடு தருகிறது இந்நூல்.

*பாளையாம் தன்மை செத்தும் பாலனாம் தன்மை செத்தும்*
*காளையாம் தன்மை செத்தும் காமுறும் இளமை செத்தும்*
*மீளும் இவ்வியல்பும் இன்னே மேல்வரும் மூப்புமாகி*
*நாளும் நாம் சாகின் றாமால்; நமக்கு நாம் அழாததென்னோ ?*

இப்பாடல் வாழ்வின் நிலையாமையைச் சுட்டுவதாக இருந்தாலும் வாழ்வின் உண்மை ஒன்றை உணர்த்துவதாகவும் அமைந்துள்ளது. அதாவது தினம் தினம் நாம் வாழ்வின் நாளை இழந்து வருகிறபோது, இருக்கிற வாழ்நாளில் போட்டியும் பொறாமையும் கொண்டு பகைமை உணர்வால், அழிவுகளைத் தேடுவது விரும்பத்தக்கதல்ல.

இந்த வாழ்க்கை நிலையில்லாதது என்பதை உணர்ந்து மனித உறவுகளை மதித்து வாழ்வதே சிறந்தது என்பதை உணர்த்துவதாகவும் அமைகின்றது.

தமிழ் இலக்கிய வரலாற்றில் முழுமையான காப்பியங்களான சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி ஆகிய மூன்றும் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு பொருளையும் உணர்த்துவதாக அமைந்துள்ளன.

வளையாபதி, குண்டலகேசி ஆகிய இரண்டும் முழுமையாகக் கிடைக்கப் பெறவில்லை என்றாலும் கிடைத்துள்ள பாடல்கள் வாழ்வியல் உண்மைகளை உணர்த்துவாக உள்ளன.

## சிலப்பதிகாரத்தில் மனித உறவுகள்

படித்தவர் முதல் பாமரர் வரையிலும், தோட்டி முதல் தொண்டைமான் வரையிலும், சிறியோர் முதல் பெரியோர் வரையிலும் ஒருவரோடு ஒருவர் வளர்த்துக் கொள்ளும் உறவுமுறையிலேயே அவர்களின் வாழ்க்கை நிர்ணயிக்கப்படுகிறது. எனவே மனித வாழ்க்கைக்கு அடித்தளமாக அமைவது உறவு முறைகள். அவை எப்படி அமைய வேண்டும் என்கிற உண்மைகளை இலக்கியங்கள் நமக்கு உணர்த்துகின்றன.

### 1. உறவுமுறை வரையறையும் விளக்கமும்

"குற்றம் பார்க்கில் சுற்றம் இல்லை" என்று கூறுவார்கள். மண்ணில் பிறக்கிற ஒவ்வொரு மனிதனிடமும் குறைகளும் உண்டு; நிறைகளும் உண்டு. அப்படி நோக்குகிறபோது அவனிடம் எது மிகுந்துள்ளதோ அதன் அடிப்படையில் ஒரு மனிதனது பண்புகள் எடைபோடப்படுகின்றன. அவனது பண்புகளை வெளிப்படுத்தும் வாயில்களாகப் பல இருந்தாலும் அவற்றுள் முக்கியமானதாக அமைவது அவன் மற்றவர்களோடு உறவு கொள்ளும் முறையே.

உறவுமுறை என்பது மனிதப் பண்புகள் மாறாமல் எவர் மனமும் புண்படாமல் எண்ணங்களாலும் தங்கள் கருத்துகளைப் பரிமாறிக் கொண்டு, ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்தல், உதவி செய்து கொள்ளுதல், நன்றி கூறுதல் போன்றவற்றின் மூலமாக ஒருவரோடு ஒருவர் பழகும் முறையே எனலாம். அதாவது ஒருவரோடு ஒருவர், ஒரு குடும்பத்தோடு மற்றொரு குடும்பம், ஒரு கூட்டத்தோடு மற்றோர் கூட்டம், ஒரு கிராமத்தோடு மற்றோர் கிராமம் கூடிப் பழகும் நிலையையே உறவுநிலை அல்லது உறவுமுறை என்று கூறலாம்.

மனித உறவுகளில் தனிமனிதனுக்கான நியதிகளோடு சமுதாயத்திற்கான சில நியதிகளும் உருவாயின. கணவன் மனைவி உறவு, தாய் தந்தை உறவு, தாயாதிகள் உறவு போன்ற உறவுமுறைகளாகி அந்த மரபுமுறைகள் எழுதப்படாத சட்டங்களாயின. இவ்வாறு அமைக்கப்பட்ட சட்டங்களே நம்மைக் காவல் காக்கின்றன.

நல்ல உறவுமுறைகளும், தீய உறவுமுறைகளும், தொடர்புகளால் உருவாக்கப்படுகின்றன. உறவு என்ற நிலையில் பற்று வளர்ந்த பின்னரே ஒன்றின் மீது அன்பு மிகுதியாகும். அன்பு வளர்ந்த நிலையில் உறவு வலுப்படுகிறது. உறவு என்னும் நிலையில் நோக்கும்போது துக்கமான உறவுநிலையே அன்பையும் நட்பையும் வளர்க்கக் கூடியது.

மனித வாழ்க்கையில் உறவுகள் காலங்களையெல்லாம் கடந்து நிற்கின்றன. தொடர்புகள் நிலைக்க ஒன்று பிறிதொன்றுடன் தொடர்பு இல்லாமல் வாழ்தல் என்பது இயலாத ஒன்று. பிறிதொன்றைச் சார்ந்துதான் வாழ வேண்டும். காலம், இடம், பேச்சு போன்றவை இயல்பாக அமைய வேண்டும். உறவுகள் சிக்கலில்லாமல் அமைய வேண்டுமெனில் பேச்சும், மொழியும், செயலும் உண்மையோடு ஒத்த தன்மையைப் பெற வேண்டும். உண்மையான உறவுகள் நிலைபெறுவதும் உண்மையற்ற உறவுகள் வீழ்ந்து போவதும் மனித உறவின் நியதியாகவும் அறமாகவும் அமைகின்றன. இனி இத்தகைய உறவுமுறையைச் சிலப்பதிகாரத்தின் வழி நோக்குவோம்.

## 2. சிலம்பில் தனிமனித உறவுகள்

சிலப்பதிகாரத்தில் சில முக்கியக் கதாப்பாத்திரங்கள் தனிமனித உறவை உலகிற்குக் காட்டுகின்றன. கவுந்தியடிகள் ஒரு துறவியானாலும் இரவிலும் பகலிலும் கண்ணகியையும் கோவலனையும் வழிநடத்தி மதுரைக்கு அழைத்துச் செல்கிறார். வம்பு பேசுவோர் கண்ணகி, கோவலன் உறவை இழிவாகப் பேசியதால் பொறுக்க முடியாமல் சபிக்கின்றார். பூம்புகாரிலிருந்து மதுரைக்கு வந்த பிறகு மாதரி என்னும் இடைக்குல மகளிடம் அவர்களை ஒப்படைக்கின்றார். கணவனைப் பிரிந்து பல வருடங்கள் துன்பத்தில் வாடிய கண்ணகியை அடைக்கலமாகத் தருகின்றார்.

*மங்கல மடந்தையை நன்னீர் ஆட்டிச்*
*செங்கயல் நெடுங்கண் அஞ்சனம் தீட்டித்*

*தோமென் கூந்தல் சின்மலர் பெய்து*
*தூமடி உடீஇத் தொல்லோர் சிறப்பின்*
*ஆயமும் காவலும் ஆய் இழை தனக்குத்*
*தாயும் நீயே ஆகித் தாங்கு* (அடைக்கலக்காதை - 131-136)

தாயைப்போல அவளைக் காக்க வேண்டும் என்று கவுந்தியடிகள் மாதரியிடம் கூறுகிறார். அதன் காரணத்தையும் சொல்கிறார்.

*ஈங்கு*
*என்னோடு போந்த இளங்கொடி நங்கைதன்*
*வண்ணச் சீறடி மண்மகள் அறிந்திலள்*
*கடுங்கதிர் வெம்மையின் காதலன் தனக்கு*
*நடுங்குதுயர் எய்தி நாப்புலர வாடித்*
*தன்துயர்காணாத் தகைசால் பூங்கொடி*
(அடைக்கலக்காதை - 136-141)

இங்குக் கவுந்தியடிகள் துறவியானாலும் இல்வாழ்க்கையின் உறவு முறைகளை நன்கு உணர்ந்தவராகவே பேசுகிறார். தன்னிடம் உதவி என்று வந்தவர்களை அரவணைக்கும் பண்பு கொண்டவராகவே கவுந்தியடிகளைக் கூறலாம்.

மாடலன் என்பவன் சோழநாட்டில் கோவலன் வாழ்ந்த வாழ்க்கையைப் பார்த்தவன். மதுரையிலே மீண்டும் கோவலனைக் காண்கிறான். அவன் உள்ளம் பதறுகிறது. நான் கண்டவரை, அறிந்தவரை கோவலன் நல்லவற்றையே செய்திருக்கிறான். ஆனால் தன் மனைவியோடு இப்படியாக வந்து துன்புறுவது பழைய வினையோ என்று கூறி வருந்துகிறான்.

*இம்மைச் செய்தன யானறி நல்வினை*
*உம்மைப் பயன்கொல் ஒருதனி உழந்து, இத்*
*திருத்தகு மாமணிக் கொழுந்துடன் போந்தது*
*விருத்த கோபால! நீ* (அடைக்கலக்காதை - 91-94)

கண்ணகி கோவலன் வாழ்க்கை முடிந்த பிறகு மீண்டும் மாடலன் சேரநாட்டிற்கு வருகிறான். கோவலன் கண்ணகி என்னும் இருவரோடு இணைந்த உறவுகள் என்ன ஆயின என்பதையும் சோழநாடு பாண்டிய நாட்டின் நிலையையும் சேரனுக்குச் சொல்கிறான். அத்தோடு வாழ்வின் நிலையாமையைச் சேரன் செங்குட்டுவனுக்கு எடுத்துரைக்கிறான். அன்பும் அறமும் நிறைந்த மனித உறவாக மாடலனை நாம் பார்க்கிறோம்.

கோவலன் கண்ணகி கவுந்தியடிகள் என்னும் மூவரும் தென்திசை நோக்கி நடையைத் தொடர்ந்தபோது இடைவழியில் மாங்காட்டு மறையோனைக் காண்கின்றனர். அவன் மூலம் மதுரையின் வழிகளைக் கேட்டறிகின்றனர். மாங்காட்டு மறையோன் தென்னவனை வாழ்த்துவதும், கண்ணகி கோவலன் கவுந்தியடிகளுக்கு மதுரையின் வழிகளை எடுத்துரைப்பதும் அவனது பண்பினைக் காட்டுகிறது. அதை உணர்ந்த கவுந்தியடிகள்,

*காமுறு தெய்வம் கண்டடி பணிய*
*நீ போ யாங்களும் நீள்நெறிப் படர்குதும்*

(காடுகாண்காதை - 160-161)

என்று கூறி வாழ்த்தி அனுப்புகிறார். இன்னார் என்று அறியாத நிலையிலும் பொறுமையுடன் தான் கண்ட வழிகளின் இயல்பைக் கவுந்தியிடம் கூறும் பணிவும் பண்பும் கொண்ட மனிதனாக மாங்காட்டு மறையோனைக் கூறலாம். இவ்வாறே தேவந்தி வயந்தமாலை போன்றவர்களும் தனிமனிதப் பண்பினைப் பெற்று உயர்வு பெறுகின்றனர்.

## 3. சிலம்பில் குடும்ப உறவுகள்

குடும்ப உறவுகள் தனிமனிதப் பண்புகளால் நிறைவு பெறுகின்றன. அதிலும் ஒரு குடும்பம் இல்லத்தரசியின் பண்புகளால் மட்டுமே நிலைபெறும்.

*இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்*
*இல்லவள் மாணாக் கடை* (குறள் - 53)

என்ற வள்ளுவர் கூற்றுப்படி மனைவியானவள் குணவதியாக அமைகிற போது அந்தக் குடும்பம் சிறப்படையும். அப்படிப்பட்ட நிறைவுடையவளாகக் கண்ணகி வருகிறாள். பொதுவாகக் கணவனோடு மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்வதற்கு மட்டுமே உடன்படுகிற பெண்களே அதிகம் உள்ளனர். ஆனால் முதன்முதலாக உறவுநிலையில் கணவனால் துன்பப்பட்டவள் கண்ணகி. முதன்முதல் கற்பு வழியில் கணவனைப் பிரிந்தபோது சொல்ல முடியாத துன்பத்தையும் வீட்டைவிட்டு வெளியே சென்றபோது சொல்ல முடிந்த துன்பத்தையும் அனுபவித்தவள். கோவலனுடன் கண்ணகி கொண்ட குடும்ப உறவில் உண்மை இருந்தது. அதனால்தான் பல வருடங்கள் மாதவியோடு வாழ்ந்த கோவலன்; ஒரு மகளைப் பெற்றெடுத்த கோவலன் கண்ணகியிடம் திரும்பி வருகிறான். அப்போது கண்ணகியைப் பார்த்துச் சொல்கிறான்.

*கோவலனும்*
*பாடு அமை சேக்கையுள் புக்குத் தன் பைந்தொடி*
*வாடிய மேனி வருத்தம் கண்டு; யாவும்*
*சலம்புணர் கொள்கைச் சலதியொடு ஆடிக்*
*குலந்தரு வான் பொருள் குன்றம் தொலைத்த*
*இலம்பாடு நாணுத் தரும் எனக்கு*

(கனாத்திறம் உரைத்த காதை - 66-71)

என்று கூறி வெட்கப்படுகிறான். என்னதான் பல ஆண்டுகள் மாதவியோடு வாழ்ந்தாலும் அவளைச் சலதியாகவே கோவலன் மனம் நினைக்கிறது. காரணம் குடும்ப உறவில் கண்ணகியின் பண்பு உயர்ந்து நின்றதால் கணவன் கூறிய அத்தனை சொற்களுக்கும் அசைந்து கொடுத்தாள். கடைசியாகக் கணவன் கள்வனென்று கொலை செய்யப்பட்ட போதும், தன் கணவன் கள்வன் இல்லை என்று கூறி நீதியை நிலைநாட்ட முடிந்தது அவளால்.

*தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்*
*பெய்யெனப் பெய்யும் மழை* (குறள் - 55)

என்று வள்ளுவன் கூறினானே அதைச் செயல்படுத்தியவள் கண்ணகி. தீயோரைத் தீக்கிரையாக்கி நல்லோரை வாழ வைக்கிறாள். என்னதான் கற்பு நிலையோடு மாதவி வாழ்ந்தாலும் அந்த உறவு குடும்ப உறவாக மதிக்கப்பெறாமல் போகிறது.

ஓர் ஆண்மகன் எத்தனை சிறப்புகளைப் பெற்றிருந்தாலும் ஒழுங்கில் அவன் தவறுகிறபோது ஒருநாள் அவமானப்பட்டுப் போக நேர்ந்திடும் என்பதற்காகக் கோவலன் ஓர் உதாரணமாவான். வாழக்கூடிய வயதில் கண்ணகியின் வாழ்க்கையை வெறுமையாக்கி விட்டு தான் மட்டும் இன்பங்களை அனுபவித்தவன் கோவலன். ஆனால் சூழல் மாறுகிறது. துன்பம் வந்தபோது வா என்று கூறியதும் உடன் வருகிறாள் கண்ணகி. தன் மனைவியின் உயரிய பண்பைக் கண்டு நாணுகிறான் கோவலன். வெகுகாலம் கழித்து மனைவியைப் பக்கத்தில் அழைத்துப் பேசுகிறான். மாதரியின் வீட்டில் யாரும் இல்லாத தனியாளான கண்ணகியைப் பக்கத்தில் வரவழைத்துக் கட்டி அணைத்து அழுகிறான்.

*மாயம் கொல்லோ ? வல்வினை கொல்லோ ?*
*யானுளம் கலங்கி யாவதும் அறியேன்*
*வறுமொழி யாளரொடு வம்பப் பரத்த ரொடு*

*குறுமொழிக் கோட்டி, நெடுநகை புக்குப்*
*பொச்சாப்புண்டு. பொருள் உரையாளர்*
*நச்சுக் கொன்றேற்கு நன்னெறி உண்டோ*
**(கொலைக்களக்காதை - 61-66)**

என்று மனம் துறந்து பேசுகிறான். அப்போதுதான் முதன்முறையாக, அமைதியாகக் கண்ணகி பேசுகிறாள். தான் இழக்கக்கூடாத இளமை வாழ்வை இழந்துவிட்டேன். அதற்காகக்கூட வருந்தவில்லை. ஆனால் எனது இல்லறக் கடமைகளை இழந்துவிட்டேனே என்று கூறுகிறாள். கடைசியாகக் கூறுகிறாள் ;

*போற்றா ஒழுக்கம் புரிந்தீர் ! யாவதும்*
*மாற்றா உள்ள வாழ்க்கையேன்* **(கொலைக்களக்காதை - 81-82)**

அதனால்தான் நீங்கள் வா என்று அழைத்தவுடன் வந்தேன் என்று கூறுகிறாள்.

## 4. சிலம்பில் சமுதாய உறவுகள்

பணம், பட்டம், பதவி என்கிற நிலையில் சமுதாய நிலையில் உண்மையான மனித உறவுகளைக் காண்பதே அரிதாகிவிட்டது. இது எல்லாக் காலத்திலும் உள்ளதுதான். ஆனால் இளங்கோவடிகள் தமது காப்பியத்தில் சிறப்பான சமுதாய உறவுகளை எடுத்துக்காட்டுகிறார். சோழநாட்டில் வாழ்ந்த கண்ணகி கோவலன் பாண்டிய நாட்டிற்குப் போவதும், அங்கே தவறு நடந்துவிட, தனது தவறை உணர்ந்த பாண்டியன் உயிர் விடுவதும், அங்கு நடந்த நிகழ்வுகளைக் கேள்விப்பட்ட சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குத் தனது சேர நாட்டில் கோவில் கட்டுவதும் வியக்கத்தக்க சமுதாய உறவைக் காட்டுகின்றன. சமுதாய நிலையிலும் தவறு செய்பவர்கள் அதன் பலனை அனுபவித்து முடிப்பதற்குள் அவமானப் படுவார்கள் என்பதைப் பொற்கொல்லன் செயலால் உணர முடிகின்றது.

சகிப்புத்தன்மையும் விட்டுக்கொடுக்கும் மனப்பான்மையும் தான் என்னும் அகங்காரம் அற்ற நிலையும் நன்றி உணர்வும் பகைமை பாராட்டாத நிலையும் மக்கள் மனங்களுள் வருகிறபோது உண்மையான மனித உறவுகள் உருவாகும். வாழ்வும் வளம் பெறும். சமுதாயமும் சீர் பெறும். இவற்றைச் சிலம்பு நமக்கு எடுத்துரைக்கிறது.

பணிவென்னும் பண்பு கொண்ட குலமகளாகக் கண்ணகி வருகிறாள். ஒழுங்கில் தவறிய கோவலன் வீழ்ந்து போகிறான். தான்

என்னும் அகந்தையற்றவனாகப் பாண்டியன் நெடுஞ்செழியன் வருகிறான். நல்லோரைப் போற்றும் வேந்தனாகச் சேரன் செங்குட்டுவன் வருகிறான். இப்படியாகக் குடும்ப, சமுதாய நிலையில் அழகிய மனித உறவுகளைச் சிலப்பதிகாரம் நமக்கு எடுத்துக்காட்டுகிறது. கலியுகத்தில் வாழ்கிற நாம் நமது இலக்கியங்கள் சொல்லும் வாழ்க்கை நியதிகளையும் உள்ளத்தில் ஆல்போல் தழைக்கச் செய்து மனித உறவுகளில் ஒழுங்கைக் காண்பது அவசியமென்பதை இக்கட்டுரை முடிவாக முன் வைக்கிறது.

## கம்பராமாயணத்தில் மனித உறவுகள்

தமிழ் இலக்கிய வரலாற்றில் கம்பராமாயணத்துக்கு ஒரு தனிச்சிறப்பு உண்டு. கோசல நாட்டையும் வடநாட்டு மன்னர் பரம்பரையையும் பாராட்டும் நூலாயினும் சோழநாடு மற்றும் தமிழ் மன்னர்களின் ஈடும் எடுப்புமற்ற பெருமித நிலையின் சாயலையே நாம் கம்பனின் இராமகதையில் காண்கிறோம். வால்மீகியின் வடமொழிக் காப்பியத்தைக் கம்பர் அவ்வாறே மொழிபெயர்க்கவில்லை. அதன் சிறப்புகளையெல்லாம் எடுத்துக்கொண்டு ஆழ்வார்களின் பக்திப் பாசுரங்களையும் பின்பற்றித் தமிழரின் நாகரிகப் பண்பாட்டுக்கேற்பச் சிற்சில மாற்றங்களும் செய்துகொண்டு இந்நூலை எழுதியுள்ளார்.

தமிழ்க் காப்பியங்களுள் பெருங்காப்பியம் சிறுகாப்பியம் என்ற பிரிவில் இடம்பெறாமல் தனித்தன்மையுடன் விளங்கும் காப்பியங்களுள் கம்பராமாயணமும் பெரியபுராணமும் அடங்கும். காப்பிய இலக்கணம் பொருந்திய நிலையிலும் அதைவிடச் சிறந்த பண்புகள் நிரம்பியதாகவும் இவை விளங்குகின்றன.

இராமன் வரலாற்றை எடுத்துரைக்கும் கம்பராமாயணத்துக்குக் கம்பர் இராம கதை என்றோ, இராமாவதாரம் என்றோ பெயர் சூட்டியிருக்க வேண்டும் என்பதைச் சிறப்புப்பாயிரம் உணர்த்துகிறது. 'காசில் கொற்றத்து இராமன் கதை' எனவும் 'இராமாவதாரப் பேர்த்தொடை நிரம்பிய நோமறு மாக்கதை' எனவும் வரும் பாயிரப் பகுதிகளால் இதை அறியலாம்.

கம்பராமாயணம் இலியாது, ஒடிசி, துறக்க நீக்கம், மகாபாரதம் முதலியவற்றை வெல்லும் சிறப்புடையது என்பது மட்டுமன்றித் தனக்கு முதல் நூலான வால்மீகி இராமாயணத்தையே மிஞ்சும் சுவையுடைய காப்பியமாகும் என்று பாராட்டுகிறார். கல்வியிற் பெரியவர் கம்பர்; கம்பன் வீட்டுக் கட்டுத் தறியும் கவிபாடும், கவிச் சக்கரவர்த்தி கம்பர் போன்ற தொடர்கள் அவர் பெருமையைப் பறைசாற்றுவன. கல்வி சிறந்த தமிழ்நாடு

புகழ்க் கம்பன் பிறந்த தமிழ்நாடு என்று பாரதியார் பாராட்டுகிறார். பல்சுவை நலமும் பொருந்திய கருவூலமாக இராமகதை திகழ்கிறது. இப்பாராட்டுகள் அனைத்தையும் உள்ளடக்கியதாக 'மானுடம் பாடும் காப்பியம்' எனச் சான்றோரால் அது சிறப்பிக்கப்படுகிறது. அதற்குக் காரணம் 'மாந்தர்கள் அனைவரும் நயத்தக்க நாகரிகம்' உடையவர்களாகப் படைக்கப் பட்டிருப்பதுவே ஆகும்.

மானுடம் பாட வந்த கம்பர் மனித உறவுகளைப் படம்பிடித்து காட்டுகிறார். அரசகுலத்தோரும் அரக்கக்குலத்தோரும், வானரக்கு லத் தோரும் வேடுவக்குலத்தோரும், இதில் உலவுகின்றனர். அதுமட்டும ன்றித் தேவ குலத்தோரும் முனிவர்களும் இருக்கின்றனர். அனைவரிடமும் உள்ள மனித உறவுகளையே இராமாயணக்கதை எடுத்துரைக்கிறது.

அயோத்தி அரசன் தசரதனுடைய மகனான இராமன் அவன் தம்பியர் பரதன், இலட்சுமணன், சத்ருக்கனன் ஆகியோர் அன்பின் அடையாளங்கள். ஒருவருக்கொருவர் போட்டி போட்டுக் கொண்டு அன்பைப் பரிமாறிக் கொள்கின்றனர். தசரதனும் அவன் மனைவியர் கோசலை, கைகேயி, சுமித்திரை ஆகியோரும் நல்லுறவு கொண்டு இனிதே வாழ்கின்றனர்.

தசரத மன்னனும் நல்லாட்சி செய்து குடும்பத்தோடும், நாட்டு மக்களுடனும் நல்லுறவு கொண்டு வாழ்ந்து வருகிறான். இடையில் வஞ்ச எண்ணம் கொண்ட மந்தரை கைகேயியின் மனதைத் தன்வயமாக்கி நல்லுறவு கொண்டிருந்த தசரதன் குடும்பத்தில் குழப்பத்தை ஏற்படுத்தும்படி தூண்டுகிறாள். மந்தரை என்கிற பெண்ணிற்கு அளவுகடந்த இடம் கொடுத்ததே கைகேயி செய்த தவறாயிற்று. அதனால் தசரதன் இறக்கிறான். இராமன் காட்டிற்குச் செல்கிறான். இவ்வளவு நடந்த பிறகும் கோசலை கைகேயியைப் பகையாக நினைக்கவில்லை. கைகேயி செய்த தவறை உணர்ந்து மன்னிப்பு கேட்டபோது மனமுவந்து ஏற்கிறாள். இந்தச் செயல்கள் யாவும் நல்லுறவின் அடையாளங்கள். தீய உறவால் வரும் துன்பங்களுக்குக் கைகேயி ஒரு சான்றாகும்.

இராமன் தனக்குப் பதவி கிடைக்கிறது எனப் பெருமை கொள்ளவும் இல்லை; கிடைக்காதபோது வெறுக்கவுமில்லை. இரண்டு நிலையிலும் அவன் முகம் செந்தாமரை போல் மலர்ந்தே இருந்தது. காரணம் பதவி கொடுத்த தசரதனுடன் பற்றுறவோ கானகம் போகுமாறு பணித்த கைகேயியுடன் பகையுறவோ இராமன் கொள்ளவில்லை. இருவரிடமும் அன்புறவே கொண்டிருந்தான். இதைக்கம்பர் கீழ்வரும் பாடலில் மிக அழகாக உணர்த்துகிறார்.

*இப்பொழு தெம்மனோரால் இயம்புதற் கெளிதோ ! யாரும்*
*செம்பருங்குணத்திராமன் திருமுகச் செவ்வி நோக்கின்*
*ஒப்பதே முன்பு பின்பு அவ்வாசகம் உரைக்கேட்ட*
*அப்பொழுது, அலர்ந்த செந்தா மரையினை வென்றதம்மா !*

(கம்பராமாயணம்)

சகோதரர் உறவுக்கு இராமனும் அவன் தம்பியரும் ஒரு சான்றாகும். பணத்திற்காகவும், பதவிக்காகவும் உடன்பிறப்புகளுக்குள் பகையுணர்வு மேலோங்கி உறவுகள் சிதைந்து போகிற நிலை இன்று மேலோங்கியுள்ளது. அப்படிப்பட்டவர்களுக்கு இராமனும் அவன் சகோதரர் வாழ்வும் ஒரு படிப்பினையாகும். தம்பியான பரதன் நாடாண்டாலென்ன, நாமாண்டா லென்ன என்று காட்டிற்கு வரும் இராமனும், பதவி வேண்டாம் அண்ணனின் உறவு வேண்டும் என்று இராமனைத் தேடி ஓடிவரும் பரதனும், அண்ணனுக்காக இல்வாழ்வைப் பெரிதாக நினைக்காமல் இராமனுடன் வரும் இலக்குவனும், சூழ்நிலை காரணமாக நாட்டையும் வீட்டையும் பாதுகாக்கும் சத்ருக்கனனும் இனிய உறவுக்கு எடுத்துக்காட்டுகள்.

காட்டிற்குச் சென்ற இராமன் பலரைச் சந்திக்கிறான். எல்லோரிடமும் பாரபட்சமின்றி அன்புடன் உறவாடுகிறான். வேடுவனாகிய குகனைத் தன் சகோதரனாக ஏற்கிறான். வானரமாகிய சுக்கிரீவனைத் தன் சகோதரனாக ஏற்கிறான். அதன்பிறகு அரக்கர் குலத்தில் வந்த வீபிடணனைச் சகோதரனாக ஏற்கிறான். சமத்துவமான உறவிற்கு ஓர் அழகிய எடுத்துக்காட்டாகும். இதனை இராமன் வீபிடணனிடம் கூறுவதாகக் கீழ்வரும் பாடலில் சுட்டுகின்றார்.

*குகனொடும் ஐவர் ஆனோம் முன்புபின் குன்று சூழ்வான்*
*மகனொடும் அறுவர் ஆனோம் எம்முறை அன்பின் வந்த*
*அகனமர் காதல் ஐய நின்னொடும் எழுவர் ஆனோம்*
*புகலரும் கானம் தந்து புதல்வரால் பொலந்தான் உந்தை*

(கம்பராமாயணம்)

பாரபட்சமின்றி, எந்தவித ஏற்றத்தாழ்வுமின்றி வேடரோடும், வானரங்களோடும் பழகிய இராமன் காட்டில் பல இடர்ப்பாடுகளைச் சந்திக்கிறான். தன் மனைவி சீதையைக் காணவில்லை. அரக்கனான இராவணன் கவர்ந்து சென்று இலங்கையிலுள்ள அசோக வனத்தில் வைக்கிறான். அரக்கக் குலத்தினராக இருந்தாலும் இராவணன் மனைவி

மண்டோதரியும், தம்பியர் கும்பகர்ணன், வீபிடணன் மூவரும் சீதையைக் கவர்ந்து வந்தது தவறு என்பதைப் பல நிலைகளில் சுட்டிக் காட்டுகின்றனர். சீதையைச் சகல மரியாதையுடன் இராமனிடம் ஒப்படைக்குமாறு கூறுகின்றனர். ஆனால் இராவணன் கேட்கவில்லை. தன்னுடன் இருக்கும் இந்திரசித்து முதலான மகன்கள் தந்தைக்குச்சாதகமாகப் பேசுகின்றனர்.

இராவணனுக்கு நல்லுரை காதில் ஏறவில்லை. அல்லுரை மட்டுமே ஏறுகிறது. அதனால்தான் விபீடணன் இராமனிடம் தஞ்சம் அடைகிறான். செஞ்சோற்றுக் கடன் தீர்க்கக் கும்பகர்ணன் அண்ணனுடன் இருந்து போரிட்டு இறந்துவிடுகிறான். உறவுகளில் இரண்டு நிலைகள் இங்கே வெளிப்படுகின்றன. மண்டோதரி இராவணனுக்கு ஒரு நல்ல மனைவி. விபீடணனும் கும்பகர்ணனும் நல்ல தம்பியர். இந்திரசித்து முதலானோர் தந்தைக்குத் துணையாக இருக்க வேண்டுமென்று நினைத்தார்களே ஒழிய அறம் பற்றி நினைக்கவில்லை. நல்லுறவுகள் என்பது ஒருவர் தவறு செய்கிறார் என்பது தெரிந்தவுடன் அவரைத் தடுத்து நிறுத்தி நிகழவிருக்கும் அழிவுகளிலிருந்து அவரைக் காக்க வேண்டும். அதைச் செய்யாமல் ஒத்து ஊதுவது சரியான அணுகுமுறை ஆகாது. நல்லுறவுமாகாது.

கும்பகர்ணன் அண்ணனுக்காக உடனிருந்து, போரில் உயிர்விட்டாலும் இராமனிடம் தன் தம்பி விபீடணனை ஒருநாளும் கைவிட்டுவிட வேண்டாம் என்று வேண்டிக் கொள்கிறான். அத்துடன் தம்பி விபீடணனை ஆரத்தழுவிக் கண்ணீர் வடிக்கிறான். இதை 'உள்ளநீர் எல்லாம் மாறி உதிரநீர் ஒழுக நின்றான்' என்கிறார் கம்பர். அருமையான இந்த உறவுநிலைகள் கம்பராமாயணத்தில் படம்பிடித்துக் காட்டப்படுகின்றன.

இராவணன் எல்லாவிதமான திறமைகளும் நிரம்பியவன். வீரம், கலை, ஆற்றல் அத்தனையும் வாய்க்கப் பெற்றவன். தனது கணவனை அண்ணன் இராவணன் வதைத்தான் என்பதை மனத்துள் கொண்டு சூர்ப்பணகையின் சொல்லை ஆராய்ந்து பாராமல் சீதையைக் கவர்ந்து வந்து தவறு செய்கிறான். பழிவாங்கும் தீய குணம் படைத்த உறவாகச் சூர்ப்பணகை வருகிறாள்.

அரக்கர் குலத்தில் பிறந்திருந்தாலும் சீதைக்குக் காவல் வைக்கப்பட்ட திரிசடை உதவி மனப்பான்மை உடையவளாக விளங்கு கின்றாள். சீதைக்கு ஆறுதலாகவும் உண்மையைக் கூறுபவளாகவும் வருகிறாள்.

போர் நடப்பது உறுதியான பிறகு மகன்களைப் போரில் இழக்கிறான் இராவணன். இறுதியில் தானும் இறக்கிறான். இராவணின் திறமை களையும், பண்புகளையும் நெஞ்சம் நெகிழுமாறு சொல்லி அழுகின்றனர் மண்டோதரியும், விபீடணனும். மண்டோதரியின் உயிரும் பிரிகிறது. விபீடணன் இறுதிச் சடங்குகளைச் செய்துவிட்டு, இராமனிடம் வருகிறான்.

விபீடணனின் அண்ணனாகிய இராவணனைக் கொன்றுவிட்டோ மென்று இராமன் வருந்தக்கூடாதென்று விபீடணன் இராமனிடம், 'அண்ணன் நல்லவனாக இருந்தும், வல்லவனாக இருந்தும் அதர்மச்செயல் ஒன்றைச் செய்துவிட்டான். நீர் அதர்மத்தையே அழித்துள்ளீர்' என்று விபீடணன் கூறுவதும், விபீடணனுக்கு இராமன் ஆறுதல் கூறி அரவணைப்பதும் அழகிய மனித உறவிற்குச் சான்றாகும். இராவணன் இறந்த பிறகு அவனிடமிருந்த தீய குணங்கள் அனைத்தும் மறைந்ததால் அவன் முகம் மும்மடங்கு பொலிந்ததாகக் கம்பர் கீழ்வரும் பாடலடிகளில் சுட்டுகின்றார்.

*செம்மடங்கல் வெகுண்டனைய சினம் அடங்க,*
*மனம் அடங்க, வினைம் வீயத்*
*தெம்மடங்க பொருதடக்கைச் செயல் அடங்க*
*மயல் அடங்க ஆற்றல் தேய*
*தம்மடங்கு முனிவரையும் தலை அடங்கா*
*நிலை அடங்கச் சாய்த்த நாளின்*
*மும்மடங்கு பொலிந்தன அம்முறை துறந்தான்*
*உயிர் துறந்த முகங்கள் அம்மா* (கம்பராமாயணம்)

கம்பராமாயணத்தின் கதாநாயகனாக, விளங்குபவன் இராமபிரான். 'அறம் வெல்லும் பாவம் தோற்கும்' என்னும் உண்மையை உணரச் செய்வதற்காக அவதாரம் எடுத்த திருமால் பொறுமையின் சிகரமாக விளங்கியவன். பதவிக்கும், பட்டத்திற்கும், பணத்திற்கும், சுகபோக வாழ்விற்கும் அடிமையாகாத அருமையான மனிதனாக வாழ்ந்து காட்டியவன். இத்தகைய இராமனுடன் தொடர்புடைய பலவிதமான பண்புகள் படைத்த உறவுகளை எடுத்துக்காட்டுவதாகக் கம்பராமாயணம் விளங்குகின்றது. பண்பு அடிப்படையிலான உறவுகளை வளர்த்துக் கொள்ள இன்றைய மக்களுக்கு வழிகாட்டுவதாகக் கம்பராமாயணம் விளங்குகின்றது.

# 7. பிற்கால நீதி இலக்கியங்களில் மனித உறவுகள்

சங்கம் மருவிய காலத்தில் அற இலக்கியங்கள் தோன்றி வாழ்வியல் நீதிகளை எடுத்துரைத்தன. அதன் பிறகு பக்தி இலக்கியங்களும் காப்பிய இலக்கியங்களும் தோன்றின. பிற்காலச் சோழர் காலத்திற்குப் பிறகு தத்துவ இலக்கியங்களும் சிற்றிலக்கியங்களும் தோன்றின. அதன்பிறகு மக்கள் பல்வேறு இன்னல்களுக்கு ஆளாயினர். பலவிதமான சமுதாயச் சீர்கேடுகளைச் செய்தனர். தவறுகளைச் சரளமாகச் செய்யத் தலைப் பட்டனர். அப்படிப்பட்ட சூழலில் கவிதைகளும் கதைகளும் படைப்பாளிகள் படைத்தனர். அத்தோடு மக்களை நல்வழிப்படுத்தும் நீதி இலக்கியங்களும் தோன்றி வளர்ந்தன. அத்தகைய நூல்களைப் பிற்கால நீதி நூல்கள் என்று அழைக்கலாம். அந்த நீதி நூல்களில் மனித உறவுகளுக்கு வழிகாட்டும் வகையில் கருத்துகள் சொல்லப்பட்டுள்ளன.

தனிமனிதனிலிருந்து சமுதாயம் வரையில் ஒருவரோடு ஒருவர் உறவுகொள்வது தான் வாழ்க்கை. அந்த உறவுகள் பண்பட்டு இருந்தால் மட்டுமே வாழ்வில் இனிமை ஏற்படும். அமைதி நிலவும். அதற்கான வழிமுறைகளைத்தான் நீதி இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன.

## 1. ஔவையாரின் ஆத்திசூடி கூறும் மனித உறவுகள்

ஆத்திசூடி என்பது காரணப்பெயர். ஆத்திப் பூமாலையை அணிந்த சிவன் என்பது இத்தொடரின் பொருள். இந்நூலில் எளிமையாகப் பொருள் அறியும் வகையில் ஒருவரியில் நீதிகள் சொல்லப்பட்டுள்ளன.

முதல் வரியிலேயே பிறருக்கு உதவி செய்து வாழும் மனதை ஏற்படுத்திக் கொள்ளவும், கோபத்தை வெளிப்படுத்தாமல் தணித்துக் கொள்ள வேண்டும் என்பதையும் கீழ்வரும் வரிகள் சுட்டுகின்றன.

*அறம் செய விரும்பு*
*ஆறுவது சினம்* (ஔவையின் ஆத்திசூடி - 1, 2)

நம்மால் கொடுக்க முடிந்த பொருளை நம்மிடம் உதவி கேட்டு வருபவருக்குக் கொடுக்க வேண்டும். பொருள் இருக்கும்போதே இல்லையென்று கூறி ஒளித்தல் கூடாது என்பதையும், உலகில் மனித

வாழ்விற்குப் பொருத்தமான ஒழுக்கத்தில் நடப்பதற்குத் தவறிவிடாதே என்பதைக் கீழ்வரும் வரிகள் கூறுகின்றன.

*இயல்வது கரவேல்*
*ஒப்புரவு ஒழுகு* (ஔவையின் ஆத்திசூடி - 3, 10)

அவரவர்களுக்கு உரியவை எவையோ அவை கண்டிப்பாக வந்தே சேரும். அதனால் நாம் முன்னேற நினைக்க வேண்டுமே தவிரப் பொறாமை கொண்டு அதனை வெளிப்படுத்தும் வார்த்தைகளை ஒருபோதும் பேசுதல் கூடாது. அது உறவுகளை முறித்து விடும் என்பதைக் கீழ்வரும் பாடலடிகள் சுட்டுகின்றன.

*ஔவியம் பேசேல்* (ஔவையின் ஆத்திசூடி - 12)

தமிழ் எழுத்துகளுள் ங கர வரிசையில் உள்ள 12 எழுத்துகளுள் ங கரம் ஒன்று மட்டுமே தமிழ்மொழிக்குப் பயன்படும். ஙா முதலிய 11 எழுத்துகளும் மொழிக்குப் பயன்படுவதில்லை. எச்சொல்லிலும் அவ்வெழுத்துக்கள் வாரா. வாராவிடினும் நெடுங்கணத்தில் சேர்த்து எழுதுகின்றனர். ங கரம் மட்டும் தான் பயனுடையதாய் இருந்து பயனற்ற ஙா முதலிய எழுத்துகளையும் தழுவிக் கொள்ளுதல் போல 'நீ பயனுடையவனாயிருந்து, உன் சுற்றத்தார் பயனற்றவராயினும் ஆதரித்துக் கொள்' என்பதைத்தான் கீழ்வரும் ஆத்திசூடி உணர்த்துகிறது.

*ஙப் போல் வளை* (ஔவையின் ஆத்திசூடி - 15)

ஒருசிலர் பேசத் தெரியுமென்று பிறர் மனம் புண்படும் வகையில் பேசுவதுண்டு. அவ்வாறு பேசாமல் கேட்பவருக்கு இன்பம் உண்டாகும்படி பேசுதல் வேண்டும் என்பதையும், நட்புக்கு ஏதுவாகிய நற்குண நற்செயல்களை நன்கு அறிந்து பின் ஒருவரோடு நட்புச்செய் என்பதையும் சுட்டுகின்றன.

*ஞயம்பட உரை*
*இணக்கம் அறிந்து இணங்கு*
(ஔவையின் ஆத்திசூடி - 17 ,19)

தம்மை ஈன்ற பெற்றோர்களை மதித்து நடப்பதும், போற்றிப் பாதுகாப்பதும், அவர்களின் அன்பையும் அவர்போல் பிறர் செய்த நன்மைகளையும் மறத்தல் கூடாது என்பதை கீழ்வரும் வரிகள் சுட்டுகின்றன.

*தந்தைதாய்ப் பேண்*
*நன்றி மறவேல்* (ஔவையின் ஆத்திசூடி - 20, 21)

நல்ல உறவுகளை வளர்த்துக் கொள்ள வேண்டுமானால், கபடமான நய வஞ்சகமான வார்த்தைகளை யாரிடமும் பேசுதல் கூடாது. ஒழுங்கற்ற செயல்களைச் செய்தல் கூடாது. அவ்வாறு செய்தால் அதனால் தீமைதான் விளையும். கடுமையான வார்த்தைகளை ஒருவரைப் பார்த்துப் பேசுவதை விட்டுவிடுதல் நலம். நற்குணங்களைக் கைவிட்டு விடுதல் கூடாது. நற்குணங்கள் வாய்க்கப் பெறுவதே கடினம். அவ்வாறு வாய்க்கப் பெற்ற நற்குணங்களைக் கைவிட்டு விடுதல் தீமையை விளைவிக்கும். இவை யாவும் கைக்கொள்கிறபோது நல்லுறவுகள் வளரும் என்பதைக் கீழ்வரும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

*வஞ்சகம் பேசேல்*
*அழகு அலாதன செயேல்*
*கடிவது மற*
*குணமது கைவிடேல்*
(ஔவையின் ஆத்திசூடி - 27, 28, 32, 36)

நல்லவர்களோடு கொண்டுள்ள உறவுகளை விட்டுப்பிரிதல் நன்மை பயக்காது. மற்றவர்களுக்குத் தீமை செய்வதை விட்டுவிடுதல் வேண்டும். அப்போதுதான் நல்லுறவுகள் வளரும். அறிஞர்கள் கூடியுள்ள கூட்டத்தில் சேர்ந்து இருத்தல் நலம் பயக்கும். பேசுகிறபோது யோசித்துப் பேச வேண்டும். கேட்பவர் உள்ளம் வருந்தும்படி ஒன்றையும் பேசாதே; யாருடனும் பகையின்றிச் சேர்ந்து வாழ்தல் வேண்டும். பால் கொடுத்தவர்க்கும் நஞ்சைக் கொடுக்கின்ற பாம்பு போன்ற கொடியவர்களுடன் பழகுவதை விட்டுவிட வேண்டும். இச்செயல்கள் யாவும் மனித உறவுகளை வளர்த்துக் கொள்ளும் வழிமுறைகளாகும்.

*கூடிப் பிரியேல்*
*கெடுப்பது ஒழி*
*சான்றோர் இனத்து இரு*
*சுளிக்கச் சொல்லேல்*
*தேசத்தோடு ஒத்துவாழ்*
*பாம்பொடு பழகேல்*
(ஔவையின் ஆத்திசூடி - 37, 38, 44, 47, 61, 77)

உயர்ந்த குணங்களை உடையவனாக வாழ்வது முக்கியமானது. தன்னைச் சார்ந்தவர்களையோ சாராதவர்களையோ அனைவருடனும் ஒத்து வாழ்தல் மனிதத் தன்மையாகும். புறங்கூறும் பண்பினை விடுதல் நாகரிகமானது. அதுமட்டுமன்றி நடுநிலையோடு இல்லாமல் ஒரு பக்கமாகப் பேசுதல் கூடாது. இப்பண்புகள் யாவும் மனிதர்கள் வாழ்வில் மகிழ்ச்சி யையும் நல்லுறவுகளையும் வளர்த்துக் கொள்ளும் வழிமுறைகளாகும்.

*உத்தமனாய் இரு*
*ஊருடன் கூடிவாழ்*
*ஓரம் சொல்லேல்*

(ஔவையின் ஆத்திசூடி - 102 ,103, 108)

ஆத்திசூடியைத் தொடர்ந்து ஔவையின் கொன்றை வேந்தன் உணர்த்தும் மனித உறவுகள் குறித்து இனிக் காண்போம்.

## 2. கொன்றை வேந்தன் உணர்த்தும் மனித உறவுகள்

கொன்றை வேந்தன் என்பது காரணப் பெயர். இந்நூலில் உள்ள கடவுள் வாழ்த்துப் பாடலில் தொடக்கத் தொடர் கொன்றைப் பூமாலையைச் சூடிய சிவன் என்பது. வேய்ந்தோன் என்பது சூடியவன் எனப் பொருள்படும்.

கடவுளை நாம் கண்ணால் கண்டது இல்லை. ஆனால் நம்மை இந்த உலகிற்கு அறிமுகப்படுத்தியவர்கள் தாயும் தந்தையும் மட்டுமே. அவர்கள் இல்லையென்றால் நம்முடைய வாழ்க்கை ஒன்றுமில்லை. எனவே கடவுளை வணங்குவதற்கு முன்பதாகத் தாயையும் தந்தையையும் பணிந்து வணங்குதல் அவசியம். அத்தகைய பண்பு இருந்தால்தான் வாழ்க்கை இனிக்கும். அந்த இல்லறமே நல்ல உறவுகளை வளர்க்கும் வழியாகும். எல்லோரிடத்திலும் பகைகொண்டு வாழ்பவன் அடியோடு கெட்டழிவான்.

தன்னிடம் கேட்பவர்கள் உன்னிலும் தாழ்ந்தவராய் இருப்பினும் அவருடன் பணிவான சொற்களையே பேசுதல் வேண்டும். குற்றம் குறைகள் இல்லாதவர்கள் மனிதர்கள் இல்லை. எனவே குற்றத்தையே ஆராய்ந்து பார்த்தால், நல்ல சுற்றத்தார் ஒருவரும் இல்லாமல் போய்விடுவார்கள்.

*அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்*
*இல்லறம் அல்லது நல்லறம் அன்று*
*ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்*
*கீழோர் ஆயினும் தாழ உரை*
*குற்றம் பார்க்கின் சுற்றம் இல்லை*

(கொன்றை வேந்தன் 1, 3, 6, 17, 18)

மனிதர்களோடு உறவு கொள்ளும்போது சிலவற்றை யோசித்து நட்புக்கொள்ளுதல் அவசியமாகின்றது. எனவே உன் நண்பன் கெடுதலைச் செய்வானாயின் அவன் நட்பைவிட்டு விலகுவதே நல்ல செயலாகும். ஒன்றைக் கூறுவதற்கு முன்பதாகப் பலமுறை சிந்தித்துக் கூறுதல் வேண்டும். உண்மையானவற்றை அறியாமல் பிறர்மீது ஒருவன் பழிச் சொற்களைச் சொல்வானாயின், அவன் எல்லார்க்கும் பகைவனாவான். உறவினர்க்கு அழகாவது எல்லோருடனும் கலந்திருந்து வாழ்தலாகும்.

*கெடுவது செய்யின் விடுவது கருமம்*
*கௌவை சொல்லின் எவ்வருக்கும் பகை*
*சுற்றத்திற்கு அழகு சூழ இருத்தல்*

(கொன்றை வேந்தன் 20, 25, 30)

தணியாத கோபமானது பகையாகி, பின்பு பெரிய சண்டையாக ஆகிவிடும். எனவே கோபத்தை அடக்குதல் அவசியம். ஒருவன் முயன்று தவமிருந்து சில பயன்களைப் பெற்றிருந்தாலும் மனிதர்களுக்குள் பகைமைகொண்டு பாவங்களைச் செய்வானானால் தெய்வத்தின் கோபத்திற்கு ஆளாவான். அவ்வாறு தெய்வமானது ஒருவன் மீது கோபம் கொண்டால் அவன் இதுவரை முயன்று பெற்ற தவமும் பயன்தராது அழிந்து போகும். பழகும்போது எதைச் சொல்ல வேண்டுமோ அவற்றை மட்டும் சொல்லுதல் வேண்டும். சிறந்த நண்பனாக இருந்தாலும் அவனிடத்து உன் வறுமையைச் சொல்லுதல் கூடாது. அது உறவை வலுவிழக்கச் செய்யும். நல்ல சேர்க்கை இல்லாத கெட்டவர் தொடர்பு துன்பத்தையே கொடுக்கும். பிறருக்குத் தீமை செய்ய நினைப்பவன் ஒன்றை மறந்து விடுதல் கூடாது. அதாவது ஒரு நாளின் முன்பகுதியில் பிறருக்குத் தீங்கு செய்யின் அவ்வாறு செய்தவனுக்கு அந்நாளின் பின்பகுதியிலே அத்தீங்கு தானே உண்டாகும்.

மெய்யுணர்வினைப் பெற்றவர்களுக்கு உற்றார் மேல் ஆசையும், அயலார்மேல் வெகுளியும் இல்லை. அமைதியாக ஒருவர் மற்றொருவரிடம் நடந்து கொள்வாரானால், துன்பம் ஏற்பட்ட காலத்து உலகத்தார் அவரைத் தாங்குவர். இவைபோன்ற பண்புகள் உறவுகளை வளரச் செய்யும்.

*தீராக் கோபம் போராய் முடியும்*
*தெய்வம் சீறின் கைதவம் மாளும்*
*தோழனோடும் ஏழைமைபேசேல்*
*நல்லிணக்கம் அல்லது அல்லல்படுத்தும்*
*முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்*
*பெற்றோர்க்கு இல்லை சுற்றமும் சினமும்*
*பையச் சென்றால் வையம் தாங்கும்*
(கொன்றை வேந்தன் 40, 43, 47, 48, 74, 65, 67)

## 3. வெற்றிவேற்கை உணர்த்தும் மனித உறவுகள்

அதிவீரராம பாண்டியன் என்பவர் எழுதியது வெற்றிவேற்கை என்பது. இதனை நறுந்தொகை என்றும் உரைப்பர். நல்ல அறக்கருத்துகளின் தொகுதி என்பது இதன் பொருளாகும்.

உறவினர்களாக இருந்தாலும் அவர்களுள் சிலர் போலியாகப் பழகுவதும் உண்டு. மனதில் ஒன்றை வைத்துக்கொண்டு வெளியில் ஒன்றைப் பேசுவதும் உண்டு. எனவே சுற்றத்தார் எல்லாரும் நல்ல சுற்றத்தினர் ஆகார்.

*உற்றோர் எல்லாம் உறவினர் அல்லர்* (வெற்றிவேற்கை - 21)

வயதில் மட்டும் பெரியவர்களாக இல்லாமல் பண்பிலும் பெரியவர்களாக வாழ வேண்டும். அப்படிப்பட்டவர்கள் மனித உறவுகளை மதித்து நடக்கக் கூடியவர்களாக விளங்குவார்கள். அப்படிப்பட்ட பெரியவர்கள் கடல் போன்ற பரந்த மனம் படைத்தவர்களாக இருப்பார்கள். அதாவது எவ்வளவு கலக்கினாலும் குளிர்ந்த கடலானது சேறாக மாறாது. பெரியோர்களுக்கு எவ்வளவுதான் கேடு செய்தாலும் அவர்கள் தம் பெருமைக் குணத்தினின்று மாறமாட்டார்கள்.

கலக்கினும் தண்கடல் சேறு ஆகாது (வெற்றிவேற்கை - 27)

குடும்ப வழக்குகளாக இருந்தாலும் பொது வழக்குகளாக இருந்தாலும் ஒருபுறம் மட்டுமே விசாரித்துத் தீர்ப்புக் கூறுதல் கூடாது. அவ்வாறு செய்வது உறவுகளுக்குள் பிளவுகளை உருவாக்குவதுடன்

தீராத பழியும் ஏற்படும். அந்தப் பாவமானது மிகுந்த துன்பத்தைக் கொடுக்கும். ஒருதலைப் பட்சமான தீர்ப்பினை ஒருவன் கூறிவிட்டால், நீதி கிடைக்காமல் வழக்கில் தோல்வி அடைந்தவர் மனம் மிகுதியும் கலங்கி நின்று அழுத கண்ணீரானது, சிவன், அரி, அயன் என்னும் மும்மூர்த்திகளும் காத்தலும், நீதி தவறியவனின் வம்சத்தை முழுவதையும் அறுக்கக்கூடிய ஒரு வாளாக அந்தப் பாவம் அமையும் என்பதைக் கீழ்வரும் பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

*இருவர்தம் சொல்லையும் எழுதரம் கேட்டே*
*இருவரும் பொருந்த உரையார் ஆயின்*
*மனுமுறை நெறியின் வழக்கு இழந்தவர்தாம்*
*மனம் உற மறுகிநின்று அழுத கண்ணீர்*
*முறையுறத் தேவர்மூவர் காக்கினும்*
*வழிவழி ஈர்வது ஓர் வாள் ஆகும்மே* (வெற்றிவேற்கை - 75)

பழிபாவங்களுக்கு அஞ்சுபவர்களே நல்லுறவுகளை வளர்த்துக் கொள்ளமுடியும். பேசுவதிலும் செய்வதிலும் பழி ஏற்படுபவற்றை விட்டுவிடுதல் நல்லது. நேர்மையான வழியில் வாழ்பவர்களை நல்லவர்கள் விரும்புவார்கள். தானாகவே நல்லுறவுகள் அவர்களைத் தேடிவரும்.

*பழியாது வருவது மொழியாது ஒழிவது*
*வழியே ஏகுக வழியே மீளுக* (வெற்றிவேற்கை - 76, 81)

## 4. உலக நீதி உணர்த்தும் மனித உறவுகள்

உலகநாதர் என்பவரால் இயற்றப்பட்ட நீதிநூல் உலகநீதி என்பது. உலகத்தில் பழங்காலம் தொடங்கிச் சிறுவர் முதல் பெரியவர் வரை எல்லாராலும் கையாளப் பெற்று வரும் மிகச் சிறந்த பழைய நீதிகளை எல்லாம் தொகுத்துக் கூறும் நீதிநூலாகும். இந்நூலும் உறவுமுறை செழிக்க வழிகாட்டுகிறது.

*போகாத இடந்தனிலே போக வேண்டாம்*
*போகவிட்டுப் புறம் சொல்லித் திரிய வேண்டாம்*
(உலகநீதி - 1)

என்னும் பாடலடிகள் மனத் தூய்மையையும் செயல் தூய்மையையும் சுட்டுகின்றன. தவறான இடங்கள் எனச் சில உள்ளன. மது, மாதுவைத் தேடிச் செல்லுதல், களவை நாடுதல் போன்ற பாதகச் செயல்கள் என

உணராமலே பலர் இவற்றைச் செய்கின்றனர். இவையாவும் செயல் தூய்மையாகும். முகத்திற்கு நேராக இனிக்க இனிக்கப் பேசிவிட்டு, புறம் பேசுதல் மிகப் பெரிய தவறாகும். அதைத்தான், செல்லத்தகாத இடத்தில் செல்லாதே, ஒருவரைக் கண்டபோது புகழ்ந்து பேசி, அவர் இல்லாதபோது புறங்கூறித் திரியாதே. அவ்வாறு செய்வது உறவுகளை அழிக்கும் என்பதை உணர்த்துகிறது.

நம்பியவர்களை நட்டாத்தில் விடுவதும் நன்மை செய்தவருக்குத் தீமை செய்வதும் இன்றைக்கு மக்களிடம் பெருகிவிட்ட பண்புகளாக இருக்கின்றன. அவை நல்லுறவிற்கு அடையாளமல்ல என்பதைத்தான் உலக நீதியும் கூறுகின்றது. நஞ்சையுடைய பாம்பைப் போன்ற கொடியவருடன் ஒருபொழுதும் பழகாதே. நல்லவர்களுடைய தொடர்பு இல்லாதவர்களுடன் நட்புச் செய்யாதே. பயமில்லாது தன்னந்தனியாகத் தனிவழியில் செல்லாதே. தன்னிடத்து வந்து சரணடைந்தவரை, ஒருபொழுதும் கெடுக்காதே.

*நஞ்சுடனே ஒரு நாளும் பழக வேண்டாம்*
*நல்லிணக்கம் இல்லாரோடு இணங்க வேண்டாம்*
*அஞ்சாமல் தனிவழியே போக வேண்டாம்*
*அடுத்தவரை ஒருநாளும் கெடுக்க வேண்டாம்*

**(உலகநீதி - 2)**

பகைவர்களை உறவென்று நம்பிப் பழகவேண்டாம் என்கிறது உலகநீதி. பிறரோடு பழகும்போது அவர்கள் செய்த தவறையே சொல்லித் திரியவேண்டாம். பஞ்சமாபாதகமாகிய கொலை, களவு செய்பவருடன் உறவு வைத்துக் கொள்ளாதே என்று எச்சரிப்பதாகக் கீழ்வரும் பாடலடிகள் அமைந்துள்ளன.

*மாற்றானை உறவென்று நம்ப வேண்டாம்* **(உலகநீதி - 3)**
*குற்றமொன்றும் பாராட்டித் திரிய வேண்டாம்*
*கொலை களவு செய்வாரோடு இணங்க வேண்டாம்* **(உலகநீதி - 4)**

நட்புக்கொண்டு சேர்ந்து பழகி உறவுகொள்வதற்குத் தகுதி இல்லாதவருடன் சேராதே. ஒருவர் செய்த நன்மையை ஒருபொழுதும் மறவாதே. ஊரில் உள்ள தீயவர்களுடன் சேர்ந்து கோள் சொல்பவனாகித் திரியாதே. உறவினரிடத்தில் இகழ்ச்சியான வார்த்தைகளைச்

சொல்லாதே. புகழ் பெறுவதற்குக் காரணமான காரியத்தைச் செய்யாதே. கடன் வாங்குவோர்க்குப் பிணையாகித் துணையாகச் சென்று திரியாதே. இவ்வாறு செய்யாமல் இருந்தால் நல்லுறவுகள் வளரும்.

*சேராத இடந்தனிலே சேர வேண்டாம்*
*செய்ந்நன்றி ஒரு நாளும் மறக்க வேண்டாம்*
*ஊரோடும் குண்டுணியாய்த் திரிய வேண்டாம்*
*உற்றாரை உதாசினங்கள் சொல்ல வேண்டாம்*
*பேரான காரியத்தைத் தவிர்க்க வேண்டாம்*
*பிணைபட்டுத் துணைபோகித் திரிய வேண்டாம்*

(உலகநீதி - 8)

ஒரு சிலர் எப்பொழுது பார்த்தாலும் வீண்வாதம் செய்து கொண்டிருப்பார்கள். அப்படிப்பட்டவரிடம் பழகுதல் தீமையைத் தரும். அவதூரான பழிகளைக் கூறுபவருடன் பழகுதல் தீமையைத்தரும். தன்னைத்தான் புகழ்வது நல்லதல்ல. உன் வலிமையைப் புகழ்ந்து கூறிக் கலகம் செய்து அலைவது தீமையைத்தரும். சொல்லாமல் போனால் சாவு நேருமாயினும் பொய்யைச் சொல்லாதே. அந்தப் பொய் தீமையைத்தரும். எப்பொழுது பார்த்தாலும் உன்னை இகழ்ந்து பேசும் உறவினரை விலக்கி விடு. நீயும் விரும்பாதே. எல்லாம் வல்ல இறைவனை எப்பொழுதும் மறவாமல் இரு. இவையாவும் கைக்கொள்கிறபோது நல்லுறவுகளை வளர்த்து வளம் சேர்க்கும்.

*மறம் பேசித் திரிவாரோடு இணங்க வேண்டாம்*
*வாதாடி வழக்கழிவு சொல்ல வேண்டாம்*
*திறம் பேசிக் கலகமிட்டுத் திரிய வேண்டாம்*
*தெய்வத்தை ஒருநாளும் மறக்க வேண்டாம்*
*இறந்தாலும் பொய்தன்னைச் சொல்ல வேண்டாம்*
*ஏசலிட்ட உற்றாரை நத்த வேண்டாம்* (உலகநீதி - 10)

இவையாவற்றையும் விட ஒற்றுமையுள்ள குடும்பத்தைக் கலகம் செய்து கெடுத்தால் தன் குடும்பம் மற்றொருவரால் கெடுக்கப்படும் என்பதை உணர்ந்து செயல்பட வேண்டும்.

*கூறாக்கி ஒரு குடியைக் கெடுக்க வேண்டாம்* (உலகநீதி - 12)

## 5. ஔவையின் மூதுரை உணர்த்தும் மனித உறவுகள்

அனுபவத்தால் தாம் பெற்ற கருத்துக்களை மற்றவர்களும் உணர்ந்து அறவழியில் வாழ வேண்டும் என்கிற நோக்கத்தில் முதுமையான உரைகளை 'மூதுரை' என்னும் நூலில் ஔவையார் குறிப்பிட்டுள்ளார். அவற்றுள் மனித உறவுகளுக்கு வழிகாட்டும் கருத்துகளும் உள்ளன.

மனிதர்களோடு நாம் உறவுகொள்ளும்போது, உதவி மனப்பான்மையோடு வாழ வேண்டும் என்று அறநூல்களும், அனுபவமிக்க பெரியோர்களும் சொல்வார்கள். ஆனால் நாம் செய்யும் உதவிகளைப் பெறுவதற்குத் தகுதியல்லாதவர்களுக்கு உதவி செய்தால் அது நமக்குத் தீமையாக முடியும். ஆகையால் பிறருக்கு உதவி உறவாடுவதில்கூட எச்சரிக்கையுடன் இருக்க வேண்டுமென்பதைக் கீழ்வரும் பாடலடிகள் சுட்டுகின்றன.

*நல்லார் ஒருவர்க்குச் செய்த உபகாரம்*
*கல்மேல் எழுத்துப்போல் காணுமே - அல்லாத*
*ஈரமிலா நெஞ்சத்தார்க்கு ஈந்த உபகாரம்*
*நீர்மேல் எழுத்திற்கு நேர்* (மூதுரை - 5)

நல்லவர்களுடன் தொடர்பு கொள்வதும் நல்லனவற்றைக் கற்றுக் கொள்வதும் தேவையாகும். நல்ல அறிவொழுக்கம் உடையோரைப் பார்ப்பதுவும் மிக நல்லது. நல்லவருடைய நல்ல குணங்களை எடுத்துப் பேசுதலும் நல்லதே. அவ்வாறான நல்லவருடன் கூடிக் கலந்திருத்தலும் நல்லதே.

*நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க*
*நல்லார்சொல் கேட்பதுவும் நன்றே - நல்லார்*
*குணங்கள் உரைப்பதுவும் நன்றே அவரோடு*
*இணங்கி இருப்பதுவும் நன்று* (மூதுரை - 8)

நல்லவர்களுடன் கொள்ளும் உறவானது நன்மையைத் தருவது போன்று தீயவர்களுடன் கொள்ளும் உறவானது தீமையை விளைவிக்கும்.

*தீயாரைக் காண்பதுவும் தீதே திருவற்ற*
*தீயார்சொல் கேட்பதுவும் தீதே - தீயார்*
*குணங்கள் உரைப்பதுவும் தீதே அவரோடு*
*இணங்கி இருப்பதுவும் தீது* (மூதுரை - 9)

என்ற பாடல் வரிகள் உறவுநிலையைச் சுட்டுகின்றன. தீய குணம் உடையாரைப் பார்ப்பதும் தீமை தருவதே. தீயவருடைய பயனற்ற சொற்களைக் கேட்பதுவும் தீமை தருவதே. தீயவருடைய கெட்ட குணங்களை எடுத்துச் சொல்லுதலும் தீமை தருவதே. அத்தீயவருடன் கூடி இருத்தலும் தீமை தருவதே. இக்கருத்தைத்தான் திருவள்ளுவரும்,

*நன்றாற்ற லுள்ளுந் தவறுண்டு அவரவர்*
*பண்பறிந்த தாற்றாக் கடை* (குறள் - 469)

என்ற குறளில் சுட்டுகின்றார்.

செத்துக் கிடந்த ஒரு வேங்கைப் புலியின் நோயைத் தன் மந்திரத்தால் போக்கிப் பிழைக்க வைத்த ஒரு மருத்துவன் அப்பொழுதே அப்புலிக்கு இறையாவதைப்போல, நன்றி உணர்வு இல்லாத அற்ப அறிவினர்க்குச் செய்த உதவி, கல்லின்மேல் போடப்பட்ட மண்கலம் போல உடைந்து, செய்தவனுக்கே தீமையை விளைவிக்கும்.

*வேங்கை வரிப்புலிநோய் தீர்த்த விட காரி*
*ஆங்கு அதனுக்கு ஆகாரம் ஆனால் போல்-பாங்கு அறியா*
*புல்லறிவாளர்க்குச் செய்த உபகாரம்*
*கல்லின் மேல் இட்ட கலம்* (மூதுரை - 15)

மக்கள் உறவில் நல்லுறவுகள், தீய உறவுகள் என இரண்டு நிலைகள் உள்ளன. நல்லுறவுகளாக விளங்குபவர்கள் பிறர் தீமை செய்தாலும் பொறுத்துக் கொண்டு அடக்கமுடன் இருப்பர். தக்க காலம் வரும் வரையில் காத்திருப்பர். அப்படிப்பட்டவர்களை அறிவில்லாதவர்கள் என நினைத்து அற்பமாக எண்ணுதல் கூடாது. அவர்களின் உறவை வளர்த்துக் கொள்ளுதல் வேண்டும். கொக்கானது நீரணையிலிருந்து பாய்கின்ற நீரில் ஓடுகின்ற சிறுமீன்கள் ஓடிக் கொண்டிருக்க, அவற்றை விட்டுவிட்டு இரையாவதற்கேற்ற பெரிய மீன் வரும் வரையிலும் செத்தாற் போல அடங்கியிருக்கும். அதுபோல, தக்க பகைவர் வரும் வரையிலும் அடங்கி இருப்பவரை அறிவில்லாதவர் என நினைத்து அவரை வெல்லுவதற்கு நினைக்கவும் வேண்டாம். நினைப்பின் அது பெரிய கேடாகும்.

*அடக்கம் உடையார் அறிவிலர் என்று எண்ணிக்*
*கடக்கக் கருதவும் வேண்டா - மடைத்தலையில்*
*ஓடுமின் ஓட உறுமீன் வரும் அளவும்*
*வாடி இருக்குமாம் கொக்கு* (மூதுரை - 16)

நீர் வறண்ட குளத்தினின்றும் விட்டு நீங்குகின்ற நீர்ப்பறவை போல, செல்வம் மிகுந்த காலத்து ஒன்றிலிருந்து வறுமை வந்த பொழுதுவிட்டு நீங்குவோர் சிறந்த உறவினர் ஆகார். அக்குளத்திலுள்ள கொட்டியும் அல்லியும் நெய்தலும் போல நீருள்ள காலத்து நன்கு வளர்ந்து நீரற்ற காலத்துச் சேர்ந்து அழிவதுபோல நீங்காது சேர்ந்திருந்து துன்பத்தைக் கூடி அனுபவிப்பவரே சிறந்த உறவினராவர்.

*அற்ற குளத்தில் அறுநீர்ப் பறவைபோல்*
*உற்றுழி தீர்வார் உறவு அல்லர் - அக்குளத்தில்*
*கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே*
*ஒட்டி உறுவார் உறவு* (மூதுரை - 17)

நெருங்கிய உறவினர்களுள் சிலர் வஞ்சநெஞ்சம் படைத்தவராகவும் இருப்பார்கள். இரத்த உறவின்றி தூரத்து உறவானாலும் சிலர் வெள்ளை நெஞ்சத்தோடு பழகுவார்கள். எனவே யாராக இருந்தாலும் அவர்களின் செயல்பாடுகளை வைத்து நல்லார் என நினைத்தால் மட்டுமே தொடர்ந்து உறவை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

*உடன்பிறந்தார் சுற்றத்தார் என்று இருக்க வேண்டா*
*உடன்பிறந்தே கொல்லும் வியாதி - உடன்பிறவா*
*மாமலையில் உள்ள மருந்தே பிணி தீர்க்கும்*
*அம்மருந்து போல்வாரும் உண்டு* (மூதுரை - 20)

பிணியானது உடம்புடன் கூடவே பிறந்து அவ்வுடம்பினைக் கொல்லுகின்றது. அதனால் தம்மோடு உடன்பிறந்தவர் எல்லோரும் நல்ல சுற்றத்தார் என்று நினைக்க வேண்டா. உடன்பிறவாத பெரியமலையில் அம்மூலிகை மருந்துகளைப்போல் அயலாராயிருந்தும் உதவி செய்பவரும் உலகில் சிலர் உளர்என்பதை உணர்தல் நலம்.

குளத்தில் உள்ள நல்ல தாமரை மலரில் நல்ல அன்னப்பறவை சேர்ந்தாற்போல், கற்றவரைக் கற்றவரே விரும்பிச் சேர்வர். இடுகாட்டில் உள்ள பிணத்தைக் காக்கை விரும்பும். அதுபோல, கல்லாத மூடரை மூடரே விரும்பிச் சேர்வர்.

*நற்றாமரைக் கயத்தில் நல்லன்னம் சேர்ந்தாற்போல்*
*கற்றாரைக் கற்றாரே காமுறுவர் - கற்பிலா*
*மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் முதுகாட்டில்*
*காக்கை உகக்கும் பிணம்* (மூதுரை - 24)

## 6. ஔவையின் நல்வழி உணர்த்தும் மனித உறவுகள்

மக்கள் நல்வழியில் வாழ மெய்நூல்களில் முடிந்த வரையில் நல்ல நெறிகளைக் கூறும் நூலே நல்வழி.

பொருள் இருக்கும் போதே உதவி கேட்பவருக்கு இல்லை என்று கூறும் மக்கள் பலர் உண்டு. ஆனால் நல்லுறவை நாடும் நல்ல குடியில் பிறந்தோர் அவ்வாறு செய்யமாட்டார்கள். ஆற்றில் வெள்ளம் வறண்டு போய், மணல் வெயிலில் காய்ந்து நடப்பவர் பாதங்களைச் சுடுகின்ற அக்காலத்திலும் அந்த ஆறானது, ஊற்று நீர்ப் பெருக்கினால் உலக மக்களை உண்ணச் செய்யும். அதுபோல, உயர்ந்த குடிப்பிறந்தவர் வறுமை உற்றாராயினும், தம்மிடம் வந்து இரந்து கேட்பவருக்கு மனம் பொருந்தி இல்லை என்று சொல்லமாட்டார். முடிந்தவரை கொடுத்து உதவுவர்.

*ஆற்றுப் பெருக்கற்று அடிசுடும் அந்நாளும் அவ்வாறு*
*ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும் - ஏற்றவர்க்கு*
*நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தார் ஆனாலும்*
*இல்லை என மாட்டார் இசைந்து* (நல்வழி - 9)

மரங்கள் பழுத்திருந்தால், இப்பழங்களைத் தின்பதற்கு வா என்று வௌவாலைக் கூவி வேண்டி அழைப்பவர் அம்மரங்களுக்குப் பக்கத்தில் ஒருவரும் இல்லை. கன்றை உடைய பசுவானது பாலைச் சுரந்து கொடுப்பது போல, உள்ளதை ஒளிக்காமல் கொடுப்பாராயின், உலகத்தார் தாமே வந்து சுற்றத்தினராவர்.

*மரம் பழுத்தால் வௌவாலை வாஎன்று கூறி*
*இரந்தழைப்பார் யாவரும் அங்கில்லை - சுரந்தமுதம்*
*கற்றா தரல்போல் கரவாது அளிப்ப ரேல்*
*உற்றார் உலகத்தவர்* (நல்வழி - 29)

## 7. சிவப்பிரகாசரின் நன்னெறி கூறும் மனித உறவுகள்

சிவப்பிரகாச சுவாமிகள் வாழ்விற்குரிய நல்ல நெறிகளை 'நன்னெறி' என்னும் நூலில் கூறியுள்ளார். நட்புறவில் கருத்து முரண்பாடுகள் வருவது இயற்கை. அதற்காக உடனே பிரிந்து விடுதல் கூடாது. உடனிருந்து பேசி ஐயங்களைத் தீர்த்துக் கொள்ள வேண்டும். அவ்வாறின்றி உறவாடிப் பிரிந்து மீண்டும் உறவாடுவது பார்ப்பவர்களை ஏளனமாக எண்ண வைக்கும்.

நெல்லினின்றும் உமியானது சிறிதளவு நீங்கி முன்போலவே ஒட்டிக் கொண்டாலும் முளைத்தற்கேற்ற வலிமை இல்லாது போய்விடும். அதுபோல பிரிதல் இல்லாத நண்பர் இருவர், மனவேறுபாட்டால் பிரிந்து முன்போலவே கூடினாலும், ஆராயுமிடத்து அவர் பெருமை அற்பம் உடையதாகும்.

*நீக்கம் அறும் இருவர் நீங்கிப் புணர்ந்தாலும்*
*நோக்கின் அவர் பெருமை நொய்தாகும் - பூக்குழலாய்*
*நெல்லின் உமிசிறிது நீங்கிப் பழமைபோல்*
*புல்லினும் திண்மைநிலை போம்* (நன்னெறி - 5)

## 8. நீதிவெண்பா உணர்த்தும் மனித உறவுகள்

மனித வாழ்க்கைக்குப் பயன்படும் நீதிகளை எல்லாம் தொகுத்து வெண்பாக்களால் கூறும் நூலே நீதிவெண்பா என்பது. இதன் ஆசிரியர் யாரென்று தெரியவில்லை.

நல்ல குடிப்பிறப்பு ஒரு மனிதனுக்குத் தேவைதான். ஆனால் நற்குடிப்பிறந்தோரிலும் தீயோர் உண்டு. குணத்தால் இழிகுடியில் பிறந்தோரிலும் நல்லோர் உண்டு. எனவே குணம் நாடிக் குற்றமும் நாடி அவற்றுள் அதிகமுள்ளதன் அளவில் ஒரு மனிதனை இனம் காண வேண்டும். அப்படியான பொதுநிலைப் பண்பு கொண்டு நட்பு கொள்வதே சிறந்ததாகும்.

தாமரை மலரும், பொண்ணும், முத்தும், தாமரையும், பாலும் சிறந்த மணமுள்ள தேனும், பட்டும், புனுகும் சிறந்த மணமுள்ள சவ்வாதும், நெருப்பும் ஆகிய இப்பதினொன்றும் எவ்வளவு கீழான இடத்திலிருந்து கிடைத்தாலும் அவற்றை உலகத்தார் இகழ்ந்து கூற மாட்டார்கள். ஆதலால், நல்ல மேன்மைக் குணமுடையோர் எந்த இடத்தில் பிறந்திருந்தாலும் அதனால் குறைவு என்ன ? ஒன்றுமில்லை என்னும் கருத்தை கீழ்வரும் பாடலடிகள் சுட்டுகின்றன.

*தாமரை பொன் முத்துச் சவரம் கோரோசனைபால்*
*பூமருதேன் பட்டுப் புனுகு சவ்வாது - ஆமழல் மற்று*
*எங்கே பிறந்தாலும் எள்ளாரே நல்லோர்கள்*
*எங்கே பிறந்தாலும் ஏன் ?* (நீதிவெண்பா - 1)

நல்ல நாக்கானது தனக்குப் பகையான முப்பத்திரண்டு பற்களைக் கொண்டே பலவிதமான சுவைகளையும் சுவைத்து அனுபவிப்பது போல பகைவர் பலராயினும் அவர்களிடம் உண்மையான அன்பையே செலுத்தி அப்பகைவர்களால் பலவகையான இன்பங்களையும் அடைதல் நல்லவர்களின் செயலாகும் என்பதைக் கீழ்வரும் பாடலடிகள் சுட்டுகின்றன.

*பகைசேரும் எண்ணான் பற்கொண்டே நன்னா*
*வகைசேர் சுவையருந்து மாபோல் - தொகைசேர்*
*பகைவரிடம் மெய்யன்பு பாவித்து அவரால்*
*சுகமுறுதல் நல்லோர் தொழில்* (நீதிவெண்பா - 5)

ஒருசிலர் எவ்வளவுதான் நன்மைகளைப் பெற்றாலும் கயமைக் குணத்திலிருந்து மாறமாட்டார்கள். அவர்கள் பாம்பைவிடக் கொடியவர்கள். அப்படிப்பட்டவர்களின் உறவைத் துண்டித்து விடுதல் நல்லது. கெட்ட குணம் உடையோரும் பாம்புகளும் ஓர் அளவில் ஒத்திருந்தாலும், பாம்புகள் கெட்டவரை ஒப்பாகா. எவ்வாறெனில் பாம்புகள் மணிமந்திரங்களால் கொடுமை செய்யாமல் அடங்கி நிற்கும். ஆனால் கயவர்கள் எவ்வகையாக முயன்றாலும் நல்வழிக்கு மாறமாட்டார்கள். அவர்கள் உறவை ஒதுக்குதல் நன்மை பயக்கும்.

*துர்ச்சனரும் பாம்பும் துலைஒக்கினும் பாம்பு*
*துர்ச்சனரை ஒக்குமோ தோகையே - துர்ச்சனர்தாம்*
*எந்தவிதத்தாலும் இணங்காரே பாம்புமணி*
*மந்திரத்தால் ஆமே வசம்* (நீதிவெண்பா - 19)

எப்பொழுதும் போர் செய்கின்ற அரக்கர்கள் கண்ணபிரானை வெல்லுவார்களோ! வெல்ல மாட்டார்கள். அதுபோல, பொய் மெய்யை வெல்லமாட்டாது. மிகுந்த கோபம் மேலான பொறுமையை வெல்லாது. அன்புமிக்க நல்வினையைத் தீவினை வெல்லாது. நல்லோர் வீழ்ந்ததுபோல் இருந்தாலும் வாழ்வார்கள். தீயோர் வாழ்வதுபோல் இருந்தாலும் வீழ்வார்கள்.

*சத்தியத்தை வெல்லாது அச்த்தியந்தான் நீள் பொறையை*
*மெத்திய கோபமது வெல்லாது - பக்திமிகு*
*புண்ணியத்தைப் பாவமது வெல்லாது போர் அரக்கர்*
*கண்ணனைத்தான் வெல்லுவரோ காண்"* (நீதிவெண்பா - 53)

ஒவ்வொரு உறவிலும் ஒரு நன்மையும் பேறும் கிடைக்கப்பெறும். அதனால் எல்லா உறவுகளையும் மதித்து நடக்க வேண்டும். தாயார் இறந்துவிட்டால் மகனின் நாவிற்குச் சிறந்த சுவைப் பொருள்களை அனுபவிக்க முடியாமல் போகும்.

தந்தை இறந்தார் என்றால், அம்மகனுக்குக் கல்வி கற்க முடியாமல் போகும். உடன்பிறந்தவர்கள் இறந்துவிட்டால் தோள் வலிமை கெட்டுப் போகும். மனைவியே இறந்துவிட்டாள் என்றால், மேற்சொன்னவைகள் எல்லாம் இல்லாமல் கெட்டுப்போகும். எனவே, எல்லா உறவுகளும் ஒரு மனிதனுக்குத் தேவை.

*மாதா மரிக்கின் மகன் நாவின் நற்சுவை போகும்*
*தாதா எனில் கல்விதான் அகலும் - ஓதின் உடன்*
*வந்தோன் மரித்துவிடில் வாகுவலிபோம் மனையேல்*
*அந்தோ ! இவையாவும் போம்* (நீதிவெண்பா - 61)

நீதிவெண்பா மனித உறவுகள் பற்றிய கருத்துகளை எடுத்துரைப்பது போன்றே நீதிநெறி விளக்கமும் எடுத்துரைக்கின்றது.

## 9. நீதிநெறி விளக்கம் உணர்த்தும் மனித உறவுகள்

குமரகுருபரர் எழுதிய நீதிநெறி விளக்கம் என்பது, திருக்குறளில் கூறப்பெற்றுள்ள அறவுரைகள் பலவற்றையும் ஒரு சேரத் தொகுத்துச் சுருக்கமாகவும் தெளிவாகவும் விளக்கிப் பாடப்பெற்ற ஒரு நீதிநூல் ஆகும்.

தூக்கிப் பிடித்தால் தராசின் கனம் குறைந்த பொருள் உள்ள தட்டு மேலும் மேலும் எழுவதற்கு உயரும் பொழுதெல்லாம் கனம் மிகுந்த பொருலுள்ள தட்டன்றோ தாழ்ந்து போகும்.

அதுபோல, கல்வியிலும் செல்வத்திலும் நிறைந்த சான்றோரா யிருப்பவர்கள் அவ்விரண்டு செல்வமும் இல்லாது குறைந்த சிறியவர் களிடத்தில் உண்டான வரம்புகடந்த செயலைக்கண்டால் அவர்களுக்கு மிகவும் பணிந்து நடப்பார்கள். அதுவே அவர்களின் பண்பை வெளிப் படுத்தும். நல்லுறவுகளை வளர்க்கும்.

*ஆக்கம் பெரியார் சிறியார் இடைப்பட்ட*
*மீச்செலவு காணின் நனிதாழ்ப - தூக்கின்*
*மெலியது மேன்மேல் எழச் செல்லச் செல்ல*
*வலிதன்றே தாழும் துலைக்கு* (நீதிநெறி விளக்கம் - 17)

வெளியுறவுகளைப் பண்படுத்திக் கொள்வதற்கு முன்பதாகக் குடும்ப வாழ்வில் நல்லுறவு நிலை இருக்க வேண்டும். கற்பாகிய ஆடையை உடுத்திக் கொண்டு, அன்பாகிய மலரைச்சூடி, உடம்பில் நாணமாகிய சந்தனத்தைப் பூசி, நற்குணம் நற்செய்கை ஆகிய ஆபரணங்களை அணிந்த மனைவிக்கு, மக்களைப் பெறுதலான ஒப்பற்ற செல்வமும் உளதானால், அவளை மனைவியாகக் கொண்ட கணவனுக்கு, அவன் செய்ய வேண்டிய தவம் வேறில்லை. இந்த இல்லறமே தவமாகும். அத்தகைய சிறப்பு வாய்ந்த இல்லற உறவுகளில் உண்மை இருத்தல் வேண்டும்.

*கற்புடுத்து அன்பு முடிந்து நாண் மெய்ப்பூசி*
*நற்குண நற்செய்கை பூண்டாட்கு - மக்கள் பேறு*
*என்பதோர் ஆக்கமும் உண்டாயின் இல்லன்றே*
*கொண்டாற்குச் செய்தவம் வேறு* (நீதிநெறி விளக்கம் - 81)

## 10. அறநெறிச்சாரம் உணர்த்தும் மனித உறவுகள்

அறநெறிகளின் பிரிவாக இருக்கும் பண்புகளைத் தொகுத்துரைக்கும் நூலே அறநெறிச்சாரம் என்பதாகும். இதை எழுதிய ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

உண்மை, பொறுமை, பெருமை, தவம், அடக்கம், நடுவுநிலைமை, தனக்கென ஒன்றும் இல்லாது பொது நலனுக்காக உழைத்தல், பற்றுவிடுதல், நல்லனசெய்தல், மாறுபடாத நோன்புகளை மேற்கொள்ளுதல் ஆகிய இந்த அறங்கள் பத்தும் மேலான குணங்களாகும். இத்தகைய குணமுடையவர்கள் மனித உறவுகளை மதித்து நடப்பவராவர்.

*மெய்ம்மை, பொறையுடைமை, மேன்மை, தவம், அடக்கம்*
*செம்மை, ஒன்று இன்மை, துறவுடைமை - நன்மை,*
*திறம்பா விரதம் தரித்தலோடு இன்ன*
*அறம்பத்தும் ஆன்ற குணம்* (அறநெறிச்சாரம் - 12)

மனித உறவுகள் வலுப்பெறாமல் போவதற்கு முக்கியக் காரணம் புறம் பேசுவதாகும். உண்மை உறவுகள் புறங்கூறுதலால் சிதைந்து போகின்றன. புறம்பேசுதல் என்பது இழிவான பண்பாகும் அதனை விட்டுவிடுதல் உறவுமுறைக்கு உகந்தது ஆகும்.

தேவர்கள் இயல்பிலேயே இமையாக் கண்ணினர். அத்தகையவர் தம் கண்களைச் சிறுபொழுதும் மூடாமல் நின்று இருப்பதற்குக் காரணம், ஒருவன் முன்னால் நின்று முகமலர்ச்சியோடு வாயினால் கல்லும்

உருகும்படி இனிய சொல்லைக்கூறி அவனைப் புகழ்ந்து, அவன் சென்ற பின்னர்த்தாம் புகழ்ந்த அவனையே இகழ்ந்து கூறும் கயவர்களைக் கண்டு, கண்களை மூடினால் தம்மையும் அவ்வாறே இகழ்ந்து கூறுவர் என்று அஞ்சினமையே ஆகும். தேவர்களும் அஞ்சத்தக்க இழி பண்புடையவர்களை நாடி நல்லோர் உறவு கொள்ளார்.

*முன்நின்று ஒருவன் முகத்தினும் வாயினும்*
*கல்நின்று உருகக் கலந்துரைத்துப் - பின்நின்று*
*இழித்துரைக்கும் சான்றோரை அஞ்சியே, தேவர்*
*விழித்து இமையார் நின்ற நிலை* (அறநெறிச்சாரம் - 84)

ஆராய்ந்து பார்க்குமிடத்து, நண்பர் என்று சொல்லுவதற்கு உரியவர், இந்த உலகத்தில் பல பிறவிகளால் துன்பம் அடைந்தோம் என்று சொல்லித் துணிந்து அறநெறியினைக் கைவிடாது, ஒழுக்கத்தினை உணர்த்தித் தீ நெறியினின்றும் நீக்குபவரே ஆவர் என்னும் கருத்தைக் கீழ்வரும் பாடலடிகள் சுட்டுகின்றன.

*நட்டார் எனப்படுவார் நாடுங்கால் வையத்துப்*
*பட்டாம் பலபிறப்புத் துன்பம் என்று - ஒட்டி*
*அறநெறி கைவிடாது ஆகாரம் காட்டிப்*
*பிறநெறி போக்கிற்பவர்* (அறநெறிச்சாரம் - 94)

நாட்டிலே இருந்து துன்பங்கள் மிகுதியாக உண்டாக, அறிவில்லாமல், தன் உயிர்க்கு உதவும் உறுதி தரக்கூடியவற்றைச் சிறிதும் தெரியாதவன் எனப் பலராலும் இகழப்பட்டு வாழ்வதைக் காட்டிலும், இல்வாழ்க்கையை விட்டு வீட்டினின்றும் வெளியேறி, விலங்குகள் வாழும் பெரிய காட்டின் நடுவே சென்று, இனிமை தராத அந்த உடலினை விடுதல் நல்லது. இத்தகைய பண்பு உடையவர் மனித உறவிற்குப் பொருத்தமில்லாதவர்.

*ஆற்றாமை ஊர அறிவின்றி யாதொன்றும்*
*தோற்றான் எனப்பட்டு வாழ்தலின் - மாற்றி*
*மனையின் அகன்றுபோய் மாபெரும் காட்டில்*
*நனையில் உடம்ப இடுதல் நன்று* (அறநெறிச்சாரம் - 211)

நல்ல அறமே என் தந்தை. அறிவே என் தாய். நன்மையை உணர்வதற்குக் காரணமாகிய கல்வியே என் தோழன். மனத்தெளிவே என் தம்பி, உயர்வுக்கு உறுதி தரக்கூடிய இந்தச் சுற்றத்தார் போல, எனக்கு இவையில்லாத தந்தை, தாய், தோழன், உடன்பிறந்தவர்களாகிய பொய்ச் சுற்றத்தார் உறுதி தருவார்களோ ! தரமாட்டார்கள்.

அறம், நிறை, கல்வி, துணிவு ஆகியவையே ஒருவனுக்கு நன்மை தரக்கூடிய உண்மையான சுற்றத்தார் ஆவர். இப்பண்புகளுடைய ஒருவனை எல்லோரும் நாடிச்சென்று உறவுகொள்வர்.

*நல்லறம் எந்தை, நிறைஎம்மை; நன்குணமும்*
*கல்வி என் தோழன்; துணிவு எம்பி - அல்லாத*
*பொய்ச் சுற்றத்தாரும் பொருளோ பொருளாய*
*இச் சுற்றத்தாரில் எனக்கு ?* (அறநெறிச்சாரம் - 212)

## 11. பாரதியாரின் புதிய ஆத்திசூடி உணர்த்தும் மனித உறவுகள்

நினைப்பன எல்லாம் உயர்வு தருகின்ற எண்ணங்களையே எண்ணி ஒற்றுமையுடன் வாழப் பழகுபவர்கள் உறவு நிலையில் வலுப்பெறுவர்.

*எண்ணுவது உயர்வு*
*ஒற்றுமை வலிமையாம்* (பாரதியின் ஆத்திசூடி - 7, 10)

## 12. பாரதிதாசன் ஆத்திசூடி உணர்த்தும் மனித உறவுகள்

அனைவரும் உறவினர் என நினைப்பதும், ஒற்றுமையில் அமைதி காண்பதும், பிறர் கெட்டுப் போவதற்குக் காரணமான நினைப்பை நீக்குவதும், பிறர் தம்மிடம் பேசும் பேச்சை நன்கு கேட்டுக் கொண்டு பதில் கூறுவதும், பயனில்லாத பேச்சுகளைப் பேசாமல் இருப்பதும், உலகமக்கள் நல்வாழ்வு பெறுவதற்காகத் தொண்டாற்றி வாழ்வதும் மனித உறவுகளின் மாண்புகளாகும்.

*அனைவரும் உறவினர்*
*ஒற்றுமை அமைதி*
*கெடுநினைவகற்று*
*கேட்டு விடை இறு*
*வெறும் பேச்சுப் பேசேல்*
*வையம் வாழ வாழ்*
(பாரதிதாசன் ஆத்திசூடி - 1, 10, 19, 20, 83, 85)

மனித வாழ்க்கை என்பது உறவுகளில் தொடங்குகின்றது. உறவுகளில் வளர்கின்றது. உறவுகளில் நிலைக்கின்றது. உறவுகளால் முடிவுடைகின்றது. எனவே மற்ற உயிரினங்களுக்கு இல்லாத பெருமையாகிய உறவுமுறை மனிதர்களுக்கு மட்டுமே வாய்க்கப் பெற்றது. அத்தகைய உறவுமுறைகள் நல்வழியில் அமைந்து அறவாழ்க்கை வாழ்வதற்குரிய பண்புகளை மக்கள் பெற்றிருத்தல் அவசியம் என்பதைத் தான் பிற்கால நீதி நூல்கள் பன்னிரண்டும் உணர்த்துகின்றன என்பதை அறியலாம்.

# 8. சிற்றிலக்கியங்களில் மனித உறவுகள்

தமிழ் இலக்கிய வரலாற்றின் பிற்பகுதி முழுவதும் சிற்றிலக்கியச் செல்வாக்கு மிகுதி. இதன் தோற்றத்திற்கான வித்தும் வளர்ச்சியும் சங்க காலத்திலேயே காணப்படுகின்றன. ஆற்றுப்படை ஒரு துறையாகவும் தனிப்பெரும் பாடல்களாகவும் அன்றே வளர்ந்தமைந்தது. அகப்புறத் துறைகள் பல தனித்தனிச் சிற்றிலக்கியங்களாகக் கிளைத்தன. இப்படியாக வளர்ந்த சிற்றிலக்கியங்கள் பிரபந்தங்கள் என்றும் அழைக்கப்படுகின்றன. தொண்ணூற்றாறு வகைப்பிரபந்தம் என வழக்காறு உண்டு என்றாலும் பல நூறு வகைகள் காணப்படுகின்றன. பக்தி இலக்கியம் சார்ந்து வளர்ந்த சிற்றிலக்கிய வகை பலவாகும். சிற்றிலக்கிய எண்ணிக்கை பலவாக இருந்தாலும் குறிப்பிட்ட சிலவே செல்வாக்கும் படைப்புப் பெருக்கமும் கண்டன. அவை கோவை, உலா, தூது, பிள்ளைத்தமிழ், குறவஞ்சி போன்றனவாகும். இத்தகைய சிற்றிலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள் பற்றிய செய்திகளை இனிக்காண்போம்.

## ஆற்றுப்படை

ஏதேனும் ஒரு வள்ளலிடம் பரிசில் பெற்று வருகிற ஓர் இரவலன் தன் எதிரே வரும் வறுமைப்பட்ட பிறிதொரு இரவலனை விளித்து, தான் பரிசில் பெற்று வந்த வள்ளலின் சிறப்பையும் வீரத்தையும் கொடைப் பண்பையும் விளக்கி, நீயும் சென்று பரிசில் பெறலாம் எனக் கூறி அங்குச் செல்வதற்குரிய வழிவகைகளைக் கூறி ஆற்றுப்படுத்துவதே ஆற்றுப்படையாகும். இதற்கான இலக்கணம் தொல்காப்பியத்தில் குறிக்கப்படுகிறது.

*கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்*
*ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்*
*பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்*
*சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும்* **(தொல் - 1037)**

கூத்தர், பாணர், பொருநர், விறலி ஆகியோரில் பரிசில் பெற்றவர் வழியின் கண் பெறாதவரைக் காண்பது ஒரு பகுதியாகும். அவர்களுக்கு வழிகூறி ஆற்றுப்படுத்துவது இரண்டாவது பகுதியாகும். தமக்கு உதவி

செய்த வள்ளல்களின் தன்மையை எடுத்துரைப்பது மூன்றாவது பகுதி யாகும். இந்த மூன்று நிலைகளிலும் மனித உறவுகள் பின்னப்படுகின்றன. 'தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற முதுமொழிக்கேற்ப, தான் பெற்ற நன்மையைப் பிறரும் பெறுதல் வேண்டும் என்கிற உயரிய எண்ணத்தின் அடிப்படையில் ஆற்றுப்படைகள் அமைந்துள்ளன.

வள்ளல்களின் நாட்டு வளமும் வள்ளலின் மனவளமும் இரவலர்களை உபசரிக்கும் பண்பும் ஒருபுறம் வெளிப்படுத்தப்படுகின்றன. தாம் வறுமையில் இருந்தபோது அடைந்த துன்பத்தை மறவாமல் தன்னைப்போல் துன்புறும் இரவலர்களின் துன்பத்தைப் போக்க வேண்டி வழிபடுத்தி அனுப்புதல் மறுபுறம் வெளிப்படுத்தப்படுகிறது. இந்த இருநிலைகளும் மனித உறவுகள் இப்படித்தான் இருக்க வேண்டும் என்பதைப் படம்பிடித்துக் காட்டுவதுபோல் அமைந்துள்ளன. எனவே ஆற்றுப்படுத்துதலே ஒரு மனிதப் பண்பாகும். மனித உறவின் வலிமையாகும். தாம் துன்புற்றதை மறந்துவிட்டு, தம்மைப்போல் துன்புறுவோரை ஏளனமுடன் நோக்குதல் என்பது மனித உறவுகளை வளர்க்காது. மாற்றாக சக மனிதர்களின் துன்பங்களை உணர்ந்து வழிபடுத்துவதே மனித உறவுகளை வளர்க்கும் என்பதையே ஆற்றுப்படை நூல்கள் உணர்த்துகின்றன.

### கோவை

கோவை என்பது அகத்துறைப் பாடல்கள், களவு, கற்பு என்னும் பிரிவுடன் பல கூற்றுகளாகப் பிரிந்து திகழும். கைகோள், துறை, கூற்று எனப் பிரிக்கலாம். கைகோள் என்பது களவு, கற்பு என்ற ஒழுக்கம். அவற்றுள் ஒவ்வொன்றும் பலதுறைகளை உடையன. களவில் மதியுடம்படுத்தல், அறத்தொடு நிலை எனப் பல துறைகள் உள்ளன. ஒவ்வொன்றையும் சார்ந்து கூற்றுகள் பல வரும். இவை நிரல்பட வரிசையாக அமைவதில்லை. பிற்காலத்தில் இவ்வகத்துறை கூற்றுகளை யெல்லாம் வரிசைப்படுத்தி ஒன்றன்பின் ஒன்றாகச் சங்கிலித் தொடர்பு போல ஒரு கோவையாகப் பாடினர். ஒரு பாட்டிற்கும் அடுத்த பாட்டிற்கும் வரிசை அமைத்துக் கதை போலக் காணப்பட்டதால், இவ்வகைப் பாடல்கள் தொடர்புடையன போன்ற ஒரு மனத்தோற்றத்தை ஏற்படுத்தின. எவ்வாறேனும் பல துறைகள் கோர்க்கப்பட்டு எழுதப்படுவது கோவை இலக்கியமாகும். பலதுறைகள் நிரல்படக் கோர்க்கப்பட்டால்தான் கோவை

இலக்கியம் தோன்றும். அதைப்போல மனிதப் பண்புகள் நிரல்பட அமைந்தால்தான் மனித உறவுகள் மலரும் என்பதைக் கோவை இலக்கியங்கள் உணர்த்துவதாகக் கொள்ளலாம்.

### உலா

திருவீதி உலாவரும் தெய்வத்தைக் கண்டு தேவரடியார்கள் மயங்குவதாகப் பாடுவது ஒரு நாட்டுப்பாடல் மரபு. அதுபோல அரசர்கள் உலாவரும்போது ஏழு பருவ மங்கையரும் கண்டு காதல் கொண்டு மயங்குவதாகப் பாடுவது உலா இலக்கியமாகும். ஐந்து வயது முதல் நாற்பது வயது வரை உள்ள பெண்கள், உலா வரும் தலை மகனைக் கண்டு காதல் கொள்வதாகப் பாடுவர். பேதை (5 - 7 வயது), பெதும்பை (8 -11), மங்கை (12 - 13), மடந்தை (14 - 19), அரிவை (20 - 25), தெரிவை (26 - 31), பேரிளம்பெண் (32 - 40) ஆகிய மகளிரின் இயல்பும் ஆடல் பாடலும் நன்கு புனையப்படும். அவர்கள் தலைமகனைக் கண்டு காதல் கொள்ளுகிற விதமும் அவர்களுடைய வயதிற்குத்தக அமையும்.

சேரமான் பெருமாள் நாயனார் இயற்றிய 'திருக்கயிலாய ஞான உலா' என்பது காலத்தால் முற்பட்டது. இது தெய்வ உலா என்றும் ஆதிஉலா என்றும் சிறப்பித்து அழைக்கப்படும். உலாவரும் இறைவனின் மாட்சியும் காட்சியும் இந்நூலில் விரித்துப் பேசப்படுகின்றன. சிவலோகத்தில் தேவர்கள் எல்லாம் வேண்டிக் கொள்ளச் சிவபெருமான் உலாவந்து அவர்களை மகிழ்விப்பதாகப் பாடப்பட்டுள்ளது. தெய்வ உலாவிலும் மனிதர்களை மையப்படுத்திய மனித உலாவிலும், ஒருவருக்கொருவர் அவரவர் நிலைக்கேற்ப விருப்பம் கொண்டு மயங்குவதையே உலா இலக்கியங்கள் கூறுகின்றன. எதுவாக இருப்பினும் எல்லாம் உறவுகளையே மையப்படுத்திப் பாடப்பட்டுள்ளன. மனித வாழ்க்கை என்பதே இறைவனோடு கொள்ளும் உறவும் மனிதர்களுடன் கொள்ளும் உறவும் ஆகிய இரு நிலைகளில் அமையும். அவை இரண்டையும் சுட்டுவதாக 'உலா' என்னும் சிற்றிலக்கியம் அமைந்துள்ளது. வெளிப் படையாக இல்லையென்றாலும் உய்த்துணரும் வகையில் எழுதப்பட்டுள்ளது.

### கலம்பகம்

கலம்பகம் என்பது கதம்பம் என்ற சொல்லுடன் தொடர்புடையது. பல்வேறு உறுப்புகளைக் கொண்டு அகமும் புறமுமாய்க் கலந்து, பல்வேறு பாவினங்களால் பாடப்படுவதால் இப்பெயர் பெற்றதென்பர். கலம் + பகம்

எனப் பிரித்துக் கலம் என்பது பன்னிரண்டு என்றும் பகம் என்றால் அதிற்பாதி என்றும் கொண்டு, பதினெட்டு உறுப்புகளை உடையதைக் கலம்பகம் என்றும் ஒரு சாரார் விளக்கம் கூறுவர். இதன் உறுப்புகள் நூல்தோறும் மிக்கும் குறைந்தும் வருகின்றன.

எனவே கலம்பகம் என்பது பல்வேறு கூறுகளின் கூட்டாக அமைவது. அந்த இலக்கியம்போல மனித உறவுகளின் கூட்டாக அமைவதே மனித வாழ்க்கை என்பதை உய்த்துக் கொள்ளலாம். நந்திவர்மன் என்னும் பல்லவ அரசனின் கொடை, வீரம், புகழ் ஆகிய பெருமைகள் கூறுவது நந்திக்கலம்பகம் என்னும் நூலாகும். அதில் அம்மன்னனின் கொடைத் தன்மையைக் கீழ்வரும் பாடலடிகள் சுட்டுகின்றன.

*பாடிய நாவலரோ வேந்தரோ பல்புரவிப்*
*பீடியல் மாகளிற்றார் பிச்சத்தார் - கூடார்*
*படையாறு சாயப் பழையாறு வென்றான்*
*கடையாறு போந்தார் கலந்து* (நந்திக்கலம்பகம்)

அதாவது நந்தி மன்னனைப் புகழ்ந்து பாடிப் புலவர்கள் யானை, குதிரை ஆகியவற்றைப் பரிசாகப் பெற்று யானை மீது குடை நிழலில் சென்றனர். யானை மீது ஏறிக் குடை நிழலில் வருபவர் அரசரானால் அரண்மனை வாயிலில் யானையும் குடையுமின்றி அடங்கிச் செல்வர். மன்னனைப் பாடிப் பரிசில் பெற்று வரும் புலவர் யானை மீதேறிக் குடைநிழலில் செல்வர். எனவே, நந்திவர்மன் கொடைச் சிறப்பு உடையவனாக விளங்கினான். அதுவும் பொருட்களை மட்டுமல்லாது யானையையும் பரிசாகப் பெற்று மகிழ்ந்து சென்றனர். கொடுக்கும் மனம் படைத்த மன்னனான நந்திவர்மன் போன்று இருப்போருக்குக் கொடுத்துதவும் பண்பு உடையவர்களாக விளங்குவது ஒவ்வொரு மனிதர்களுக்கும் தேவையாகின்றது.

## தூது

சிற்றிலக்கிய வகைகளில் ஒன்றான 'தூது' இலக்கியம் கருத்துப் பறிமாற்றத்தை அடிப்படையாகக் கொண்டது தன் கருத்தைப் பிறிதொருவருக்குத் தெரிவிக்குமாறு ஒருவரைத் தன்சார்பாளராக அனுப்புவதே தூது இலக்கியம் எனப்படும். இலக்கியங்களில் பரவலாக ஒருவர் மற்றொருவருக்குத் தூது அனுப்புவது இயற்கையாக

அமைந்திருக்கும். தூது என்பது ஒரு மனிதர் மற்றொரு மனிதரிடம் கொண்டுள்ள உறவை மையப்படுத்தியது. உறவுகளை வளர்க்கவே தூது செல்வது வழக்கம். அவ்வாறு தூது செல்பவர் உறவுகளை வளர்க்கும் பண்புடையவராக அமைதல் வேண்டும் என்கிறார் திருவள்ளுவர்,

*அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் வேந்து அவாம்*
*பண்புடைமை தூது உரைப்பான் பண்பு* (குறள் - 681)

எனவே மனித உறவுகளை வளர்க்கும் நிலையே தூது இலக்கியத்தின் மையப் பொருளாக அமைந்திருக்கும்.

## பள்ளும் குறவஞ்சியும்

சிற்றிலக்கியங்களுள் அடங்கும் பள்ளும் குறவஞ்சியும் நாட்டுப்புற மக்களால் பாடப்படும் இசைப் பாடல்களாகும். உழவுத்தொழிலை அடிப்படையாகக் கொண்டு வாழ்பவர்களின் வாழ்வை ஒட்டி அமைந்ததே பள்ளு. இதில் வெள்ளம் வருவது, பலவகை மாடுகள், விதைத்தல், நாற்று நடுதல் பற்றியெல்லாம் கூறும் இலக்கிய வடிவமாகும். வேலைச்சுமை தெரியாமல் இருக்க மக்கள் ஒருவருக்கொருவர் வேடிக்கையாகப் பேசிக் கொள்ளும் வகையில் இவை இயற்றப்பட்டிருக்கும்.

குறப்பெண் ஒருத்தி, காதலால் வருந்தும் தலைவியிடம் சென்று குறிசொல்வதாகப் பாடுவதே குறவஞ்சி என்னும் சிற்றிலக்கியமாகும். வஞ்சி என்றால் பெண். குறவஞ்சி என்றால் குறப்பெண் என்பதாகும். இதில் பல்வேறு விதமான செய்திகள் கூறப்படுகின்றன. தலைவி மனத்துள் நினைத்துள்ள தலைவனின் ஊர், புகழ் போன்ற யாவும் விளக்கப்படு கின்றன. பள்ளு, குறவஞ்சி இரண்டும் சாதாரணக் குடிமக்கள் வேடிக்கையாகப் பாடி மகிழும் நிலையில் எழுதப்படும் சிற்றிலக்கிய வகைகளாகும்.

தொண்ணூற்றாறு வகைச் சிற்றிலக்கியங்களுள் சிலவற்றை அடியொற்றியே தமிழில் சிற்றிலக்கியப் பெருமை பேசப்படுகிறது. அவை யாவற்றிலும் ஏதோ ஒரு நிலையில் மனித உறவுகள் பின்னப்படுகின்றன. எனவே சிற்றிலக்கியங்கள் மறைமுகமாகவோ நேரடியாகவோ மனித உறவுகளையே உணர்த்துகின்றன என்று கொள்ளலாம்.

# 9. சித்தர் பாடல்களில் மனித உறவுகள்

இறை நம்பிக்கையிலும் இயல்பு வாழ்க்கையிலும் பல புதிய கருத்துகளைத் தத்துவங்களாக எடுத்துரைத்தவர்கள் சித்தர்கள். வரலாற்றுப் பதிவு நோக்கில் பதினெண் சித்தர்கள் என்று குறிப்பிட்டாலும் காலந்தோறும் சித்தர்கள் வாழ்ந்து வருகிறார்கள். அவர்களுள் வாழ்வியல் நெறிகளைப் பாடல்கள் மூலமாக எடுத்துரைத்தவர்கள் பலர். அவர்தம் பாடல்கள் இறை தத்துவத்தையும் மருத்துவக் குறிப்புகளையும் வாழ்வின் நிலையாமையையும் எடுத்துரைப்பவை. சித்தர் பாடல்கள் நிலையாமையை அதிகமாக வலியுறுத்திக் கூறுகின்றன. அதற்குப் பல காரணங்கள் இருந்தாலும் முக்கியமாக மனித உறவுகளை மதித்து வாழ்தல் வேண்டும் என்னும் பண்பினை வலியுறுத்தவே கூறி இருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது. அந்தச் சிந்தனையைச் சித்தர் பாடல்கள் கொண்டு நோக்குவோம்.

உலகில் மனிதர்கள் யாவரும் சமமானவர்கள். அவர்களின் உடல் தோற்றமும் உருவ மாற்றமும் வாழ்கின்ற சூழ்நிலை நோக்கியே அமைகின்றன. நிறமும், அமைப்பும் இயற்கைச் சூழ்நிலையை ஒட்டியே மாறுபடுகின்றன. இவற்றை வைத்துக்கொண்டு மனிதர்களைச் சக மனிதர்களையே வெறுத்து ஒதுக்குவதும் சாதி என்ற பெயரால் மனிதர்களை இழிவுபடுத்துவதும் பாவமான காரியமாகும்.

அத்தகைய வேறுபாட்டை விட்டொழித்து மனித உறவுகளை மதித்து நடக்க வேண்டும் என்ற கருத்தை உணர்த்துவதாகக் கீழ்வரும் பாடல் அமைந்துள்ளது.

*சாதியாவது ஏதடா ? சலம்திரண்ட நீரெலாம்*
*பூதவாசல் ஒன்றலோ, பூதம் ஐந்தும் ஒன்றலோ ?*
*காதில் வாளி, காரை, கம்பி, பாடகம் பொன் ஒன்றலோ ?*
*சாதிபேதம் ஓதுகின்ற தன்மைஎன்ன தன்மையோ ?*

(சிவவாக்கியர் பாடல் - 46)

அதாவது, மனித உடலானது நீரும் தசையும் சேர்ந்த கலவையாகக் காட்சி அளிக்கிறது. எல்லா மனிதர்களுக்கும் உள்ள பொறிகளும் ஐந்துதான். ஐம்புலன்களும் ஒன்றுதான். சதை, நரம்பு, இரத்தம், எலும்பு முதலான அனைத்தும் ஒன்றுதான். அப்படி இருக்கும்போது சாதி என்று கூறிக் கொண்டு உயர்வு தாழ்வு பார்ப்பது மனிதத் தன்மைக்கு உகந்ததல்ல. தோற்றத்தை வைத்து மனிதர்களை ஒதுக்காமல் அனைவரிடமும் நல்லுறவு கொள்ளுதல் வேண்டும் என்ற கருத்தை இப்பாடல் வலியுறுத்துகிறது.

மனித வாழ்க்கை நிலையில்லாதது. எத்தனை செல்வம் வைத்திருந்தாலும் அவையாவும் உடன் வருவது இல்லை. வீடு மனையும் மாடு கன்றும் மனைவி மக்களும் மாட மாளிகையும் இந்த உலகில் மகிழ்ச்சியாக வாழ்வதற்காகவே உள்ளன. அவையாவும் சடுதியில் காலன் வந்து உயிரை எடுத்துச் செல்லும்போது உடன் வருவது இல்லை. உயிர் பிரிந்த பிறகு உடல் மட்டும் மண்ணில் கிடக்கும். இந்த உண்மையை அறிந்திருந்தும் நாளும் கண்ணால் கண்டிருந்தும் கர்வம் கொண்டு சகமனிதர்களை மதிக்காமல் வாழ்கின்றனர். அத்தகைய மக்கள் வாழ்வின் நிலையாமையை முழுமையாக நினைத்து உணர்ந்து மனிதர்களை மதித்து நல்லுறவுடன் வாழ வேண்டும்.

*மாடுகன்று செல்வமும் மனைவிமைந்தர் மகிழவே*
*மாடமாளிகைப் புறத்தில் வாழுகின்ற நாளிலே*
*ஓடிவந்து காலதூதர் சடுதியாக மோதவே*
*உடல்கிடந்து உயிர் கழன்ற உண்மை கண்டும் உணர்கிலீர்*

(சிவவாக்கியர் பாடல் - 82)

இந்த உலகில் வாழ்கின்ற மக்கள் நிறத்தை வைத்தும் செல்வத்தை வைத்தும் வேறுபாடு கொண்டு பகைமை உணர்வை வளர்த்துக் கொள்கின்றனர். மனித உறவுகளைப் பாழ்படுத்துகின்றனர். இவற்றோடு இந்த உலகைப் படைத்த இறைவன் ஒருவனே என்ற அடிப்படை உண்மையை உணராமல் எங்கள் தெய்வம் உயர்ந்தது உங்கள் தெய்வம் இழிந்தது என்றெல்லாம் பேதம் பாராட்டி உறவுகளைப் பாழ்படுத்திக் கொள்கின்றனர்.

எங்கள் கடவுள் உங்கள் கடவுள் என்று கூறுவது வேடிக்கையானது. இந்த உலகைப் படைத்த கடவுள் இரண்டாக இருக்க முடியுமா ! அங்கும்

இங்குமாய் இருக்கின்ற தெய்வம் ஒன்றல்லவோ ! எல்லாம் வல்ல இறைவன் ஒன்றல்லவோ ! அப்படி இருக்கக் கடவுளிடமும் பேதம் பார்க்கும் மக்கள் ஒரு நாளில் வாய்புழுத்து இறப்பது உறுதி என்கிறார் சிவவாக்கியர். இத்தகைய உண்மையை உணர்ந்து இறைவனை வைத்து வேறுபாடு நோக்காமல், எந்த மதத்தினராக இருந்தாலும் ஓர் இறை மக்கள் என்பதை உணர்ந்து வாழ்தல் வேண்டும் என்பதைக் கீழ்வரும் பாடல் உணர்த்துகின்றது.

*எங்கள் தேவர் உங்கள் தேவர் என்றிரண்டு தேவரோ ?*
*அங்கும் இங்குமாய் இரண்டு தேவரே இருப்பரோ ?*
*அங்கும் இங்கும் ஆகிநின்ற ஆதிமூர்த்தி ஒன்றலோ ?*
*வங்கவாரம் சொன்னபேர்கள் வாய்புழுத்து மாள்வரே*

(சிவவாக்கியர் பாடல் - 131)

இயற்கையின் அதிசயமாய் விளங்கும் இந்த உலகம் ஒரு மாயையானது. இயற்கை இறைவனால் படைக்கப்பட்டது. அது என்றும் அழியாதது. இறைவன் நினைக்கிறபோது அதுவும் அழிய வல்லது.

இயற்கையை அனுபவிக்க இறைவனால் படைக்கப்பட்டவனே மனிதன். அந்த மனித வாழ்வில் பல இன்பங்கள் வந்து போவதுண்டு. அந்த இன்பங்கள் முதலில் மிகப் பெரிய மெய்யான நிலையானவையாகத் தோற்றம் அளிக்கும். காலம் செல்லச்செல்ல இவையாவும் பொய்யாய்ப் பழங்கதையாய்க் கனவாய் மாறி முற்றிலும் ஒன்றும் இல்லாமல் போய் விடுகின்றன. அப்படி இருக்க, சக மனிதர்களை மதிக்காமல் இழிவு படுத்துவது இறை தண்டனைக்குரியது.

*மையாடு கண்ணியும், மைந்தரும், வாழ்வும் மனையும் செந்தீ*
*ஐயா ! நின்மாயை உருவெளித் தோற்றம் அகிலத் தீதுள்ளே*
*மெய்யாயிருந்தது; நாள் செல நாள் செல வெட்ட வெறும்*
*பொய்யாய்ப் பழங்கதையாய்க் கனவாய் மெல்லப் போனதுவே !*

(பட்டினத்தார் பாடல் - 139)

பட்டினத்தார் செல்வந்தராக இருந்து வாழ்வை உணர்ந்து பஞ்சையாகி இறைவனை நாடி ஓடியவர். அவர் மனதிற்குக் கூறுவது போன்று கீழ்வரும் பாடல் அமைந்துள்ளது.

*ஒன்றென்றிரு; தெய்வம் உண்டென்றிரு; உயர் செல்வமெல்லாம்,*
*அன்றென்றிரு! பசித்தோர் முகம்பார்! நல்லறமும் நட்பும்*
*நன்றென்றிரு! நடுநீங்காமலே நமக்கு இட்டபடி*
*என்றென்றிரு! மனமே உனக்கே உபதேசம் இதே*

(பட்டினத்தார் பாடல் - 108)

அதாவது இந்த உலகைப் படைத்த தெய்வம் ஒன்று என்பதை உணர்ந்து வேறுபாடு கொள்ளாமல் இருத்தல் வேண்டும். இந்த உலகைப் படைத்த தெய்வம் ஒன்று கண்டிப்பாக உண்டு என்பதை மறவாமல் இருத்தல் வேண்டும். இந்த உலகிலுள்ள செல்வம் எல்லாம் நிலையற்றது என்பதை உணர வேண்டும். வறுமையில் வாடிப் பசித்திருப்போரின் முகம் பார்த்து உதவி செய்தல் வேண்டும். நல்ல செயல்களைச் செய்து நல்லோர் உறவைப் போற்றி வாழ்தல் வேண்டும். எந்தச் சூழலிலும் நடுவுநிலை மாறாமல் கடமை தவறாமல் வாழ்வதற்குப் பழகிக் கொள்ளுதல் வேண்டும் என்பதை மனம் உணர்ந்தால் செயல் செம்மையாகும். மனித உறவுகள் வலுப்பெறும் என்பதையே இப்பாடல் சுட்டுகின்றது.

பட்டினத்தாரின் பண்பை உணர்ந்து தானும் துறவியாகி இறைதொண்டு செய்து இறைவனடி சேர்ந்தவர் பத்திரகிரியார் என்னும் சித்தர். இந்த உலகமக்கள் ஐம்பொறிகளினால் கவரப்பட்டு மாயைகளில் சிக்குண்டு பாவக்குழியில் வீழ்ந்து விடுகிறார்கள். அவர்கள் மாயையை உணர்ந்து இறைவனை நினைக்கிறபோது இயல்பாகவே சக மனிதர்களையும் மதித்து நடப்பார்கள். இறைவனைச் சக மனிதர்களுள் கண்டு நல்லுறவு கொள்வார்கள் என்பதைக் கீழ்வரும் பாடல் வரிகளில் சுட்டுகின்றார்.

*ஐந்து பொறிவழிபோய் அலையும் இந்தப் பாழ்மனத்தை*
*வெந்து விழப்பார்த்து விழிப்பது இனி எக்காலம்?*
*இனமாண்டு சேர்ந்திருந்தோர் எல்லோரும் தாமாண்டு*
*சினமாண்டு போக அருள் தேர்ந்திருப்பது எக்கலாம்?*

(பத்திரகிரியார் பாடல் - 84, 85)

இந்த உலகில் எல்லாவிதமான செல்வாக்குடனும் வாழ்கின்ற மக்களாக இருந்தாலும் திடீரென்று ஒருநாள் கூற்றுவன் வந்து உயிரைப் பறித்துச் செல்லும்போது அவையாவும் கூட வருவதில்லை.

உயிர் பிரிந்த பிறகு இந்த உடலிற்குத் துளிகூட மரியாதையோ பயனோ கிடைப்பது இல்லை. அதை உணர்ந்து வாழ்தல் வேண்டும். பிறருக்குத் தீமை செய்யாமலும் தீமையை நினைக்காமலும் இருத்தல் வேண்டும்.

*நாடு நகர் வீடுமோடு நற்பொருள் எல்லாம்*
*நடு வரும்பொழுது நாடி வருமோ ?*
*கூடுபோன பின்பு அவற்றால் கொள்பயன் என்னோ ?*
*கூத்தன் பதங்குறித்து நின்று ஆடுபாம்பே !*

(பாம்பாட்டிச்சித்தர் பாடல் - 40)

எத்துணை சிறப்புகள் உடையவராக இருந்தாலும் ஒருநாள் மண்ணுக்கு இறையாக வேண்டும். இது இறைவன் வகுத்த நியதி. இதை உணராமல் ஒரு சில மனிதர்கள் பகைமை உணர்வோடு வாழ்ந்து மறைகின்றனர். பகைமையை ஒழித்து நல்லுறவுடன் வாழவேண்டுமானால் முதலில் இந்த உலகில் என்னைச் சுற்றியுள்ள எனக்குரியதான எதுவும் நிலையில்லாதது என்பதை உணர வேண்டும் என்பதைத்தான் கீழ்வரும் பாடல் எடுத்துரைக்கின்றது.

*மாடும் மனைகளும் மக்களுஞ் சுற்றமும் வான் பொருளும்*
*வீடும் மணிகளும் வெண்பொன்னுஞ் செம்பொன்னும்*
*வெண்கலமும்*
*காடுங் கரைகளும் கல்லாம் பணியுங் கரிபரியும்*
*தேடும் பலபண்டம் நில்லா சிவகதி சேர்மின்களே*

(இடைக்காட்டுச்சித்தர் பாடல் - 23)

இந்த உலகில் வாழும் ஒருசில மக்கள் வாழ்வின் நிலையாமையை உணராமல் பிறரை இழிவாகப் பேசுவார்கள். குற்றம் கூறுவார்கள்; தேடித்தேடி அலைந்து அலைந்து சொத்துகளைச் சேர்ப்பார்கள். அவற்றுள் ஒரு தூசு கூட உடன் வருவதில்லை என்பதை உணரமாட்டார்கள். பிறரை அழித்தாவது நாம் முன்னேற வேண்டும் என்று நினைப்பார்கள். அத்தகையோர் இறைவனை நினைப்பதும் வீணானது. முதலில் உலக மாயையை உணர்ந்து தம்மைப்போல் பிறரையும் நேசித்து வாழ நினைத்து அதன் பிறகே இறைவனை நாட வேண்டும் என்பதைக் கீழ்வரும் பாடல் சுட்டுகின்றது.

*தூடாணமாகச் சொல்லாதே - தேடுஞ்*
*சொத்துக்களிலொடு தூரகும் நில்லாதே*
*ஏடாணை மூன்றும் பொல்லாதே - சிவத்*
*திச்சைவைத் தா லெமலோகம் பொல்லாதே*

(கடுவெளிச்சித்தர் பாடல் - 5)

இவ்வாறு உலக நிலையாமையைப் பல்வேறு நிலைகளில் எடுத்துரைக்கும் சித்தர்கள் இரண்டு முக்கிய நியதிகளை எடுத்துரைக்கின்றனர். முதல் உலகைப் படைத்த இறைவன் ஒருவன் உண்டு என்பதையும், அந்த இறைவன் ஒருவனே எல்லோருக்கும் பொதுவானவன் என்பதையும் மக்கள் உணர வேண்டும்.

இந்த உலக இன்பங்களும் உலகப் பெருமைகளும் நிலையில்லாதது அதனால் பகைமை கொள்ளாமல் இந்த உலகில் வாழும் நாள்வரை நல்லுறவுகள் கொண்டு ஒருவருக்கொருவர் உதவி செய்து கொண்டு இறைவனிடத்தும் பணிவோடு வாழ வேண்டும். அப்படிப்பட்டவர்களே நற்கதி அடைய முடியும் என்பதைத் தமது பாடல்கள் வழி சித்தர்கள் உணர்த்துகின்றனர்.

## 10. தற்கால இலக்கியங்களில் மனித உறவுகள்

இருபதாம் நூற்றாண்டு இலக்கிய வளர்ச்சியில் சிறுகதைகள் பெரும் இடத்தைப் பெற்றுள்ளன. வீரமாமுனிவரின் பரமார்த்த குருகதைகள், வ.வே.சு ஐயரின் குளத்தங்கரை அரசமரம் தொடங்கி இன்று வரையுள்ள சிறுகதைகள் அனைத்துமே மனித வாழ்க்கையைப் படம்பிடித்துக் காட்டுவனவாக உள்ளன. ஒரு காலக்கட்டத்தில் மேல்மட்டக்குடிகளே கதைமாந்தர்களாய் இடம்பெற்று வந்தனர். ஆனால் காலப்போக்கில் நிலை மாறியது. மிகச் சாதாரண அடிமட்டத்தில் வாழும் மக்களும் கதை மாந்தர்களாக்கப்பட்டனர். அதன் வளர்ச்சியாக இன்று பட்டிதொட்டிகளில் வாழ்வோரும் சமுதாயத்தில் ஒதுக்கப்பட்டவர்களும் கதை மாந்தர்களாக வருகின்றனர். எனவே இன்று சிறுகதை என்பது மக்களின் அன்றாட நிகழ்வுகளைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாக விளங்குகின்றன. இன்றைய நிலையில் நாடோடி வாழ்க்கை வாழ்பவர்களும் கதை மாந்தர்களாக வருகின்றனர். மனித வாழ்க்கையில் பல்வேறு விதமான உறவுநிலைகள் உள்ளன. அவை அனைத்தையும் சிறுகதைகள் வெளிப்படுத்துகின்றன.

சிறுகதை என்பதே ஏதேனும் ஒரு நிகழ்வை, அல்லது ஒரு செய்தியை ஒரு சில கதைமாந்தர்களைக் கொண்ட அதிக பீடிகைகள் இல்லாமல் வெளிப்படையாகச் சொல்வதாகும். அத்தகைய பண்பு வாய்ந்த சிறுகதைகள் அனைத்துமே மனித உறவுகளைப் படம்பிடித்துக் காட்டுவதாக அமைந்துள்ளன. அத்தகைய நிலையில் சிறுகதைகள் சுட்டும் மனித உறவுகள் குறித்து இனிக் காண்போம்.

சாகித்திய அகாடமி பரிசு பெற்ற நாவல்களை எழுதிய தமிழ் அறிஞரான மு. வரதராசனார் பல சிறுகதைகளையும் எழுதியுள்ளார். அவற்றுள் ஒன்றே 'தேங்காய்த் துண்டுகள்' என்னும் சிறுகதை. இது இளைஞர்களின் உறவைப் படம்பிடித்துக் காட்டுவதாக அமைந்துள்ளது. இருபது வயது மதிக்கத்தக்க ஒரு இளைஞன் மாரியம்மன் கோவிலருகே மயக்கமாகக் கிடக்கிறான். வழிப்போக்கர்கள் அவனைச் சுற்றி நிற்கிறார்கள். குடிகாரனோ அல்லது பால்வினை நோயாளியோ என்று

நினைத்த ஒருவர் எப்படிப் பார்க்கிறார். சுற்றி இருந்தவர்கள் வேடிக்கை பார்த்திருக்க ஒரு கல்லூரி மாணவன் முகத்தில் தண்ணீர் தெளித்து, இரண்டு வாழைப்பழமும் காப்பியும் வாங்கி வந்து தருகிறான். கண்விழித்த அந்த இளைஞன் வேலா! வேலா! எனக் கூறியவாரே சுற்றும் முற்றும் பார்க்கிறான். கூட்டத்தில் எட்டிப் பார்த்தவர் அந்த இளைஞன் பசியாறிய பின் எந்த ஊர் என்று கேட்கிறார். சொந்த ஊர் மதுரை. பிழைப்பிற்காகப் பட்டணம் வந்தேன். சாப்பிட்டு 5 நாள் ஆகிறது என்கிறான். என் வீட்டிற்கு வந்தால் வயிராற உண்ணலாம் என்று கூறித் தன் வீட்டிற்கு அழைத்து வருகிறார்.

உணவு உண்டு முடித்தவுடன், இந்தக் கோவிலில் உயிரைவிட்டால் என் நண்பன் வேலன் வந்து பார்த்துக் கொள்வான் என்று நினைத்ததாகக் கூறுகிறான். யார் அந்த வேலன் என்று கேட்க, நானும் வேலனும் முனுசாமியும் இங்குப் பிழைக்க வந்தோம். வேலன் கொஞ்சம் படித்தவன். முனுசாமியும் சிறிது படித்தவன். நான் படிக்காதவன். பட்டணம் வந்த மூன்றாம் நாளே ஒரு கூட்டத்தோடு அவன் சேர்ந்துவிட்டான். அவர்கள் பிக்பாக்கெட் அடிப்பவர்கள். அந்தப் பணத்தைக் கைமாறச் செய்து பாதுகாப்பவன் வேலன். முனுசாமிக்கு இது பிடிக்கவில்லை. வறுமைக் கொடுமை தாங்காமல் ஒருவன் இரயில் தண்டவாளத்தில் தலை கொடுத்து இறந்துவிட்டான். வேலன் எனக்கும் முனுசாமிக்கும் உதவி செய்வான். முனுசாமி அதை ஏற்றது இல்லை.

வேலன் தினமும் இந்தக் கோவிலுக்கு வந்து ஒரு சீப்பு வாழைப்பழமும் தேங்காயும் உடைப்பான். அந்தப் பழத்தையும் ஒரு மூடி தேங்காயையும் சிறுவர்களுக்குக் கொடுப்பான். ஒரு மூடியை கிழக்கு இரவானத்து மூலைக் கலசத்தில் வைத்துவிடுவான். ஐந்து நாட்களாக அவனைக் காணவில்லை என்று வருந்திக் கூறியவன். என்ன ஆனானோ! தெரியவில்லை என்று கலங்கினான். இரண்டு வாரம் கழித்து அந்த இளைஞன் மயங்கியவன் சொன்னது போலவே செய்வதைப் பார்த்தார். இரவான கலசத்திலிருந்து அவன் எடுத்து வீசிய தேங்காய்த் துண்டுகள் வாடிக்கிடந்தன. எடுப்பாரின்றிக் கிடந்தன. கண்ணீரால் நனைந்து கிடப்பதையும் காண்கிறார்.

மூன்று இளைஞர்கள் எந்தவிதமான முன் எச்சரிக்கையும் இன்றிச் சொந்த ஊரை விட்டுவந்து, ஒருவன் இறப்பதும், ஒருவன் வறுமையில் வாடுவதும் ஒருவன் தீய கூட்டத்துடன் இணைந்து கெடுவதும் இந்தக் கதையில் சுட்டப்பட்டுள்ளன. உதவி செய்யும் கல்லூரி மாணவன், வேடிக்கை பார்க்கும் கூட்டம், இரக்கப்படும் ஒருவர் இப்படியாக வேறுபட்ட மனிதர்களைக் காட்டுகிறார். மனிதர்களின் பலவிதக் குணங்களையும் இளைஞர்களின் உறவையும் எடுத்துரைக்கும் மு.வ. அவர்கள் இளைஞர்கள் சரியான பாதையில் செல்ல நல்ல மனித உறவுகளை வளர்த்துக் கொள்ள வேண்டும் என்பதை உணர்த்துகின்றார்.

கு. அழகிரிசாமி என்பவர் குழந்தைகளின் மனதைப் படம்பிடித்துக் காட்டும் வகையில் சிறுகதைகள் எழுதுவதில் வல்லவர். அவருடைய 'காற்று' என்னும் சிறுகதை ஒரு சிறுமியின் உலகமறியாத உள்ளத்தைப் படம்பிடித்துக் காட்டுகிறது. ஒரு தெருவில் திண்ணை வைத்த வீடு ஒன்றுதான் உள்ளது. அதில் விளையாடும் பல குழந்தைகளுள் கற்பகமும் ஒரு சிறுமி. அவள் தந்தை வேதகிரி ஜவுளிக்கடையில் வேலை செய்பவர். திண்ணை வீட்டுக்காரர் பிள்ளைகள் விளையாட்டின் சத்தம் பொறுக்க முடியாமல் கற்பகத்தை அடிக்கிறார். அவள் தன் பெற்றோரிடம் கூறித் தன் வீட்டிலும் திண்ணை வைத்துக் கட்டச் சொல்கிறாள். அவர் அந்த வசதி இல்லையென்று கூற அதுவும் அவளுக்குப் புரியவில்லை.

இதன் பிறகு பள்ளிக்கூடத்தில் சேர்க்கப்படுகிறாள். தன் வீடு, திண்ணை நினைவுக்கு வருகிறது. சிறை போன்ற தன் வீட்டை வெறுக்கிறாள். என்றோ ஒரு நாள் தன் தந்தை அழைத்துச் சென்று காட்டிய கடற்கரை நினைவுக்கு வர அன்று பள்ளி முடிந்ததும் கடற்கரைக்குப் போக முடிவு செய்கிறாள். பள்ளி மணி அடித்ததும் பக்கத்து வீட்டுக் குழந்தைகளுக்குத் தெரியாதவண்ணம் புறப்படுகிறாள். வழி நெடுக உள்ள சாலை, மக்கள், வீடுகள் ஆகியவற்றைக் கண்டு செல்லும் அவள் மனம் ஏதேதோ நினைக்கிறது.

அரை பர்லாங்கு தூரத்தைக் கூடக் கடக்கவில்லை. அதற்குள்ளேயே கற்பகத்தின் நடை நின்றுவிட்டது. நடை மட்டுமல்லாமல் மூச்சும் நின்றுவிட்டது. ஒரு சிறுமியின் விவரமறியாத உள்ளம் இந்தக் கதையில்

காட்டப்பட்டுள்ளது. ஒரு சிறுமியின் உள்ளம் பாதிக்கும் வகையில் நடந்து கொள்ளுதல் கூடாது என்பதை இவர்கள் அறியவில்லை. எனவே பெரியவர்கள் சிறியவர்களின் உள்ளம் அறிந்து பழகுதல் வேண்டும் என்பதை இச்சிறுகதை உணர்த்துகிறது.

சோறுகண்ட இடம் சொர்க்கம் என்ற எண்ணத்தில் எந்த இடத்தில் வேண்டுமானாலும் கூடாரம் அமைத்துத் தமது வாழ்க்கையைத் தற்காலிகமாக அமைத்துக் கொண்டு, மீண்டும் குழந்தை குட்டிகளோடு வேறு இடம் தேடிச் செல்லும் நாடோடி வாழ்க்க வாழும் நரிக்குறவரின் உறவுநிலையை 'நரிக்குறத்தி' என்னும் சிறுகதை மூலமாக ஜெகசிற்பியன் விளக்குகிறார்.

சென்னைப் பட்டணத்தின் நெடுஞ்சாலையில் இரயில் பாதையைக் கடக்கும் லெவல் கிராஸ் உள்ளது. அது சாத்தி இருக்கும்போது இரயில் வரும். திறந்திருக்கும் போது வாகனங்கள் கடந்து செல்லும். அந்த இடத்தில் நரிக்குறவப்பையன் அங்குவந்து பாடலோடு ஆட்டமும் ஆடினான். அதனை எல்லோரும் வேடிக்கை பார்த்தனர். ஒரு வண்ணக் கார் வந்து நிற்க அதன் சன்னலை எட்டிப் பார்த்த பையன் ஓர் ஆண் நரிக்குறத்தியுடன் இருப்பதைக் கண்டு அதிர்ச்சி அடைகிறான்.

நேராகத் தன் கூடாரம் இருக்கும் இடம் தேடி ஓடி வருகிறான். செய்தியைத் தன் தந்தை திண்டிகோலாவிடம் சொல்கிறான் மயிலங்கோடா என்னும் அச்சிறுவன். தன் மனைவி வண்டிகோடி யாருடனோ ஓடிவிட்டதாக நினைத்த அவன் கோபப்பட்டுத் தன் தாயையும் அடித்துவிட்டுக் கூடாரத்தை கலைத்துவிட்டு லெவல்கிராஸில் வருகிறான். அங்கே அதே வண்ணக்கார் வருகிறது. அதில் நளினாதேவி என்னும் நடிகை நரிக்குறத்தி வேடமணிந்து படப்பிடிப்பு முடிந்து மதிய உணவிற்காக வருகிறாள். பக்கத்தில் நரிக்குறத்தி வண்டி கோடி பச்சை மணி பாசி மணி என்று வெயிலில் வாடிய முகத்தோடு வருவதைப் பார்க்கிறான். திண்டிகோடாவுக்கு உண்மை புரிகிறது. அவசரப்பட்டு, தன் மனைவி மேல் சந்தேகப்படுகிறான். உறவை விட்டுவிலகத் திட்டமிடுகிறான். இப்படித்தான் பொறுமையை இழந்து உறவுகளை முறித்துக் கொள்வோரைச் சமுதாயத்தில் காண்கிறோம். நல்லுறவிற்கு அவசரம் கூடாது. பொறுமை அவசியம். எதையும் ஆராய்ந்து முடிவெடுக்க வேண்டும் என்பதையே இச்சிறுகதை சுட்டுகின்றது.

என். ஆர். தாசன் அவர்கள் எழுதியுள்ள 'நீலச்சிலுவை' என்னும் சிறுகதை ஒரு மீன் விற்கும் பெண்ணின் வாழ்வைப் படம் பிடித்துக் காட்டுகிறது.

சாந்தோம் கடற்கரையோரக் குடிசைப்பகுதி. அங்கே ஒரு முருங்கை மர நிழல். தள்ளாடிய வயதில் நிழல் போகும் இடத்திற்கு மாறி மாறி உட்கார்ந்தாள் அந்தக் கிழவி. அருகே நீலச்சிலுவை போட்ட வேன் வந்தது. பக்கத்திலிருந்த சொறி வெறி பிடித்த நாயைத் துரத்திப் பிடிக்க முயன்றது. அருவருப்பு தரும் தனக்கு இடைஞ்சலாக இருக்கும் அந்த நாய் எப்பொழுது ஒழியும் என்று பல நாள் நினைத்தவள் இன்று பாவம் என்று நினைத்தாள்.

தனது இளமைக் காலத்தை நினைத்துப் பார்த்தாள். தலையில் மீன் கூடையுடன் கம்பீரமான தோற்றத்தோடு ஓடிஓடி மீன் விற்றதையும், தன் கணவனிடமே அதிகாரமாக நடந்ததையும், அவன் வேறொரு பெண்ணிடம் தொடர்பு கொள்வதைக் கண்டு அவர்களை அடித்துவிட்டு, தான் வேறொரு காதர்பாஷா என்ற முரட்டு ஆசாமியுடன் தொடர்பு கொண்டதையும், அதன் பிறகு பலரோடும் அப்படி உறவு கொண்டதையும் கணவன் இறந்ததிற்கு வருந்தாமல் இருந்ததையும் நினைவு கூர்ந்தாள்.

இப்போது நாயைப் பிடித்து விட்டனர். அருகில் ஒருவன் வந்து கூறுகிறான். ஆயா, இனி நாய் ராஜா மாதிரி இருக்கும். அமைதியாக இருந்தவள், திடீரென்று தலையில் அடித்துக்கொண்டு அழ ஆரம்பித்தாள். நிறுத்தவில்லை. அந்த இளைஞன் பதறிப்போய், என்ன ஆயா ? என்ன சொல்லு ஆயா ? என்று கேட்டுக் கொண்டிருந்தான். அவள் பதில் கூறவில்லை.

இச்சிறுகதை உறவுகளில் உண்மை இருக்க வேண்டும் என்பதைக் கிழவியின் இளமைக்கால வாழ்க்கைமூலம் ஆசிரியர் எடுத்துரைக்கின்றார். கணவனும் தவறு செய்கிறான். கோபத்தில் மனைவியும் தவறு செய்கிறாள். அவ்வாறு செய்வது உறவை இழிவுபடுத்துவாக இருக்கும். மாறாகத் தவறு செய்தவர்களைத் திருத்த நினைக்க வேண்டும். ஒரு நாயிடம் கூடத் தன்னை அறியாமல் ஏதோ ஓர் உறவை எதிர்பார்த்ததினால் தான் அந்தக் கிழவி அழுகிறாள். எனவே மனித வாழ்வில் உறவுகள் அவசியம் என்பதை இக்கதை எடுத்துரைக்கின்றது.

இங்குக் கட்டுரையில் கண்ட நான்கு சிறுகதைகளும் நான்கு விதமான உறவுகளைச் சுட்டுகின்றன.

அதாவது முதல் கதையில் சரியான உறவுகளைத் தேர்ந்தெடுக்காத மூன்று இளைஞர்களின் வாழ்வு சிதறிப் போகிறது.

இரண்டாவது கதை ஒரு குழந்தையின் மனதைப் புரிந்து நடக்காத உறவைச் சுட்டுகின்றது.

மூன்றாவது கதை நரிக்குறவராக இருந்தாலும் யாராக இருந்தாலும் அவசரமாக எடுக்கும் முடிவுகள் உறவை அழிக்கும் என்பதைச் சுட்டுகின்றது.

நான்காவது கதை இளமையில் கம்பீரமாக இருந்த ஒருத்தி சரியான உறவு இல்லாமையால் வயதான நிலையில் நாயோடு நாயாக இருக்கும் நிலை ஏற்பட்டுவிட்டதைச் சுட்டுகிறது.

எனவே மனித உறவுகள் என்பது பக்குவமான பழக்கத்திலும், பண்பான செயலிலும் வரவேண்டும். அவசரமான பண்பில்லாத செயல்களினால் உறவுகள் அழியும் என்ற கருத்தை இக்கட்டுரை வழி உணரலாம்.

## மனம் கொத்தி மனிதர்கள் சுட்டும் மனித உறவுகள்

தமிழ் இலக்கிய வரலாற்றில் இக்கால இலக்கியம் என்னும் பகுதி இன்றைய நவீன இலக்கியங்களையும் உள்ளடக்கியதாகும். அன்றாட வாழ்வில் நிகழ்கின்ற மனித உறவுகளை அடிப்படையாகக் கொண்ட சிக்கல்களை மையப்படுத்திப் பல படைப்புகள் வெளிவருகின்றன. தினம் தினம் நாம் கண்டும் காணாது போகின்ற வாழ்க்கைப் போராட்டத்தை மையமாகக் கொண்டு சிறுகதை, நாவல், நாடகம், நவீனக் கவிதை, கட்டுரை முதலான இலக்கிய வகைகளை வெளியிடும் சான்றோர் பலர் உள்ளனர். அவர்கள் வரிசையில் சு. சமுத்திரம் குறிப்பிடத்தக்கவர் ஆவார். அவர் படைத்த எண்ணற்ற படைப்புகள் தமிழ் இலக்கிய வரலாற்றில் நீங்கா இடம் பெற்றுள்ளன. அவருடைய சிறுகதையான, ‘மனம் கொத்தி மனிதர்கள்’ என்னும் சிறுகதையில் சுட்டப்படும் மனித உறவுகளை இங்கே விளக்கலாம்.

## தமிழ் இலக்கிய வரலாற்றில் சு. சமுத்திரம்

இலக்கியச் சான்றோரான சு. சமுத்திரம் அவர்கள் நெல்லை மாவட்டத்தில் திப்பணம் பட்டி கிராமத்தில் 1941 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் விவசாயக் குடும்பத்தில் பிறந்தவர். இளமையில் தாய், தந்தையை

இழந்தவர். கடையத்தில் பள்ளிப் படிப்பையும் சென்னைக் கல்லூரியில் கல்லூரிப் படிப்பையும் முடித்தவர். முற்போக்கு இலக்கிய முகாமில் முன்னணி எழுத்தாளராகத் திகழ்ந்தவர். நாடறிந்த படைப்பாளி. நல்ல திறனாய்வாளர். வாழ்க்கையில் பல அனுபவங்களைப் பெற்றவர். பள்ளிக்கூட ஆசிரியராகவும் உயர்நிலைப் பள்ளி ஆசிரியராகவும், கூட்டுறவு அதிகாரியாகவும், ஊராட்சி வளர்ச்சி அதிகாரியாகவும், வானொலி செய்தி வாசிப்பாளராகவும், தொலைக்காட்சி செய்தி ஆசிரியராகவும் மத்திய அரசின் விளம்பரத்துறையில் இணை இயக்குநராகவும் பணியாற்றியவர்.

கிராமியத்தமிழ், சேரித்தமிழ், அலுவலர் தமிழ், இலக்கியத்தமிழ், நவீனத்தமிழ் ஆகிய நடைகளில் தமது சிறுகதைகளையும், நாவல்களையும் படைத்தவர். சமுதாயம் ஒதுக்கிய அலிகள், தொழுநோயாளி, மனநோயாளி, எய்ட்ஸ் நோயாளி போன்றவர்கள் பற்றியும் கதை இலக்கியம் படைத்தவர். அந்த வரிசையில் இடம் பெறும் 'மனம் கொத்தி மனிதர்கள்' என்னும் சிறுகதையை இனி நோக்குவோம்.

## மனம் கொத்தி மனிதர்கள் - கதைச் சுருக்கம்

எதிர்காற்று வேகமாக வீசிய வேளையில், தனது அண்ணன் நடராசனை மருத்துவமனையிலிருந்து மிதிவண்டியில் உட்காரவைத்துத் தமது வீட்டிற்கு அழைத்து வருகிறான் தம்பி தம்பிதுரை. ஏதோ ஒரு சூழல் காரணமாக மனம் பாதிக்கப்பட்டு இயல்புக்கு மாறிய செயல்கள் செய்தமையால் மனநல மருத்துவமனையில் நடராசன் சேர்க்கப் பட்டிருந்தான். அண்ணன் மீது பாசம் கொண்ட தம்பிதுரை நடராசனின் உடல் நலம் சரியான பிறகு, தமது வீட்டிற்கு அழைத்து வருகிறான். மிதிவண்டியில் வருவதால் இருவரும் உரையாடிக் கொண்டே வருகின்றனர். அண்ணன் கேட்கும் கேள்விகளுக்கு இதமாகப் பதில் சொல்லிக்கொண்டு வருகிறான் தம்பி.

நடராசனுக்குத் திருமணம் நிச்சயிக்கப்பட்டிருந்த நிலையில்தான் அவனுக்கு உடல்நலம் பாதிக்கப்பட்டது. அதைப்பற்றிக் கேட்கிறான். வருகிற வழியில் ஒருசிலர் அவன் குணமாகி வந்ததைப் பார்த்து மகிழ்ச்சி அடைந்தார்கள். மற்றும் சிலர் அவனைப் பைத்தியமாகவே பார்த்தார்கள். ஒருமுறை வீட்டுப் பிரச்சினைகளைப் பேசிக் கொண்டிருந்தபோது

இராப்பிச்சைக்காரன் ஓயாமல் பிச்சை கேட்டுக் கொண்டிருந்தான். குடும்பச் செய்திகளைக் கோபமாகப் பேசிக் கொண்டிருந்த நடராசன் ஆவேசமாக இராப்பிச்சைக்காரன் மேல் பாய்ந்து தூக்கிப் போட்டான். வீட்டுப்பொருட்களை எடுத்து எறிந்தான். குடும்பத்தினர் அரைகுறையாகச் சாப்பிட்டு வைத்திருந்த பாத்திரத்திலுள்ள உணவைப் பிச்சைக்காரன் தட்டில் போட்டான். மூத்தண்ணன் 'ஒனக்குப் பைத்தியம் பிடிச்சுட்டால ? வேணுமானால் ஒன் சோத்தப்போடு. என் தட்ட எதுக்குல எடுத்த ? என்று சொன்னபோது, அதுவரை அண்ணனின் முகத்தைக்கூட நேராகப் பார்க்கப் பயப்படும் நடராசன், 'ஆமாண்டா, ஒன் கூட இருக்கரதவிடப் பைத்தியக்கார ஆஸ்பத்திரில இருக்கது எவ்வளவோ மேலு' என்று சொல்லிவிட்டு வீட்டுக்குள் போய்ச் சமையல் பானையை எடுத்துக் கொண்டு வந்து, தடுக்கப்போன அண்ணனைக் 'கொலை விழும்' என்று எச்சரித்துவிட்டு அந்தப் பானைக்குள் இருந்த சோத்தைப் பிச்சைக்காரனின் பாத்திரத்தில் கொட்டினான். பிறகு வெறி பிடித்தவன் போல் அந்தப் பானையை அண்ணன் நின்ற இடத்துக்கருகே போட்டு உடைத்தான். அதற்குப் பிறகு அவன் 'ஒரு மாதிரி' ஆகி ஆஸ்பத்திரியிலும் சேர்க்கும்படி ஆகிவிட்டது.

வீட்டிற்கு வந்து சேர்ந்த பிறகு வீட்டிலுள்ள அனைவரும் விசாரித்தார்கள். அம்மா அழுதாள். மூத்த அண்ணன் தம்பியின் கையைப் பிடித்துக் கொண்டான். அப்பா ஓர் ஓரத்தில் நிலை குலைந்து நின்றார். அவர்கள் அனைவரும் கண்ணீரைப் பாச வெள்ளமாகக் காட்டினார்கள். நடராசனுக்குத் தெம்பு வந்தது. வீட்டில் பலரும் அவனை வந்து பார்த்துப் போனார்கள்.

அவனுக்கு நிச்சயித்த பெண், தனது தம்பிக்கு வாக்கப் பட்டிருப்பதை அறிந்தான். மறுநாள் குளிப்பதற்காகக் குளத்திற்குச் சென்றான். சிறுவர்கள் பைத்தியமென்று கல்லெறிந்தார்கள். வழியில் பலரும் பலவிதமாக விமர்சித்தார்கள்.

தனக்கு மனநிலை சரியாகிவிட்டது என்பதை நிரூபிக்கும் வகையில் வழியில் பார்த்தவர்களிடம் 'வெள்ளாம எப்படி இருக்கு' என்று பேசிப் பார்த்தான். யாரும் பதில் பேசவில்லை. சிலர் ஏளனமாகப் பார்த்தார்கள். சிலர் ஆச்சரியமாகப் பார்த்தார்கள். சிலர் பயந்து ஓடினார்கள். தனது

பெட்டிக்கடையில் இருந்தான் நடராசன். சிலர் நக்கல் செய்தார்கள். வீட்டில் பிரச்சினை எழும்பியது. தம்பி மனைவி சொத்தைப் பற்றிப் பேசினாள். தம்பிக்கும் அவளுக்கும் வாக்குவாதம், அடிதடி பிரச்சினை. தம்பிதுரையின் மனைவி பேசுகிறாள். 'உனக்கெல்லாம் எதுக்குய்யா பெண்டாட்டி. இந்த பைத்தியத்தச் சுமக்குறதுலயே பாதிச் சொத்து அழிஞ்சுபோச்சு. மீதியும் போகப்போவுது. நீயும் இந்தப் பைத்தியத்த விடமாட்ட ! ஒன்கிட்ட எதுக்கு இருக்கணும்' எனப் பலவாறு பேசிவிட்டாள்.

தம்பிதுரை தனது அண்ணன் நடராசனைக் கட்டிப் பிடித்துக் கொண்டு, 'பாத்தியா அண்ணா, ஒன் கதியப் பாத்தியா' என் நிலைமையைப் பாத்தியா ? இன்னுமா நாம உயிரோட இருக்கணும் என்று சொல்லிக் கொண்டே அலறினான். அம்மா அரை மயக்கத்தில்; குழந்தைகள் கூப்பாடு. நடராசனுக்கு மனதினுள் ஒரு பூதம் அழுத்தித் தலையில் ஏறிக் குதிப்பது போலிருந்தது. சத்தம் போட்டுப் பேசினான். சட்டையைக் கிழித்துக் கொண்டு, தலையில் அடித்துக் கொண்டு, கற்களை எடுத்துக்கொண்டு... இவ்வாறு கதை முடிகிறது.

## மனமும் உடலும்

எந்த ஒரு மனிதனாக இருந்தாலும் உடல்நலப் பாதிப்பு என்பது வரத்தான் செய்யும். உடல் உறுப்புகளுள் ஏதாவது ஒன்று பாதிக்கப்படுகிற போது உடம்பு சரியில்லை என்று பொதுவாக மனிதர்கள் கூறுகின்றனர். உடல்நலம் பாதிக்கப்படுகிறபோது மருத்துவரை அணுகுகின்றனர். மருத்துவமனையிலும் சேர்க்கப்படுகின்றனர். மருத்துவமும் செய்யப்படு கிறது. நோய் குணமானவுடன் வீட்டிற்கு வந்து விடுகின்றனர். இயல்பு வாழ்க்கை வாழ்கின்றனர். இவ்வாறு நடப்பது இயல்பு. உடல் கூறுகள் அனைத்தையும் ஊடுருவி இருப்பது மனம். இதனை மூளை என்று கூடக் கூற இயலாது. மனிதன் என்பதற்கான அடையாளம் மனம். உயிரின் கருவியாக இருத்தல் உடல். இந்த உடம்பை அறிவது மனம். இந்த மனமானது ஐம்புலன்களையும் இயக்குவது. தனது கட்டுப்பாட்டில் வைத்திருப்பது. ஐம்புலன்களும் மனதைக் கட்டுப்படுத்துமானால் அவன் மிருக நிலைக்குப் போகிறான். மனதின் கட்டுப்பாட்டில் ஐம்புலன்களையும் வைத்திருப்பவன் மனிதன். இந்த மனம் என்பது உணர்வுப்பூர்வமானது. இந்த மனமும் உடலோடும் உயிரோடும் இணைந்ததுதான். கண்ணுக்குத்

தெரியாத கடவுளைப் போன்று உணர்வின் வெளிப்பாடு மனம். இந்த மனம் சில நேரங்களில் சீரற்றுப் போகிறது. பாதிக்கப்படுகிறது. அப்பொழுது மனிதர்கள் உடலுக்கு மருத்துவம் செய்து கொள்வது போன்று மருத்துவம் செய்துகொள்ள வேண்டியது அவசியம். அவ்வாறு செய்யும் மருத்துவத்தைத் தான் மனநல மருத்துவம் என்கிறோம். இந்த மருத்துவத்தைத் தான் நடராசனும் செய்து கொண்டிருந்தான்.

## உறவுகளும் உணர்வுகளும்

மனித உறவுகளைக குடும்ப உறவுகள், சமுதாய உறவுகள் என இரு பெரும் பிரிவாகப் பிரித்துக் கொண்டால் இரண்டுமே ஒரு மனிதனுக்குத் தேவைப்படுகின்றன. ஒர மனிதனின் வெளிப்புறமான உடலையும் உள்புறமான மனதையும் பாதிக்காத வகையில் உறவுகள் அமைகிறபோது அந்த மனிதன் செம்மையான வாழ்க்கை வாழ முடியும். உடல் பாதிப்பைவிட மனப்பாதிப்பு மனிதனை அழித்துவிடும்.

உணர்வுப்பூர்வமான மனதைப் பாதுகாக்க வேண்டியது உறவுகளே. அந்த உறவினரின் கல்லடி உடலைப் பாதிக்கும். சொல்லடி மனதைப் பாதிக்கும். இதை ஒவ்வொரு மனிதர்களும் கவனத்தில் கொள்ள வேண்டியது அவசியம். சொற்களால் சொல்ல முடியாத மென்மைத் தன்மை வாய்ந்தது தான் மனம். அந்த மனம் பாதிக்கப்பட்டால் எது இருந்தும் பயனில்லாமல் போகும். இனி நடராசனின் மனம் பற்றிப் பார்ப்போம்.

## நடராசனும் உறவுகளும்

நடராசன் என்னும் கதாப்பாத்திரம் ஒரு முன் மாதிரி பாத்திரமாக இந்தச் சமுதாயத்தில் திகழ்கிறது. ஏதோ ஒரு மன அழுத்தத்தினால் இயல்புக்கு மாறுபட்ட செயல்களை நடராசன் செய்கிறான். அதனால் மனநலக் காப்பகத்தில் சேர்க்கப்பட்டு மருத்துவம் பெற்று மீண்டும் தன் குடும்பம் வருகிறான். எல்லா மனிதர்களைப் போலவும் அவனும் சாதாரணமாக இருந்தவன் தான். அவனது குடும்பச் சிக்கல்கள் அவனை அழுத்துகின்றன.

திருமணம் செய்து மகிழ்ச்சியோடு வாழலாம் என்று நினைத்திருந்த நேரத்தில் தான் இப்படியானது. அதுவும் திருமணத்திற்கு ஒரு பெண் நிச்சயிக்கப்பட்டிருந்தாள். இனிமையான வாழ்வை எதிர்நோக்கி இருந்த நடராசனுக்குக் கசப்பான நிலைமை ஏற்பட்டது.

இந்த நிலை யாருக்கு வேண்டுமானாலும் எப்ப வேண்டுமானாலும் வரலாம். இதை அவனது குடும்ப உறவுகளும் நினைத்துப் பார்க்கவில்லை. சமுதாய உறவுகளும் நினைத்துப் பார்க்கவில்லை. காயம்பட்ட நெஞ்சம் வலியால் ஆழ்கிறபோது மனம் வெறுப்படைந்து ஏதேதோ நடக்கின்றது.

*மனநலம் மன்னுயிர்க் காக்கம் இனநலம்*
*எல்லாப் புகழுந் தரும்* (குறள் - 457)

என்னும் குறளில் மனநலமே எல்லாச் செல்வத்தையும் தரக்கூடியது. அத்துடன் உறவினரின் நல்ல உறவானது எல்லாப் புகழையும் தரும் என்கிறார் வள்ளுவர். எனவே உறவுகள் ஒரு மனிதனைச் செம்மையாக வாழ வைக்கும். நடராசன் வீடு வந்து சேர்ந்த பிறகு தாயும் தந்தையும் தம்பியும் பாசம் காட்டுகின்றனர். தம்பிதுரை தன் அண்ணன் மீது உண்மையான அன்பு காட்டுகிறான். இதமாகப் பேசுகிறான். பணத்தையோ, சொத்தையோ பெரிதாக நினைக்கவில்லை. ஆனால் அவனுக்கு வாய்த்த மனைவி சொத்தைப் பெரிதாக நினைக்கிறாள்.

குடும்ப உறவுகளில் இத்தன்மை நடராசனின் மனதிற்குக் கசப்பையே தருகிறது. குடும்பத்தில் உடன்பிறந்தோர் ஆதரவு கிடைத்திருக்கிறது என்கிற மன ஆறுதலில் வாழ நினைக்கிறபோது சமுதாயம் அவனை இழிவுபடுத்துகிறது. மனம் பாதிக்கப்பட்டவன் குணமானதைச் சமுதாயம் ஏற்க மறுக்கிறது. மனநலக் குறைவைத் தீராத ஒன்றாகவே நினைக்கிறது. அதனால்தான் சிறுவர்கள் முதல் பெரியவர் வரை அவனைப் பைத்தியமாக நினைப்பதோடு எள்ளி நகையாடுகின்றனர். நாளைக்கு நமக்கு இந்த நிலை வரலாம், வராது என்பது என்ன நிச்சயம் என்பதை உணர மறுக்கின்றனர். ஏற்கெனவே மனம் பாதிக்கப்பட்டு மீண்டும் புத்துயிர் பெற்று வந்தது போன்று வந்தவனை மீண்டும் பழைய நிலைக்கே சமுதாயம் போகச் செய்கிறது. அவன் எவ்வளவோ யதார்த்தமாக, தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு இருந்தும், அதையும் கடந்து அவனைப் பழைய நிலைக்கே சமுதாய உறவுகள் தள்ளி வருகின்றன.

‘நடராசன், அடிமேல் அடி வைத்தும் நாலடியை ஈரடியாய்த் தாவியும் கடைப்பக்கமாக வந்து நின்றான். எதையோ கேட்ட ஒருவரிடம் எதுவும் பேசாமல் அப்படியே நின்றான். அரை மணி நேரத்திற்கும் அதிகமாக நின்றான். அப்புறம் சத்தம் போட்டுப் பேசினான். சட்டையைக் கிழித்துக் கொண்டு, தலையில் அடித்துக் கொண்டு, கற்களை எடுத்துக் கொண்டு...’

என்று கதை முடிகிறபோது மனிதநேயமுள்ள யாவரையும் கண்கலங்க வைக்கிறது.

நோயாக இருந்தாலும், விபத்துகளாக இருந்தாலும் இன்று ஒருவனுக்கு ஏற்பட்டால், நாளை நமக்கும் வரலாம் என்கிற உணர்வு எல்லா மனிதர்களுக்கும் வரவேண்டும். ஆண்டி அரசனாகலாம். அரசன் ஆண்டியாகலாம். எதுவேண்டுமானாலும் எப்போது வேண்டுமானாலும் யாருக்கு வேண்டுமானாலும் வரலாம். இந்த உணர்வை ஒவ்வொரு மனிதர்களும் பெற்றுவிட்டால் எந்த வார்த்தையைப் பேசுவதற்கும் யோசிப்பார்கள்.

*மனநலம் நன்குடைய ராயினும் சான்றோர்க்கு*
*இனநலம் ஏமாப் புடைத்து* (குறள் - 548)

என்னும் வள்ளுவன் வாக்குப்படி இயற்கையாகவே ஒருவருக்கு மனவலிமை இருந்தாலும் அதைப் பாதுகாக்கும் கவசம் உறவுகளே என்பதை மனிதர்கள் நினைவில் கொள்ளுதல் வேண்டும். தமக்கு எதுவுமே வராது இப்பொழுது இருப்பது போன்று எப்பொழுதும் இருப்போம் என்று நினையாமல் பிறரை வார்த்தைகளால் சுட்டுவிடுதல் கூடாது. அடியால் உடல் பாதிக்கப்பட்டாலும் எளிதில் சரியாகி விடும். ஆனால் சொல்லால் மனம் பாதிக்கப்பட்டால் எளிதில் சரியாகாது என்பதை உணர்தல் வேண்டும் என்பதைத்தான் 'மனம் கொத்தி மனிதர்கள்' என்னும் சிறுகதை உணர்த்துகின்றது.

மரக்கொத்திப் பறவை மரத்தைக் கொத்திப் பூச்சிகளைப் பிடித்துத் தின்னும் பழக்கமுள்ளது. அது கொத்தும்போது பூச்சிகள் துடிப்பதை இறைவன் மட்டுமே உணர முடியும். அதுபோல வன்மையான வார்த்தைகளைப் பேசுகிறபோது அதைக் கேட்பவர் நெஞ்சம் துடிதுடித்துப் போவதை இறைவன் மட்டுமே அறிய முடியும்.

## நாவல் இலக்கியத்தில் மனித உறவுகள்

தமிழ் இலக்கிய வரலாற்றில் பல நாவல்கள் வெளிவந்துள்ளன. அவற்றுள் சமுதாய நாவல்களும் வரலாற்று நாவல்களும் சிறந்த பெயரைப் பெற்றன. சோழ, பாண்டிய அரசர்களின் வரலாற்றை நாவலாகப் பலர் வடித்தனர். ஆனால் சேர அரசர்களின் வரலாற்றை ஒரு சிலர், மட்டுமே நாவலாக எழுதினர். அவற்றுள் கவிஞர் கண்ணதாசனால் எழுதப்பெற்ற 'சேரமான் காதலி' என்னும் நாவலும் ஒன்று. சமுதாய நாவலாக இருந்தாலும் வரலாற்று நாவலாக இருந்தாலும் அவையாவும் மனித

உறவுகளையே படம்பிடித்துக் காட்டுகின்றன. ‘சேரமான் காதலி’ என்னும் நாவல் மட்டுமே இங்குக் கையாளப்பட்டுள்ளது.

## சேரமான் காதலியின் கதைச் சுருக்கம்

சேரமான் காதலி நாவலில் இடம்பெற்றுள்ள முக்கியமான கதாப் பாத்திரங்கள்

| | |
|---|---|
| நாராயண நம்பூதிரி | - நம்பூதிரிகளின் தலைவர் |
| குலசேகராழ்வார் | - இரண்டாம் சேரமான் பெருமான் |
| மார்த்தாண்டவர்மன் | - 2ஆம் சேரமானின் மகன் (சேர நாட்டின் வாரிசு) |
| பாஸ்கர ரவிவர்மன் | - 2ஆம் சேரமானின் மைத்துனன் மகன் - மூன்றாம் சேரமான் பெருமான் - தளபதி |
| பத்மாவதி | - ரவிவர்மனின் உரிமை மனைவி |
| யூஜியானா | - யூதப்பெண் - ரவிவர்மனின் முதல் காதலி |
| சலிமா | - முகமதியப்பெண் - ரவிவர்மனின் 2ம் காதலி |
| தாங்கிணி | - மலை சாதிப்பெண் |
| மெல்லினங்கோதை | - வேணாட்டு இளவரசி, மார்த்தாண்டனின் மனைவி |
| விக்கிரம சோழன் | - சோழ அரசன் |
| சோழமா தேவி | - விக்கிரம சோழனின் மனைவி |
| அங்கதன் | - சேரநாட்டு இளைய தளபதி |
| சீர்மாறன் சீர்வல்லபன் | - வரகுண பாண்டியனின் பட்டத்து இளவரசன் |
| அபிராமி நாச்சியார் | - சீர்வல்லவனின் பட்டத்துராணி |
| யோ கோவா | - யூதர், யூஜியானாவின் தந்தை |
| கல்யாணி | - கிருஷ்ணன் நம்பூதிரியின் மனைவி |
| மூத்ததாவளி, இளையதாவளி, மூரின்னூர்த்தாவளி, காலியூர்த்தாவளி, பள்ளி விருத்தித்தாவளி | - ரவிவர்மனின் சகோதரிகள் |

சேரநாட்டு அரசர் இரண்டாம் சேரமான் அரசு துறந்து வைணவத் துறவியாகத் திட்டமிட்டு அதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டன. அதனால் அரண்மனை ‘களை’ கட்டிக் கொண்டிருந்தது. சேரநாட்டைப் பாதுகாக்கும் ஆட்சிப் பொறுப்பில் ஒவ்வொரு கிராமத்திற்கும் ஒரு நம்பூதிரி நியமிக்கப்

பட்டிருந்தனர். அவர்கள் அனைவருக்கும் தலைவரே நாராயண நம்பூதிரி. அரசர் துறவு மேற்கொள்வதால் அவர் மகன் மார்த்தாண்டவர்மனுக்குப் பட்டம் சூட்டிச் சேரநாட்டைப் பாதுகாக்கும் பொறுப்பை முழுவதுமாக ஏற்றுக்கொண்ட நாராயண நம்பூதிரி அதற்கான கையெழுத்தையும் இரண்டாம் சேரமானிடம் பெற்றிருந்தார்.

அரண்மனையில் விழாக்கோலமாக இருந்தாலும் சேரமானைப் பிரிய மனம் இல்லாத உறவினர்கள் மக்கள் அனைவருமே வருத்தமாக இருந்தனர். பாஸ்கர ரவிவர்மன் அழுது கொண்டிருந்தான். சேரநாட்டுத் தளபதியான அவன் அழுவதைக் கண்ட சேரமான் அருகில் அழைத்து, வருந்தாதே! எனக்குப் பிறகு மார்த்தாண்டன் தானே ஆட்சிக்கு வரப் போகிறான். எப்பொழுதும் போல நீ அதே உரிமைகளை அனுபவிக்கலாம் என்று ஆறுதல் கூறினார். அரண்மனையில் அனைவரும் பரபரப்பாக இருந்தனர்.

வடக்கே பழனி, தெற்கே கடற்கரை, கிழக்கே தென்காசி, மேற்கே கோழிக்கோடு இவற்றை எல்லையாகக் கொண்டது சேரநாடு. சேர நாட்டில் பல்லவ நாட்டிலிருந்து குடியேறிய வைணவர்கள் ஏராளமாக இருந்தார்கள். ஆட்சியில் தமக்கு அதிகப் பங்கு இல்லாததால் சமயத் துறையில் அதிகம் கவனம் செலுத்தினார் 2ஆம் சேரமான் பெருமான். மகன் ஆறு வயதானபோது மனைவி காலமானார். மனைவியை இழந்த மன்னர் மறுமணம் செய்யவில்லை. அந்தப்புர ஆசை நாயகிகளையும் வைத்துக் கொள்ளவில்லை. ஒழுக்கமானவராக வாழ்ந்தார். அவரது ஒரே மகன் மார்த்தாண்டவர்மன்.

ரவிவர்மன் சாதாரணமானவன் அன்று. நல்ல தோற்றம், ஆட்கொல்லிக் கண்கள், சிரிப்பிலேயே அவன் பத்து வகைச் சிரிப்பு வைத்திருந்தான். ஒன்று கவருவது, இன்னொன்று நம்ப வைப்பது. கழுத்தறுக்கும் சிரிப்பை அரசியலுக்கு மட்டும் வைத்திருந்தான். ரவிவர்மனின் மனைவி பத்மாவதி. அழகும் பண்பும் நிரம்பியவள். மணமாகி 2 ஆண்டுகள் ஆகியும் அவன் அவளோடு குடும்பம் நடத்தாமல் இருந்தான். பத்மாவதி கொல்லத்தைச் சேர்ந்த ஒரு சேனாதிபதியின் மகள். அவள் தந்தை போரில் இறந்துவிட்டதால் அப்போது பத்து வயதாயிருந்த பத்மாவதியைச் சேரமான் எடுத்துத் தன் மகளாகவே அன்பு காட்டி

வளர்த்தார். ரவிவர்மனுக்குப் பத்மாவதியை மணமுடிக்க ரவிவர்மனிடம் சேரமான் தெரிவித்தார். ரவிவர்மன் அதைக் கடுமையாக மறுத்தான். அந்த மறுப்புக்கு ஒரே காரணம் பத்மாவிதியின் தாய், முறைப்படி மணம் முடித்து வந்த ஒருத்திக்குப் பிறந்தவள் அல்ல என்பதே. அவள் உத்தமி. அவள் தாய் உத்தமி. அவள் பாட்டியைப் பற்றி உனக்கென்ன கவலை என்பது சேரமானின் வாதம். இறுதியில் பத்மாவதியைத் திருமணம் செய்ய வில்லையென்றால் நீ அரண்மனைக்கே வரவேண்டாம் என்றே சேரமான் கூறிவிட்டார். அதனால் பத்மாவதியை மணந்தான். ஆனாலும் அவளிடம் பாராமுகமாகவே இருந்தான்.

இரண்டாம் சேரமான் துறவு மேற்கொண்டதால் சேரநாட்டை இரண்டாகப் பிரித்துத் தனக்கும் ஒரு பகுதியைக் கேட்டான் ரவிவர்மன். அது ஒருநாளும் நடக்காது என்று கூறிவிட்டார் நம்பூதிரி. அதனால் தன் மனைவி பத்மாவதியிடம் ஓலை எழுதிச் சேரமானிடம் கொடுக்கும்படி ரவிவர்மன் கூறினான். ஓலையைப் படித்த பத்மாவதி கண்கலங்கினாள். ஆனாலும் கணவன் ஆணையை மீற முடியாமல், பரிசுப் பொருள் தரும் ஒரு தாம்பாளத்தில் ஓலையையும் வைத்துக் கொடுத்து விட்டு, தன் இருப்பிடம் போகாமல் பயந்து கொண்டு இருந்தாள் பத்மாவதி.

அடுத்த நாள் மார்த்தாண்டவர்மனுக்கு முடிசூட்டு விழா முடிந்தது. மறுநாள் 2ஆம் சேரமான் புறப்பட்டுப் பெரியாழ்வாரிடம் சென்றார். இரவு பத்மாவதி வராததைக் கண்ட ரவிவர்மன் கையெழுத்து வாங்கியிருக்க மாட்டாள் என்பதைப் புரிந்து கொண்டு, தனக்குள் சூழ்ச்சி செய்தான். யூதர்கள், கிறித்துவர்கள் வாழும் பகுதிக்குச் சென்று நம்பூதிரிகள் மதவெறி கொண்டவர்கள். எனக்கு ஆதரவு கொடுத்தால் உங்களுக்கு உரிமை வழங்குவேன் என்று உறுதி கூறிவிட்டு, தனது படைகளைப் பக்கபலமாக வைத்துக் கொண்டான்.

யூதப்பெண் யூஜியானா என்பவளுடன் பழகி வந்தான் ரவிவர்மன். பாண்டிய நாட்டில் தனது நண்பன் அரச மாணிக்க தேவனின் உதவியோடு யூஜியானாவை நாட்டிய மாட வைத்துப் படையெடுத்து வரும்படி செய்தான். யூஜியானா பொன் திரட்டிப் பாண்டியன் சடையவர்மனைப் படையெடுத்து வரும்படி செய்தாள். நாட்டியக்காரி மாதவி என்பவளைக் கொங்கு நாட்டிற்கு அனுப்பி அவளைப் படையெடுத்து வரும்படிச் செய்தான்.

போர் நடந்தது. ரவிவர்மன் வெற்றி பெற்றான். இரவோடு இரவாக மார்த்தாண்டவர்மனையும் நாராயண நம்பூதிரியையும் தனித்தனியாகச் சிறைப்படுத்திவிடத் திட்டமிட்டான் ரவிவர்மன். குதிரை ஏறி நம்பூதிரிகளிடம் சென்றான். மார்த்தாண்டவர்மனைத் தங்களிடமிருந்து சேரமான் காப்பாற்றச் சொன்னார் என்றான் ரவிவர்மன்.

நம்பூதிரி கூறினார். 'ரவிவர்மா ! சேரநாட்டில் உனக்குள்ள ஆதரவு எனக்குத் தெரியும். கொங்கு நாட்டிற்கும் பாண்டிய நாட்டிற்கும் நீ நங்கையரை அனுப்பிய காரணமும் தெரியும். பட்டம் பதவி பெற நீ போட்டிருக்கும் திட்டம். அதனால் மார்த்தாண்டவர்மனின் இரத்தம் ஒரு சொட்டு சிந்தினாலும் அதற்குப் பதில் சொல்ல வேண்டியிருக்கும். காவலர் வந்தனர். நம்பூதிரி கட்டளைப்படி ரவிவர்மனை மரியாதையோடு சிறைச்சாலைக்குள்ளே கொண்டு போனார்கள். இதனை அறிந்த பத்மாவதி கண்ணீர் வடித்தாள். கணவனின் திட்டம் தெரிந்திருந்தாலும் அவனைச் சிறையில் பார்க்க மனம் ஒப்பாமல், கணவனைச் சிறையிலிருந்து விடுவித்தாள்.

இரண்டாம் சேரமான் ஸ்ரீரங்கத்தில் தனக்கு வந்த பரிசுப் பொருள்களில் ஓலை இருப்பதைக் கண்டு கண்ணீர் வடித்தார். சேர நாட்டின் சரித்திரத்தில் மன்னர்கள் கண்ணீர் வடித்த பக்கங்கள் மிகவும் குறைவு. மகன் மார்த்தாண்டவர்மனை நினைத்து மனம் வருந்தி, நேராகப் பெரியாழ்வாரைச் சந்தித்துக் காலில் விழுந்து கதறி அழுதார். அவர் பற்றுகளை விட்டுவிடு, அதைப் பரமன் பார்த்துக் கொள்வார் என்று கூறினார்.

ரவிவர்மன் அரண்மனை நோக்கிப் புறப்பட்டான். பத்மாவதியையும் அலங்காரம் செய்யச் சொன்னான். தாவளி சகோதரிகளை அரண்மனைக்கு அழைத்தான். மூத்ததாவளி மட்டும் சிறிது நேரம் கழித்து வருவதாகச் சொன்னாள். நள்ளிரவில் மார்த்தாண்டனும் கோதையும் பத்மாவதி வீடு தேடி வந்தனர். கலங்கிய பத்மாவதி அவர்களுக்கு அடைக்கலம் கொடுத்தாள். தாவளி சகோதரிகள் ஆதரவு தந்தனர்.

ரவிவர்மனும் பத்மாவதியும் அரண்மனை அடைந்தனர். பத்மாவதி கணையாழி மறந்துவிட்டேன் என்று கூறி மீண்டும் வீட்டிற்கு வருகிறாள்.

மார்த்தாண்டவர்மனையும் கோதையையும் அகஸ்தீஸ்வரம் காட்டில் திருவேங்கடத்தான் ஸ்ரீ வல்லபன் என்ற முனிவர் ஆசிரமத்திற்கு அனுப்பிவிட்டு, பத்மாவதி மீண்டும் அரண்மனை வந்தாள்.

அடுத்த ஒரு வாரத்தில் ரவிவர்மனுக்கு முடிசூட்டு விழா அறிவிக்கப் பெற்றது. மகுடத்தை வழிபாட்டிற்காகக் கோவிலில் வைத்தான் ரவிவர்மன். அது காணாமல் போய் இருந்தது. சிவப்பு மூக்குத்தி அணிந்த, சிவப்பு சேலை அணிந்த பெண் ரவிவர்மனுக்குக் காட்சியளித்தாள். அதே பெண் மெல்லினம் கோதைக்கும் குலசேகர ஆழ்வாருக்கும் காட்சி அளித்தாள். மகுடம் காணாமல் போனதால் ரவிவர்மன் மார்த்தாண்டனைத் தேடி வந்தான். வழியில் வேடர் படைகள் ரவிவர்மனைக் கட்டி வைத்தன. அங்கே தரங்கிணி என்னும் வேட்டுவப் பெண்ணின் உதவியால் அவன் காப்பாற்றப்படுகிறான். ரவிவர்மன் பத்மாவதி குலசேகராழ்வார் இருப்பிடம் வருகின்றனர். மார்த்தாண்டவர்மனும் கோதையும் வருகின்றனர். குலசேகர ஆழ்வாரின் உயிர் பிரிகிறது. அனைவரும் கதறி அழுகின்றனர்.

விக்கிரம சோழன் முன்னிலையில் சடங்குகள் நடந்தேறுகின்றன. அனைவரையும் தன் அரண்மனைக்கு அழைக்கிறான் விக்கிரம சோழன், தன் அரசமாதேவியின் ஆலோசனைப்படி,

சேரநாட்டை இரண்டாகப் பிரித்து, 'திருவஞ்சைக்களம்' என்னும் வஞ்சியைத் தலைநகராகக் கொண்டு சேர நாட்டின் ஒரு பகுதியை ரவிவர்மனுக்குக் கொடுத்து மூன்றாம் சேரமானாக ஆளும் படியும் திருவிதாங்கோட்டைத் தலைநகராகக் கொண்டு வேணாட்டை மார்த்தாண்டவர்மன் ஆள்வதென்னும் உடன்படிக்கை செய்தனுப்பினான். அதன்படி ஆட்சி அமைந்தது. இருவருக்கும் முடிசூட்டுவிழா இனிதே முடிந்தது.

இதற்கிடையில் இராஜசேகர சுவாமி எதிர்காலம் பற்றிக் கூறுகிறார். ரவிவர்மனுடன் தாம்பத்திய உறவு கொண்ட யூஜியானா கருவுருகிறாள். அந்தக் குழந்தை சேரவம்சத்தை அழிக்க வந்தது என்று ராஜசேகர சுவாமி கூறுகிறார். தடுமாறிய ரவிவர்மன் யூஜியானாவை இஸ்ரேலுக்குக் கப்பலேற்றுகிறான். அதன் பிறகு அரேபியாவிலிருந்து ஒரு கப்பல் வருகிறது. அதில் முகமதியப் பெண் சவிமாவும் அவள் பெற்றோரும் வருகின்றனர். அரண்மனையில் பரிசுப் பொருள் கொடுத்துவிட்டுக் குடியுரிமை பெறுகின்றனர்.

மூன்று ஆண்டுகள் ஆக்கப்பூர்வமான பணிகளை இறைப் பக்தியோடு ரவிவர்மன் செய்கிறான். மார்த்தாண்டவர்மனுக்குக் குழந்தைகள் இல்லை. மறுமணம் செய்து கொள்ளவும் அவன் விரும்பவில்லை. ஆண் மலடோ பெண் மலடோ தெரியாத போது நான் மறுமணம் செய்யமாட்டேன் என்று கூறியவன் பக்தி மார்க்கத்தில் இறங்கினான்.

மணிமண்டபத்தில் விவாத மேடை நடைபெற்றது. அதில் சலிமா கலந்து கொண்டாள். ரவிவர்மன் விவாதம் முடிந்து அரண்மனைக்குச் சென்றான். அவன் கழுத்திலிருந்த பதக்கம் கழன்று சலிமா கையில் அகப்பட்டது. அதிலிருந்த யூஜியானாவின் படத்தை எடுத்துவிட்டுத் தனது படத்தை வைத்து ரவிவர்மனிடம் தருகிறாள். அவன் ஏற்க மறுத்து விரட்டி அனுப்புகிறான். அன்று மாலை கடற்கரையில் ரவிவர்மன் உலாவிக் கொண்டிருக்கிறான். இரண்டு பெண்கள் கடலில் இறங்க அலை அடித்துச் செல்கிறது. ரவிவர்மன் அவர்களைக் காப்பாற்றக் குதிக்கிறான். ஒருத்தியோடு ஒரு தீவில் ஒதுங்குகிறான். அவள் தான் சலிமா. அவளை அழைத்துக் கொண்டு அரண்மனை வருகிறான். நம்பூதிரி தடுத்தும் கேட்கவில்லை. இச்செய்தியை அறிந்த யூஜியானா குழந்தையோடு அரண்மனை வருகிறாள். சலிமா, யூஜியானா, பத்மாவதி மூவரையும் சமாதானம் செய்து அரண்மனையில் இருக்கிறான் ரவிவர்மன். சலிமாவை மணக்க முகமதியனாக மாற நடவடிக்கைகள் எடுக்கிறான் ரவிவர்மன். இதை அறிந்த நம்பூதிரி ரவிவர்மனைக் கொல்லத் திட்டமிடுகின்றார். ரவிவர்மன் பக்கத்திலிருந்த யூஜியானா மீது அம்பு பாய்கிறது. அவள் இறக்கிறாள்.

ரவிவர்மன் ஒரு திட்டம் தீட்டுகிறான். சேரநாட்டை 12 பிரிவாகப் பிரித்துப் பத்மாவதி, கோதை, 5 சகோதரிகள் அணுக்கத் தொண்டர் களுக்குக் கொடுக்கிறான். தன் மனைவி பத்மாவதியோடு மகிழ்ச்சியாக வாழ்கிறான். பிறகு அவள் காலில் விழுந்து நீ ஒன்றும் கவலைப்படாதே. என் வாழ்க்கை எப்படியெல்லாமோ போயிற்று. நீ ஒரு குலதர்மபத்தினி; வாழ வேண்டிய முறைப்படி வாழ்ந்து விட்டாய் எனக் கூறி அவளையும் அறியாமல் அவள் காலில் விழுகிறான். பிறகு யூஜியானாவின் குழந்தையைப் பத்மாவதியிடம் கொடுத்துவிட்டு, இரவோடு இரவாகச் சலிமாவுடன் கப்பலேறி அரேபியாவிற்குப் புறப்படுகிறான். யூஜியானாவின் உடலைப் பெட்டியில் வைத்துக் கடலில் தள்ளுகிறான். கப்பலில்

முகமதியனாக மாற்றப்படுகிறான். கப்பல் நகர ஆரம்பித்தது. பாஸ்கர ரவிவர்மனாக இருந்து மூன்றாம் சேரமானாக ஆட்சி செய்தவன் அப்துல் ஏணிமான் சாமொரின் என்ற பெயரோடு செல்லும்போது தம்மையுமறியாமல் கண்ணீர் விட்டான்.

## சேரமான் காதலி நாவல் சுட்டும் மனித உறவுகள்

சேரநாட்டில் இரண்டாம் சேரமான் பெருமான் வைணவரானதும் மூன்றாம் சேரமான் முகமதியரானதும் வரலாற்று உண்மைகள். அந்த வரலாற்று நிகழ்வை மையப்படுத்திக் கண்ணதாசன் சில கதாப் பாத்திரங்களை அறிமுகப்படுத்தி வாழ்வியல் உண்மைகளைச் சொல்லும் நிலையில் மனித உறவுகளைப் படம்பிடித்துக் காட்டுகிறார்.

இரண்டாம் சேரமான் ஒழுக்க சீலராக விளங்கியவர். அத்துடன் தன் நாட்டு மக்களின் அன்பைப் பெறும் வகையில் உறவை வைத்திருந்தார். சமயவாதிகளான நம்பூதிரிகளுக்கு மரியாதை கொடுத்து ஆலோசனை கேட்டு நடந்தார். தன் மனைவி மீது அன்புடையவராக இருந்தமையால் அவள் இறந்த பிறகும் மறுமணம் செய்யவில்லை. தன் மகன் மார்த்தாண்டவர்மனையும் நல்வழியில் வளர்த்திருந்தார். வளர்ப்பு மகளான பத்மாவதியையும் சொந்த மகளாக நினைத்து அன்பு காட்டியவர். நிறைவாக இறைவனோடு அன்பில் கலக்கத் துறவு மேற்கொண்டார். இரண்டாம் சேரமான் பெருமான் எல்லோரிடமும் அன்புறவு கொண்டவர்.

பாஸ்கர ரவிவர்மன் எல்லா ஆற்றல்களும் ஆண்மையும் நிறைந்தவனாக இருந்தும் அவனைச் சுற்றிலும் பதவிவெறியும் சுயநலமும் இருந்தன. அதனால் அன்பு மனைவியான பத்மாவதியை தள்ளிவைத்து விட்டு யூஜியானா, சலீமா என்னும் பெண்களோடு பழகுகிறான். ஆனால் இறுதியில் தன்னை உணர்ந்தவனாக அன்பு நிரம்பிய மனைவி உறவை மதிக்கிறான். ஆனால் காலம் கடந்த நிலையில் தான் செய்த வினைகள் வழி சென்று முகமதியனாகிறான்.

பத்மாவதி பட்டத்து அரசியாக இருந்தும் தன் அதிகாரத்தைப் பயன்படுத்தாமல் எல்லாவற்றையும் பொறுமையோடு சகித்துக் கொள்கிறாள். அதனால்தான் சேரநாட்டில் குழப்பம் தீர்கிறது. அவள் கணவன் ரவிவர்மனும் அவன் தவறை உணர்கிறான்.

யூதப்பெண்ணாக இருந்தும் சேரநாட்டு நன்மைகருதி, கருவுற்ற நிலையிலும் தன் தந்தையோடு இஸ்ரேலுக்குச் செல்கிறாள் யூஜியானா. இறுதியில் உரிமைக்காக இன்னொரு பெண் வந்த நிலையில் தன் குழந்தையோடு சேரநாடு வருகிறாள். உயிரையும் துறக்கிறாள். சலீமா என்னும் பெண் தன்னைச் சுற்றி இருப்பவர்களையும் சேரநாட்டையும் கொஞ்சமும் கவனத்தில் கொள்ளாமல், தன்நலம் மட்டுமே கருதிய சுயநலக்காரியாக இருக்கிறாள்.

பொதுவாக ஒருநாட்டில் குழப்பம் வந்தால் அதைப் பயன்படுத்தி நாட்டை அபகரிக்கவே மன்னர்கள் கருதுவார்கள். ஆனால் விக்கிரம சோழனும் அவன் மனைவி சோழமாதேவியும் சேரநாட்டுக் குழப்பத்தைப் பக்குவமாகத் தீர்த்து வைத்து, உடைந்த உறவுகளை இணைத்து அமைதியை உருவாக்குகின்றனர்.

இவ்வாறு பல்வேறு விதமான உறவுநிலைகள் இந்நாவலில் சுட்டப்படுகின்றன. இந்த உலகில் எதையும் யாரும் இன்னொருவனுக்குக் கொடுத்துவிட முடியும். ஆனால் நிம்மதியை மட்டும் மனிதன் தன்னிடமிருந்து தான் பெற்றுக் கொள்ள வேண்டும் என்னும் உண்மையைக் கண்ணதாசன் இந்நாவலில் சுட்டுகிறார். அத்துடன் இரண்டாம் சேரமான் பெருமான் மனித உறவுகளை மதித்தமையால் மண்ணில் வாழ்வாங்கு வாழ்ந்தவர் என்பதைக் கூறும் நிலையில் எந்தப் பந்தமுமில்லாதவர்களையே கதறி அழ வைக்கும் அற்புத மரணம் ஒருவருக்கு வாய்க்கிறதென்றால் அவர் வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்தவர் என்ற பொருள் என்னும் வாழ்வியல் உண்மையையும் கவிஞர் கண்ணதாசன் இந்நாவல் வழி எடுத்துரைக்கின்றார்.

## புதுக்கவிதையும் மனித உறவுகளும்

கல்வி அறிவு உடையவர்கள் மட்டுமே படித்துப் பொருள் புரிந்து நன்மை அடையும் வகையில் செவ்வியில் இலக்கியங்கள் வந்து கொண்டிருந்தபோது, தாம் எழுதும் கவிதை மக்களுக்காகவே, கொஞ்சம் எழுத்தறிவு உடையவர்களும் படித்துப் பொருள் புரிந்து நன்மை அடைய வேண்டும் என்ற நோக்கத்தில் கவிதையை எளிமைப்படுத்தினார் பாரதியார். கவிதை என்பது மக்களோடு உறவாட வேண்டும். கவிதை மூலம் மக்கள் உறவாட வேண்டும் என்ற நோக்கத்தில் கவிதையைப் புதுமைப்படுத்தினார் பாரதியார். அதுவே புதுக்கவிதையின் ஆரம்பமாகும்.

பாரதி முதல் கவிமணி, நாமக்கல்கவிஞர், பாரதிதாசன் போன்றோர் கவிதையை எளிமைப்படுத்தினார்கள். அதனால் பல அரிய கருத்துக்கள் மக்களிடம் சென்று சேர்ந்தன.

மேற்கூறிய பெருங் கவிஞர்கள் மறைவிற்குப்பின் சுத்தானந்த பாரதியார், மீ.ப. சோம சுந்தரம், பெரியசாமித்தூரன், கம்பதாசன், வாணிதாசன், சுரதா, கண்ணதாசன், பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம், கொத்தமங்கலம் சுப்பு, வேழவேந்தன், ஈரோடு தமிழன்பன், அப்துல் ரகுமான் முதலானோர் புதுக்கவிதையை வளர்த்தெடுத்தனர். இவர்கள் அனைவரும் மக்களிடமுள்ள ஏற்றத்தாழ்வுகளைச் சுட்டிக்காட்டி, அவர்களிடையே நல்லுறவுகள் வளர வழிசெய்தவர்கள். இன்னும் பல புதுக்கவிதை எழுதும் கவிஞர்கள் தோன்றிய வண்ணம் உள்ளனர். அவர்கள் எழுதிய கவிதைகள் சிலவற்றில் இடம் பெற்றுள்ள மனித உறவுகள் தொடர்பான செய்திகளை இனிக் காண்போம்.

'இரசிகமணி' கி. குமாரசாமி என்பவர் மனித உறவுகளின் செயல்களைக் கவிதை ஆக்குகிறார். இளம் வயதில், பெரியோர்கள் இராமாயணக் கதையைக் கூறியபோது பொறுமையாய்க் கேட்டுக் கொண்டார். உள்ளமும் உடலும் அவலட்சணமாய் உள்ளதைக் காட்டும் வகையில் சிவனாக இருந்தாலும் சீண்டிப்பார்த்து வம்புக்கு இழுக்கும் குணம் உடையவர்கள் அரக்கர்கள். அன்பு உள்ளம் கொண்டு அறமே செயலாக அடக்கமே உருவாக இருந்து பிறருக்குத் துன்பம் வந்தபோது துயர் துடைப்பவர்களே அமரர் என்பதைதான் புரிந்து கொண்டதாகக் கீழ்வரும் கவிதை வரிகளில் சுட்டுகின்றார்.

*அவலட்சணமே உருவமென்றார்*
*அடாத செயலே தொழிலென்றார்*
*சிவனே என்றிருந்தாலும்*
*சீண்டி வம்புக்கிழுத்திடுவார்*
*அவர்தாம் அரக்கரென்றார்*
*அன்பே அறம் என்றார்*
*அடக்கமே குணம் என்றார்*
*இன்னல் கண்ட போது*
*இமைப்பொழுதில் துயர்துடைப்பார்*
*அவர்தாம் அமரர் என்றார்!* (கி. குமாரசாமி கவிதை)

பொன்னும் பொருளும் இருப்பவரை மதிக்காமல் அறச்சிந்தனை உடைய சான்றோர்களை மதித்து அவர்வழி நடப்பது மனித உறவின் அடையாளம் என்பதைத் தமது முரசு கட்டிலில் படுத்துறங்கிய புலவர் மோசி கீரனுக்கு அரசனாகிய சேரன் கவரி வீசியதைக் கீழ்வரும் பாடலடிகள் சுட்டுகின்றன.

*சில்லென்ற காற்று மேனியிற் பட்டுச்*
*சிலிர்த்துடன் எழுந்த புலவன்*
*செவிலித் தாயெனச் சேரன் நின்றிடும்*
*சிறந்ததோர் கோலம் கண்டு*
*வீசாது வாளினை வெண்கவரி வீசிய*
*தமிழ்நேயப் பெருவேந்தனே !*
*மாசிலாத் தமிழ்போல மண்ணகம் உள்ளவரை*
*வாழ்கவென வாழ்த்திசைத்தான்*

(பூ.ம. புனிதவதி கவிதைகள்)

தமிழ் மாமறையாம் உலகப் பொதுமறை எனப் போற்றப்படும் திருக்குறளைப் படித்து அதன் வழி நடந்து மனித நேயத்தைச் செயலில் காட்டி மனித உறவுகொண்டு வாழ்வோம் என்பதைக் கீழ்வரும் கவிதை வரிகள் சுட்டுகின்றன.

*வள்ளுவன் என்னும் வைத்தியன் தந்த*
*மருந்தால் வாழ்ந்திடும் வையம்*
*உள்ளும் புறமும் தாக்கும் நோய்கள்*
*நீங்கி மானுடம் உய்யும்*
*அள்ளி வழங்கிய குறள்நெறி என்னும்*
*அற்புத மூலிகை பாரீர் !*
*பள்ளம் தள்ளும் நோய்கள் இல்லா*
*பாரினைப் படைப்போம் வாரீர் !*

(இ. சீனிவாசன் கவிதைகள்)

தாய், மகன் உறவு என்பது வார்த்தைகளால் எடுத்துரைக்க இயலாதது. தன் உயிரையும் உடலையும் மகனுக்காக வருத்திக் கொண்டு குழந்தையை வளர்ப்பவள் தாய். அப்படிப்பட்டவர்களை வயதான காலத்தில் பேணிப் பாதுகாக்காமல் முதியோர் இல்லங்களில் விடுகின்றனர் ஒருசிலர். அத்தகையோர் தன் தாயின் அன்பைப் புரிந்துகொண்டு, அவளுக்குப்

பணிவிடை செய்வது தமது கடமை என்பதை உணர்ந்து செயல்பட வேண்டும் என்பதையே கீழ்வரும் கவிதை வரிகள் உணர்த்துகின்றன.

*அம்மா*
*நான் உங்களிடம்*
*பெற்ற கடன் முழுவதையும்*
*அடைக்க முடியாவிட்டாலும்*
*அதற்கான வட்டியை*
*விரைவில்*
*அடைத்து விடுகிறேன்*
*பணத்தால் அல்ல*
*பணிவிடையால்* (மு. இரவிக்குமார் கவிதைகள்)

உறவுகளின் ஆரம்பம் நட்பில் தொடங்குகிறது. இறைவனிடம் கூட நட்புறவு கொள்வதைச் சுந்தரமூர்த்தி நாயனார் வழி அறிகிறோம். நட்பு என்பது புனிதமானது. அதுவே உறவுகளை வளரச் செய்வது. ஆபத்துக் காலத்தில் உதவாமல் போவதும், நோய்வாய்ப்பட்டபோது கவனியாமல் போவதும், வறுமை வந்த போது உதவாமல் போவதும், துன்பத்தில் உழன்ற போது ஆறுதல் கூற மறப்பதும், நட்பிற்கு உரியதல்ல. நட்பு என்பது கற்புப் போன்றது. நான்கு மறையைப் போன்றது. துன்பம் வந்தபோத ஆதரவுடன் பேசி ஆறுதல் கூறுவது. பிறரிடம் பகிர்ந்து கொள்ள முடியாத இரகசியங்களை நண்பர்களிடம் மட்டுமே பகிர்ந்து கொள்ள இயலும். மனைவிக்கு உன்னைத் தரலாம். ஆனால் நட்புக்காக உயிரையும் தரலாம் என்பதைக் கீழ்வரும் கவிதை வரிகள் சுட்டுகின்றன.

*உறவை வளப்படுத்த*
*உயிரைத் துக்கமாக்கு*
*உண்மையில் அது நட்பு*
*இன்பத்தை உனது*
*நண்பனுக்கும் பகிர்ந்து கொடு*
*துன்பத்தில் பங்கெடுத்துத்*
*தோளிரண்டைக் கொடு*
*ஒருமுறை போகும் உயிரை*
*உறவுக்குக் கொடு*
*அது - நட்பு* (அழ. ரஜினிகாந்த் கவிதைகள்)

இவ்வாறு இன்றைய புதுக்கவிதைகள் மனித உறவுகளைப் பற்றி உணர்த்துகின்றன. எளிய சொற்களால் இதயத்துள் பதியும் வகையில் வெளிவரும் இத்தகைய புதுக்கவிதைகள் நல்உறவுக்கு வழி அமைத்துக் கொடுக்கின்றன என்பதை அறியலாம்.

## பாரதியார் கவிதைகளில் மனித உறவுகள்

தமிழ் இலக்கிய வரலாற்றில் 'பாரதிக்கு முன்' 'பாரதிக்குப் பின்' என்று சுட்டும் வகையில் புதிய மாற்றத்தை இலக்கியத்தில் கொண்டு வந்தவர் பாரதியார். அதனால்தான் பாரதியார் ஒரு புரட்சிக்கவிஞர் என்று போற்றப்படுகிறார். இலக்கிய நடையை எளிமையாக்கி, நாவிற்கு இனிய சொல் வளத்தால் அன்றாட சமுதாயப் பிரச்சினைகளைப் பொருளாக்கி, தமது படைப்பில் புதுமையைச் செய்தவர் பாரதியார். அவருடைய படைப்புகள் பக்திப் பாடல்களாகவும், தேசபக்திப் பாடல்களாகவும் கற்பனைக் கவிதைகளாகவும், பொதுமைப் பாடல்களாகவும் பிறவுமாகவும் அமைந்துள்ளன. அனைத்திலும் நாட்டு விடுதலையையும் மக்கள் விடுதலையையும் சமுதாய மேம்பாட்டையும் உள்ளடக்கிப் பாடியுள்ளார். அவையாவும் மனித உறவுகளை மையப்படுத்தியதாகவே அமைந்துள்ளன.

மனித உறவுகள் உணர்வுப்பூர்வமானவை. அதாவது மனம் சார்ந்தவை. குடும்ப உறவுகளாக இருந்தாலும் சமுதாய உறவுகளாக இருந்தாலும் உணர்வை வெளிப்படுத்தும் அடிப்படையான மனம் கொண்டவை. அந்த உணர்வுகளில் அன்பு என்னும் உணர்வே மனித உறவுகளை வளரச் செய்யும். மலரச் செய்யும். அன்பை ஒரு கருவியாக எடுத்துக்கொண்டு எந்தச் செயலைச் செய்தாலும் அது செழிக்கும். நினைத்தது நடக்கும். எனவே அன்பே முதன்மையானது. அன்பு என்பது இரக்கத்தின் வெளிப்பாடு. எளிமையின் வெளிப்பாடு. பணிவின் வெளிப்பாடு. அனைத்துப் பண்பின் வெளிப்பாடு. அது உணர்வுப்பூர்வமானது. அந்த அன்பையே பாரதியார் பெருந்தவம் என்கிறார். காட்டில் சென்று கல்லிலும் முள்ளிலும் தவம் செய்வதைவிட வாழும் நாட்டில் இருக்கும் சக மனிதர்களிடம் அன்பு காட்டுதல் பெருந்தவமாகும். அதுதான் மனித உறவு அந்த அன்புதான் வாழ்வின் அடித்தளம் என்பதைக் கீழ்வரும் பாடலடிகளில் சுட்டுகின்றார்.

*செய்கதவம்! செய்கதவம்! நெஞ்சே! தவம் செய்தால்*
*எய்த விரும்பியதை யெய்தலாம் - வையகத்தில்*

*அன்பிற் சிறந்த தவமில்லை; அன்புடையார்*
*இன்புற்று வாழ்த லியல்பு* (பாரதியார் கவிதைகள் - 1)

இந்த உலகில் வாழும் மக்கள் அனைவரும் இறைவனின் படைப்புகள். இறை நம்பிக்கை அற்றவர்கள். இயற்கையின் படைப்புகள் என்கின்றனர். இறை நம்பிக்கை அல்லது இறை அச்சம் என்பது, இந்த உலகைப் படைத்த ஒரு சக்தி உண்டு. அதனை 'இறை' எனலாம். அந்த இறை உலகில் நடந்ததையும் நடப்பதையும், நடக்கப் போவதையும் நன்கு அறியும். அவரவர் செய்கின்ற செயல்களுக்குத் தக்க சன்மானத்தை நிச்சயம் வழங்கும் என்று எண்ணுகின்ற அச்ச உணர்வாகும். இந்த உணர்வுதான் இறை பக்தி என்பது. அந்தப் பக்தி உள்ளத்திலிருந்து வர வேண்டும். வெறும் போலி வேடங்களால் வருவதல்ல. உள்ளம் உணர்ந்த உண்மையான பக்தி ஒருவரிடத்தில் இருக்குமானால் நிச்சயமாகச் சக மனிதர்களை அவர்கள் பாரபட்சமின்றி மதிப்பார்கள். மனித உறவுகளை அன்பால் பிணைப்பார்கள். பிற நல்ல மனிதப் பண்புகளையும் வளர்ப்பார்கள். அவற்றைப் பாரதியார் கீழ்வரும் பாடலடிகளில் விளக்குகின்றார்.

*பக்தியினாலே - இந்தப்*
*பாரினிலெய்திடும் மேன்மைகள் கோடி!*
*சிந்தந் தெளியும் - இங்குச்*
*செய்கை யனைத்திலும் செம்மை பிறந்திடும்*
*கல்வி வளரும் - பல*
*காரியங்களையும், வீரிய மோங்கிடும்,*
*அல்ல லொழியும் - நல்ல*
*ஆண்மை யுண்டாகும், அறிவு தெளிந்திடும்*
*சொல்லுவதெல்லாம் - மறைச்*
*சொல்லினைப் போலப் பயனுளதாகும், மெய்*
*வல்லமை தோன்றும் - தெய்வ*
*வாழ்க்கையுற்றே யிங்கு வாழ்ந்திடலாம்*
*உண்மைப் பக்தியினாலே* (பாரதியார் கவிதைகள் - 2)

மனிதர்களுள் சிலர் உண்மையான உறவுகளை விரும்புவார்கள். மற்றும் சிலர் போலியான உறவுகளை நாடுவார்கள். தாங்களும் போலியாகப் பேசவும் பழகவும் செய்வார்கள். உள்ளத்துள் உண்மையின்றி இறை பக்தி உடையவர்கள் போன்று நடிப்பார்கள். இறைவன் எல்லாவற்றிலும் நிரம்பி உள்ளான் என்பதை மறந்து விடுவார்கள். சமய சந்தர்ப்பத்திற்கு ஏற்ப எளியோரை வெறுத்து வலியோரிடம் மட்டுமே பழகுவார்கள். ஆதாயம் தேடி

உறவுகளை வளர்த்துக் கொள்வார்கள். அத்தகையோர் எளியோரிலும் இறைவன் நிறைந்துள்ளான் என்பதை உணர்ந்து கொண்டால் உண்மையான உறவு நிலையை நாடுவார்கள் என்பதைத் தான் பாரதியார் கீழ்வரும் பாடலடிகளில் சுட்டுகின்றார்.

*எளியர் தம்மைக் காப்ப தென்னே ? கண்ண பெருமானே ! நீ*
*போற்றினோரைக் காப்ப தென்னே ? கண்ண பெருமானே ! - நீ*
*பொய்யர்தம்மை மாய்ப்பதென்னே ? கண்ண பெருமானே!*

(பாரதியார் பாடல் - 18)

சில மனிதர்களைக் காணும்போது மிடுக்காக உடையணிந்து இருப்பார்கள். பார்ப்பதற்குப் பக்திமான்களைப் போலவும், உண்மையே பேசுபவர்கள் போலவும் நன்மையே செய்பவர்கள் போலவும் காணப்படு வார்கள். ஆனால் உள்ளபடியே அவர்களுள் சிலர் போலிவேடதாரிகளாக இருப்பார்கள். ஒருசிலர் தோற்றத்திற்கு ஏற்றபடி நடப்பார்கள். போலி வேடதாரிகளை நம்பி அவர்களுடன் பழகுகின்றபோது துன்பம் வரும்போது உடன் இருக்காமல் பாதியிலேயே கைவிட்டுவிட்டுச் செல்வார்கள். இன்னும் சில வேடதாரிகள் உடனிருந்தே குழி பறிக்கும் துரோகிகளாகவும் மாறிவிடுவார்கள். இத்தகையோரின் உறவு அழிவையும் துன்பத்தையுமே கொடுக்கக் கூடியது. எனவே ஆளைப் பார்த்துப் பழகுதல் கூடாது என்பதையும் செயலால் அவர்களின் மனதைப் பார்த்துப் பழகுதல் வேண்டும் என்பதையும் உணர்த்தும் கீழ்வரும் பாடலடிகள் போலி வேடதாரிகளின் மனம் மாற என்னதான் வழியோ ! என்று ஆதங்கப்படும் எண்ணத்தையும் வெளிப்படுத்துகின்றன.

*துணிவெளுக்க மண்ணுண்டு - எங்கள் முத்து*
*மாரியம்மா, எங்கள் முத்து மாரீ !*
*தோல்வெளுக்கச் சாம்பலுண்டு - எங்கள் முத்து*
*மாரியம்மா எங்கள் முத்து மாரீ !*
*மணிவெளுக்கச் சாணையுண்டு - எங்கள் முத்து*
*மாரியம்மா - எங்கள் முத்து மாரீ !*
*மனம்வெளுக்க வழியில்லை - எங்கள் முத்து*
*மாரியம்மா எங்கள் முத்து மாரீ !* (பாரதியார் கவிதைகள் - 41)

இன்றைய காலக்கட்டத்தில் சக மனிதர்களுடன் உறவு கொள்பவர்கள் குறைந்துவிட்டனர். பிறரிடம் பேசுவதற்குக்கூடக் காசு பணம் தர வேண்டும்

என்பது போல முகத்தைத் திருப்பிக் கொண்டு செல்பவர் பெருகிவிட்டனர். ஆனால் நம்மைச் சுற்றியுள்ள பறவைகளும் கடலும் மலையும் கூட நம்முடைய உறவுகளே என்ற உணர்வைப் பெறுவது நலமானது. அதுவே மனிதத் தன்மையாகும்.

*காக்கை, குருவி யெங்கள் ஜாதி - நீள்*
*கடலு மலையுமெங்கள் கூட்டம்*
*நோக்குந் திசையெல்லாம் நாமன்றி வேறில்லை*
*நோக்க நோக்கக் களி யாட்டம்*

(பாரதியார் பாடல்கள், வேதாந்தப்பாடல்கள் - 7)

நல்லோர் பலர் வாழும் நாட்டில் அல்லோரும் வாழத்தான் செய்கிறார்கள். எதற்கெடுத்தாலும் போட்டி, பொறாமை கொண்டு மற்றவர்களை அழித்தேனும் நாம் வாழ்ந்துவிட மாட்டோமா ! என்று செயல்படும் மக்கள் பெருகிவிட்டனர்.

மக்கள் அனைவரையும் தங்கள் உறவுகளாக நினைப்பது இல்லை. நம்மைப்போலப் பிறரும் வாழ வேண்டும் என்று நினைப்பதும் இல்லை. அத்தகையோருக்கு ஒற்றுமையை உணர்த்தி மக்கள் உறவின் மகிமையைப் பாரதியார் வெளிப்படுத்துகின்றார். அந்த ஒற்றுமை உணர்வுதான் மனித உறவுகளை வளர்க்கக் கூடும் என்பதையும் கீழ்வரும் பாடலடிகளில் உணர்த்துகின்றார்.

*ஒன்றுபட்டாலுண்டு வாழ்வே - நம்மில்*
*ஒற்றுமை நீங்கி லனைவர்க்கும் தாழ்வே*
*நன்றிது தேர்ந்திடல் வேண்டும் - இந்த*
*ஞானம் வந்தாற்பின் நமக்கெது வேண்டும்*

(பாரதியார் கவிதைகள், தேசபக்திப் பாடல்கள் - 1)

ஓர் இடத்தில் வாழும் மக்களும் ஒரு வீட்டில் வாழும் மக்களும் ஓர் ஊரில் வாழும் மக்களும் ஒரு நாட்டில் வாழும் மக்களும் உறவுநிலையில் மேம்பட்டுத் திகழ்வது முதல் நிலை மனித உறவுகளாகும். அதையும் கடந்து பக்கத்து நாட்டினருடன் நல்லுறவு கொள்வது என்பது பரந்துபட்ட, பண்பட்ட மனித உறவை வெளிப்படுத்துவதாகும். இந்த உறவுநிலையை வலியுறுத்தவே பாரதியார் பாரததேசம் என்ற பாடலில் சுட்டுகின்றார். அதில் குறிப்பாக அண்டை நாடுகளுடன் உறவு கொள்ளுதலைக் கீழ்வரும் பாடலடிகளில் குறிப்பிடுகின்றார்.

*சிங்களத்தீவினுக்கோர் பாலமமைப்போம்*
*சேதுவை மேடுறுத்தி வீதி சமைப்போம்*

*வங்கத்தி லோடிவரும் நீரின் மிகையால்*
*மையத்து நாடுகளிற் பயிர் செய்குவோம்*
(பாரதியார் பாடல்கள்: தேசபக்திப் பாடல்கள் - 4)

மனித உறவுகள் என்பது வெறும் பேச்சிற்காக வாய் வார்த்தையில் சொல்வதன்று. இன்பமான சூழல்களில் பங்கு பெறவில்லை என்றாலும் துன்பமான சூழல்களில் ஒருவருக்கொருவர் செயலாலும் சொல்லாலும் பங்கு பெறுவதே மனித உறவாகும். அதனால் ஒருவரை வீழ்த்தி மற்றொருவர் வாழ்வது என்பது மனிதத் தன்மையாகாது. அதேபோன்று ஒருவர் துன்பத்தில் இருக்க மற்றவர் வேடிக்கை பார்ப்பது, மனிதத் தன்மையாகாது. அச்செயல் மனித உறவும் ஆகாது.

*மனித ருணவை மனிதர் பறிக்கும்*
*வழக்க மினியுண்டோ !*
*மனிதர் நோக மனிதர் பார்க்கும்*
*வாழ்க்கை யினியுண்டோ ? புவியினில்*
*வாழ்க்கை யினியுண்டோ ?*
(பாரதியார் பாடல்கள்: தேசபக்திப் பாடல்கள் - 17)

இந்த உலகில் பிறந்த மனிதர்கள் யாராக இருந்தாலும் அனைவரும் எல்லா நலன்களும் பெற்று மகிழ்ந்து வாழவேண்டும் என்று நினைக்கும் நினைவுகூட மனித உறவை இனம் காட்டும். ஒருவரையொருவர் இழிவுபடுத்திக் கொள்வதும் மதிக்கத் தவறுவதும் நல்லியல்பாகாது. அனைவரும் கல்வியும் செல்வமும் பெற்று மனம் மகிழ்ந்து ஒன்று கூடி ஒருவருக்கொருவர் நல்லுறவு கொண்டு வாழ்வதே சிறந்த வாழ்வாகும். மனிதப் பண்பாகும் என்பதைக் கீழ்வரும் பாடலடிகளில் பாரதியார் குறிப்பிடுகின்றார்.

*இழிவு கொண்ட மனிதரென்ப*
*திந்தியாவில் இல்லையே*
*வாழி கல்வி செல்வ மெய்தி*
*மனமகிழ்ந்து கூடியே*
*மனிதர் யாரு மொருநிகர்ச*
*மானமாக வாழ்வமே* (தேசபக்திப் பாடல்கள் - 30)

எதுஒன்றாக இருந்தாலும் சொல்வதோடு நிறுத்திக் கொள்ளாமல் செயலில் காட்ட வேண்டும். ஒருசிலர் வாய்ச்சொல்லில் வேகமாகப் பேசி

விட்டு, அதற்கு நேர்மாறாகச் செயல் செய்வார்கள். அப்படிப்பட்டவர்களைக் கண்டு மனம் வருந்திப் பாரதியார் பாடுகின்றார். ஊரையும் நாட்டையும் காப்பதாகக் கூட்டத்தில் கூறுவோர் தமது உறவினர் படும் துன்பத்தைக் கூடப் பார்த்தும் பார்க்காமல் போய்விடுவார்கள். அத்தகைய நிலை மோசமானது என்பதைக் கீழ்வரும் பாடலடிகளில் உணர்த்துகின்றார்.

*நெஞ்சிலுரமுமின்றி*
*நேர்மைத் திறமுமின்றி*
*வஞ்சனை சொல்வாரடீ - கிளியே*
*வாய்ச் சொல்லில் வீரரடீ*
*கூட்டத்திற் கூடி நின்று*
*கூவிப் பிதற்ற லன்றி*
*நாட்டத்திற் கொள்ளாரடீ - கிளியே*
*நாளில் மறப்பாரடீ*
*சொந்தச் சகோதரர்கள்*
*துன்பத்திற் சாதல் கண்டும்*
*சிந்தை யிரங்காரடீ - கிளியே*
*செம்மை மறந்தாரடீ*

(பாரதியார் கவிதைகள்: தேசிய இயக்கப் பாடல்கள் - 40)

மனித வளத்தைப் பெரிதாக நினைக்கும் வெறும் சக மனிதர்களை மதிப்பார்கள். சாதி மதப் பேதங்களைப் பெரிதாக நினைப்பார்கள். வாழும் சூழலுக்கும் செய்யும் தொழிலுக்கும் ஏற்பச் சமுதாயத்தில் சாதி என்னும் பிரிவுகள் கட்டப்படுகின்றன. அதேபோன்று இறைவனை உணர்தல் என்னும் அடிப்படையில் மதங்கள் கட்டப்படுகின்றன. எனவே அத்தகைய பிரிவுகளை மையப்படுத்தி மனித உறவுகளைச் சிதைத்துக் கொள்ளாமல் வளர்த்துக் கொள்ளுதல் வேண்டும் என்பதையே பாரதியார் சுட்டுகின்றார்.

*தெய்வம் பலபல சொல்லிப் பகைத்*
*தீயை வளர்ப்பவர் மூடர்*
*உய்வ தனைத்திலு மொன்றாய் - எங்கும்*
*ஓர் பொருளானது தெய்வம்!*

(பாரதியார் கவிதைகள்: முரசு - 4)

இப்பாடல் வரிகளில் பிரிவினையைக் கடந்து மனித உறவுகள் மலர வேண்டும் என்பதையே குறிப்பிடுகின்றார். பாரதியாரின் கவிதைகள் பலவும் மனித ஒற்றுமை வடிவில் மனித உறவுகளை வலியுறுத்துவதாகவே அமைந்துள்ளன.

## 11. நாட்டுப்புற இலக்கியங்களில் மனித உறவுகள்

இந்த உலகத்தில் வாழ்கின்ற இயற்கையின் மக்களான மானிடர்களின் வாழ்க்கையானது பிறப்பு முதல் இறப்பு வரை ஏதோ ஒரு விதத்தில் ஒன்றிக் காணப்படுகிறது என்றாலும் மக்கள் வாழ்கின்ற சூழலுக்கும் கிடைக்கப் பெறுகிற தன்மைகளுக்கும் வசதிகளுக்கும் ஏற்ப அவர்களது வாழ்க்கை முறை மாற்றமுள்ளதாகக் காணப்படுகிறது. உணவும், உடையும், உறையுளும் ஒன்று என்றாலும், இந்த அடிப்படைத் தேவைகள்கூட அவரவர் வாழும் நிலைக்கேற்ப வேறுபட்டு விளங்குகின்றன. பேசும் மொழியும், பழக்கவழக்கங்களும், வாழ்வியல் முறைகளும் மாற்றமுள்ளதாக காணப்படுகின்றன. எது எப்படியாக இருந்தாலும் மனித உறவுகள் மாறுவதில்லை. ஒரு மனிதர் மற்றொரு மனிதருடன் தொடர்பு கொண்டு தான் வாழ முடியும். அது தான் வாழ்க்கை. அவைதாம் மனித உறவுகள். இந்த மனித உறவுகளின் நெளிவு சுழிவுகளையும் நிதானித்துச் செய்ய வேண்டிய செயல்களையும் போற்ற வேண்டிய பண்புகளையும் தமிழ் இலக்கியங்கள் பல்வேறு நிலைகளில் உணர்த்துகின்றன. அந்த வகையில் நாட்டுப்புற இலக்கியங்கள் சுட்டும் மனித உறவுகள் குறித்த செய்திகளை இனி நோக்குவோம்.

பெரும்பாலும் நாட்டுப்புற இலக்கியங்கள் ஊரகப் பகுதிகளில் வழங்கப்படுகின்றன. ஒரு குடும்பத்திலுள்ள அங்கத்தினரிடையே ஏற்படும் உறவுகளைக் குடும்ப உறவுகள் எனலாம். ஒரு குடும்பத்தைவிட்டு அக்கம் பக்கத்தாருடன் கொள்ளும் உறவுகளைக் குடும்பத்திற்கு வெளியே உள்ள உறவுமுறைகள் எனலாம். ஒரு குடும்பத்தினர் அவர்கள் வாழும் ஊரார் அனைவரிடமும் பழகும் முறையைக் குடும்பமும் ஊராரும் கொள்ளும் உறவுமுறை எனலாம். ஓர் ஊரிலுள்ளவர்கள் மற்றொரு ஊரிலுள்ள தெரிந்தவர்களிடம் கொள்ளும் உறவும் தெரிந்தவர் தெரியாதவரோடு கொள்ளும் உறவும் ஆகிய நிலைகளில் ஊரக மக்களின் உறவுமுறைகள் அமைகின்றன. அந்த உறவுமுறைகளை நாட்டுப்புற இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன.

சிற்றூர் மற்றும் சிற்றூரைச் சூழ்ந்த இடத்து மக்களிடையே மலர்ந்து மணம் பரப்பும் பாடல்கள், கதைகள், பழமொழிகள், விடுகதைகள், கதைப் பாடல்கள் போன்றவைகளை நாட்டுப்புற இலக்கியம் எனக் கூறலாம்.

குழந்தைப்பேறு என்பது இயற்கையில் இறைவனால் தரப்படுவது. குழந்தை பெறாதவர்களை மற்றவர்கள் குற்றம் கூறி இழிவாகப் பேசுவது தவறானது. அது நல்ல உறவிற்கு அடையாளமல்ல. பிள்ளைகளைப் பெறாதவர் மனதைப் புண்படுத்துவது மனிதப் பண்பல்ல என்பதைக் கீழ்வரும் பாடலடிகள் சுட்டுகின்றன.

*வரடி வரடியின்னு*
*வையத்தார் ஏசுராங்கோ*
*வரடிக்கு வரங் கொடம்மா*
*வனத்திலுள்ள தேவதிங்க*
*பொன்னுரைச்சு பொட்டுமிட்டு*
*பொழுதிறங்க மாலையிட்டு*
*மாலை கனக்குதம்மா*
*மாரெல்லாம் நோவுதம்மா !*

பொதுவாகத் தொழிலாளர்களை வேலை வாங்கும்போது கடுமையாக நடந்து கொள்வதும், வேலைக்கேற்ற கூலி தராமல் அலைக்கழிப்பதும் பரவலாகப் பேசப்படும் செய்திகள். ஆனால் தம்மிடம் வேலை செய்பவர்களோடு நல்லுறவுகள் கொள்ள விரும்பும் பண்ணையார் களும் உண்டு. அவர்கள் உழைப்பாளிகளிடம் நல்லுறவுகளுடன் பழகினார்கள் என்பதைக் கீழ்வரும் பாடலடிகள் சுட்டுகின்றன.

*காசா படியளந்தால் - கனத்த*
*நேரம் ஆகுமிண்ணு*
*நெல்லாப் படியளந்தால்*
*நீண்ட நேரம் செல்லுமிண்ணு*
*அரிசியாப் படியளந்தால்*
*ஆக்க நேரம் ஆகுமிண்ணு*
*சோறாப் படியளக்கும் - எங்களையா*
*சுவாமியார் பண்ணையார்*

பாடல்களைப் போன்றே கதைகளும் மனித உறவுகளைச் சுட்டுகின்றன. மாற்றாந்தாய் ஒருத்தி மூத்த தாரத்துப் பெண்ணைத் துன்புறுத்தி வேலை

வாங்குவதும் தான் பெற்ற பெண்ணைச் சொகுசாக வளர்ப்பதும் கூடாது என்பதை 'மாற்றாந்தாய்' என்னும் ஒரு நாட்டுப்புறக் கதை சுட்டுகின்றது. அதாவது 'திக்கற்றவருக்குத் தெய்வமே துணை' என்னும் தொடருக்கேற்ப மாற்றாந்தாயால் துன்புறுத்தப்பட்ட பெண் வாழ்வில் உயர்வதால் இறுதியில் மாற்றாந்தாய் திருந்துவதுபோல அந்தக் கதை கூறப்படுகிறது. இவ்வாறு கதைகள் வழியாக மனித உறவுகளின் முக்கியத்துவத்தை மக்கள் வெளிப்படுத்துகின்றனர்.

பொழுதுபோக்கிற்காகவும் வேலை செய்யும்போது சுமை தெரியாமல் இருப்பதற்காகவும் விடுகதைகள் போடப்படுகின்றன. அவையும் மனித உறவுகளைச் சுட்டுவதாக அமைந்துள்ளன.

*கருப்பாக இருப்பான் கண்ணனல்ல*
*சிரிச்சி கழுத்தறுப்பான் சீனிவாசனல்ல*
*நண்பனைப் போலிருந்து*
*நாரதர் வேலை செய்வான் ?*
*அவன் யார் ?*

புதிர் தன்மையோடு பேசிக்கொள்ளும் விடுபுதிர்களின் விடை பெரிதாக இருக்கும். மேற்கண்ட விடுபுதிர் இரண்டு பேர் சேர்ந்து பேசும்போது மூன்றாமவருக்குத் தெரியாமல் பேசும் பேச்சாக உள்ளது. சாலையில் இருவர் பேசிக் கொண்டு செல்கின்றனர்.

"ஊர்ல கருப்பனோட தொல்ல வரவர அதிகமா போச்சு"

"யாரு ! கண்ணனைச் சொல்றியா"

"இல்ல, சிரிச்சி சிரிச்சிக் கழுத்தறுப்பான..."

"யாரு ! சீனிவாசனா !"

"அட அவன இல்லப்பா ! நண்பனைப் போல இருந்து நாரதர் போல செய்வான ! அவனச் சொல்றேன்"

"என்னப்பா ? புதிர் போடற ?"

கொஞ்ச நேரம் கழித்துச் சொல்கிறான்

"ஓ ! அவனச் சொல்றியா ! இப்பத்தான் புரியுது"

இது புதிர்ப் பேச்சு. இதில் ஓர் உண்மை உணர்த்தப்படுகிறது. மனிதர்களுள் சிலர் முகத்திற்கு நேராகச் சிரித்துச் சிரித்துப் பேசுவார்கள். ஆனால் முகத்திற்கு மறைவில் வஞ்சகச் செயல்களைச் செய்து பெரும் துன்பத்தைத் தரும் துரோகிகளாக இருப்பார்கள். இத்தகையோருடன் பழகும்போது கவனமாக இருத்தல் வேண்டும். அத்தகைய துரோகிகள் தாங்கள் செய்வது பெரும் பாவச்செயல் என்பதை உணர வேண்டும். காரணம் நேரிடையாகத் துன்பத்தைத் தரும் பகைவர்களைவிடச் சிரித்துப் பேசிவிட்டுக் கழுத்தறுக்கும் துரோகிகள் கொடியவர்கள் என்பதைத்தான் மேற்கண்ட விடுபுதிர் சுட்டுகின்றது.

நாட்டுப்புற இலக்கியங்களுள் அதிகமாக மக்களின் வாழ்வில் ஒன்றியவை பழமொழிகள். துன்பமாக இருக்கிறபோதும், மகிழ்ச்சியாக இருக்கிற போதும், கோபமாக இருக்கிற போதும், பொறுமையாக இருக்கிற போதும், ஒருவரைத் திருத்த நினைக்கிற போதும் மக்கள் வாழ்வின் எல்லாச் சூழல்களிலும் பழமொழிகள் கூறுவது வழக்கம். அவையும் மனித உறவுகளையே வெளிப்படுத்துகின்றன.

ஒருவர் துன்பத்திலே இருக்கிறபோது அதைப் பயன்படுத்தித் தாம் பயனடைய நினைக்கின்ற மக்கள் பலர் உள்ளனர். அவ்வாறு செய்யாமல் ஒருவர் துன்பத்திலிருக்கும் போது ஆறுதலாக இருக்க வேண்டும். அதுவே மனித உறவிற்கு அழகு என்பதைக் கீழ்வரும் பழமொழி சுட்டுகின்றது.

*எரியிற வீட்டுல எடுத்தது லாபம்*

ஒரு குடும்பத்திலோ, ஓர் ஊரிலோ, ஒரு நாட்டிலோ உள்ளவர் களுக்குள் கருத்து முரண்பாடுகள் வருகிறபோது பக்கத்துக் குடும்பத்தாரோ, பக்கத்து ஊரினரோ, பக்கத்து நாட்டினரோ அவர்களின் கருத்து முரண்பாட்டைச் சரிசெய்து சமாதானம் செய்து வைக்க நினைக்க வேண்டும். அதைவிட்டு விட்டு உள்ளே புகுந்து இருக்கும் பிரச்சினையைப் பெரிதாக்க நினைக்கக் கூடாது. அந்தப் பண்பை விட்டுவிட வேண்டும் என்பதைக் கீழ்வரும் பழமொழி சுட்டுகிறது.

*ஊரு ரெண்டு பட்டா*
*கூத்தாடிக்குக் கொண்டாட்டம்*

ஊரோடு ஒத்து வாழ்ந்தால்தான் வாழ்க்கை இனிக்கும். பகைமை கொண்டு வாழ்தல் மனித வாழ்வல்ல என்பதைக் கீழ்வரும் பழமொழி சுட்டுகிறது.

*தனிமரம் தோப்பாகாது*

மக்களிடையே பரவலாக உள்ள ஒரு தீயபண்பு புறம் பேசுதல். மற்றவர்களிடம் உள்ள குறைகளையே பெரிதாக நினைத்துச் சிலர் இழிவாகப் பேசுவார்கள். ஒவ்வொருவரிடமும் குறையுண்டு. ஒவ்வொருவரிடமும் நிறையுண்டு. அதைப்போன்று ஒவ்வொரு குடும்பத்திலும் நிறையும் குறையும் நிச்சயம் இருக்கும். அவற்றை உணர்ந்து அடுத்தவர்களையும் அடுத்த குடும்பத்தையும் பற்றி இழிவாகப் பேசாமல் இருத்தல் வேண்டும் என்பதையே கீழ்வரும் பழமொழி சுட்டுகிறது.

*வீட்டுக்கு வீடு வாசப்படி*

நாட்டுப்புற இலக்கியங்கள் மக்களின் அன்றாட வாழ்வோடு நெருங்கிய தொடர்புடையவை. எந்த ஒரு கருத்தையும் நேரடியாகச் சொல்லாமல் மறைமுகமாக இலக்கியங்களின் வழி உணர்த்தும் நிலையில் நாட்டுப்புற இலக்கியங்கள் அமைந்துள்ளன.

# 12. சமய இலக்கியங்களில் மனித உறவுகள்

பண்டைக்காலம் முதல் தமிழ்நாடு வளம் நிறைந்து இருந்ததால் அயல் நாட்டினர் தமிழகம் வந்தனர். வாணிபத்தின் பொருட்டு வந்தாலும் தமிழ்மொழியைக் கற்று, தமிழர் பண்பாட்டைப் பின்பற்றித் தமது மதமாகிய கிறித்தவத்தையும் அதன் கொள்கைகளையும் மக்களிடையே பரப்பினார்கள். அவர்களின் செயல்கள் யாவும் மனித உறவை வெளிப்படுத்துவதாக அமைந்திருந்தன. தமிழைக் கற்றதோடு அதில் பல இலக்கிய இலக்கணங்களையும் படைத்தார்கள். மேலை நாட்டினர் இவ்வாறு செய்த பிறகு அவர்களின் தொண்டிலும் கொள்கையிலும் தமது மனதைப் பறிகொடுத்த தமிழர்கள் பலர் கிறித்தவ மதம் மாறினர். அதன் விளைவாகப் பல இலக்கிய இலக்கண நூல்களைப் படைத்தார்கள். இவ்விரண்டு நிலைகளில் கிறித்தவ இலக்கியங்கள் தமிழில் தோன்றின.

இந்த வகையில் மிகவும் குறிப்பிடத் தகுந்தவர்கள் வீரமாமுனிவரும் எச். ஏ. கிருட்டிணப் பிள்ளையுமாவர். அவர்கள் எழுதிய இலக்கியங்கள் முறையே தேம்பாவணியும் இரட்சண்ய யாத்ரிகமும் ஆகும். அவற்றின் வழி மனித உறவுகளை இனிக் காண்போம்.

## வீரமாமுனிவர் படைப்பும் மனித உறவுகளும்

இத்தாலி நாட்டிலிருந்து கான்ஸ்டான்டியன் ஜோசப் பெஸ்கி என்னும் இயற்பெயரோடு தமிழகம் வந்த வீரமாமுனிவர் தமது நடை உடையைத் தமிழர்போல் மாற்றிக் கொண்டு வீரமாமுனிவரானார். அதன் பிறகுத் தமிழைக் கற்றுத்தேர்ந்து அதில் பல இலக்கண, இலக்கிய, உரைநடை, அகராதி முதலான பணிகளைச் செய்து தமிழ் எழுத்துகளில் சீரமைப்புப் பணியையும் செய்தார்.

வீரமாமுனிவர் எழுதிய தேம்பாவணி ஒரு கிறித்தவக் காப்பியமாகும். பல அறிஞர்கள் தேம்பாவணியைத் தமிழ் இலக்கிய மாலைகளில் ஒரு வாடாத கற்பக மாலையாகப் போற்றுகின்றனர். அதற்குக் காரணம் தேம்பாவணி காப்பியம் சுட்டுகின்ற மனித உறவுகளின் மகிமையே எனலாம். இயேசு கிறித்துவின் தந்தையாகிய சூசையப்பர், தாய் மரியன்னையின் வாழ்க்கை வரலாற்றை எடுத்துரைக்கும் இக்காப்பியம் மனித நேய மனித உறவுகளை எடுத்துக் காட்டுகிறது.

இளவயதில் அழகிய தோற்றப் பொலிவு உடையவராகத் திகழ்ந்தார் சூசையப்பர். உடல் அழகால் இந்த உலகில் பல பாவங்கள் நிகழ்வதால், இல்வாழ்க்கையை வெறுத்துத் துறவு வாழ்க்கை மேற்கொள்ளக் கானகம் செல்கிறார். அங்கே ஒரு மரத்தடியில் அமர்ந்திருக்கிறார். அப்போது இறைவன் ஒரு முதியவர் வேடத்தில் தோன்றி, வாழ்வைக் கண்டு பயந்து துறவு கொள்ளுதல் சிறந்ததல்ல. இல்வாழ்வில் இருந்து ஐம்புலன்களையும் வென்று பாவத்தில் விழாமல் வாழ வேண்டும். அத்துடன் தான் உழைத்து ஈட்டியப் பொருளைப் பிறருக்கும் கொடுத்து மகிழ்ந்து வாழ்வதே சிறந்த வாழ்க்கை என அருள் வழங்கி மறைகிறார். அதன் பிறகு சூசையப்பர் இல்வாழ்வில் வாழ நினைக்கிறார். அதன்படி மரியாளை மணம் செய்யப் பேசி முடிக்கின்றனர். இதற்கிடையில் தேவ தூதனால் இறைவனின் திட்டம் மரியாளுக்கு அருளப்பட்டு இறை மைந்தன் கருவாகிறார். இதனை அறிந்த சூசையப்பர் உலகத் தன்மையில் மரியாளை மணக்க விரும்பவில்லை. இருப்பினும் அவளைக் காட்டிக் கொடுத்து இழிவுபடுத்தவும் அவர் மனம் உடன்படவில்லை. இந்தக் குழப்பத்தில் இருக்கும்போது தான் இறைதூதர் அவர் முன் தோன்றி மரியாள் இறை மகனைக் கருத்தாங்கி உள்ளதை உரைக்கின்றார். அதன் பிறகு மரியாளைப் பாதுகாப்பதோடு அவள் பெற்ற இயேசுவை அன்பு மகனாக வளர்க்கின்றார்.

இயேசுவின் இளமைக்கால நிகழ்வுகளையும் சூசையப்பர் மரியம்மையின் செயல்களையும் வீரமாமுனிவர் தேம்பாவணியில் விளக்குகின்றார். இவ்வுலகைப் படைத்த பரம்பொருளான கடவுள் மனிதர் யாவரும் ஆன்ம நலம் பெறுமாறு மனிதனாகப் பிறந்த குழந்தை நாதனான இயேசு தனது வயதால் உடலோடும், மிக்க அருளிலும் வளர்ந்து வந்த தன்மை, என் போன்றோர் கருதிச் செய்யுளில் எடுத்துரைக்கும் தன்மையுடையதன்று என்று வீரமாமுனிவர் எடுத்துரைக்கின்றார்.

பன்னிரு வயது வரை தனது பிறப்பின் காரணத்தை வெளிப்படுத்தாத இயேசு பன்னிரு வயது வந்தவுடன் எருசலேம் நகரில், தெளிந்த ஒளி நிறைந்த அழகிய மணிகள் பதித்த கோவிலுக்குள் சென்று இறைவனுடைய செய்தியைக் கூறுகின்றார். கோவில் நிகழ்ச்சியின்போது கூட்டத்தில் காணாமல் போன தமது மகன் இயேசுவைத் தேடிச் சூசையும், மரியும் அலைகின்றனர். பெற்றோர் மகன் உறவின் ஆழத்தை வீரமாமுனிவர் படம்பிடித்துக் காட்டுகின்றார்.

இருவரும் இருவேறு திசையில் தேடி அலைந்து புலம்புகின்றனர். வழியில் ஒரு பெண்மணி இயேசுவைக் கண்டதாகக் கூறுகின்றாள். தானும் பிள்ளையைப் பெற்றவள் என்பதை அவள் விளக்கிக்கூறி மரியின் மகன்

உறவு அன்பின் உணர்விற்கு ஆறுதல் தருகின்றாள். அதன்பிறகு பிரிந்த மகனைக் கண்டு ஆரத்தழுவித் தமது அன்பை வார்த்தையாலும் சொல்லாலும் வெளிப்படுத்தி மகிழ்ந்தனர் சூசையும் மரியாளும். விட்டுப் பிரிந்த இடைவெளிக்குத் தக்கவாறு இறுகி, அன்பும் இன்பமும் மிகுதியாகக் கொண்ட அம்மூவரும், ஒன்றோடொன்று பொருளால் இடையே கட்டுண்ட காப்பியப் பாடல்கள் போலவும் தேனைக் கொண்டு மணம் வீசும் மலர் மாலையின் இணைப்பைப் போலவும் இணைந்து நெடுந்தொலைவில் அமைந்த தம் பழைய நகராகிய நாசரேத்தை நாடிச் சென்றனர் என்று வீரமாமுனிவர் சுட்டுகின்றார்.

இல்லறத்தை விட்டுத் துறவறம் மேற்கொள்வதை இயேசு போதிக்கவில்லை. மாறாக உலக வாழ்க்கையில் இருந்து பற்றுகளை விட்டு, உறவுகளை மதித்துப் பகை நீங்கி வாழ்வதையே போதித்தார். அவர் வாழ்வின் அடிப்படை அன்பு என்பதை எடுத்துரைத்தார். உறவுகளுக்கு அது அவசியம் என்பதை எடுத்துரைத்தார். அன்பு பொறுமை உள்ளது. நன்மை செய்யும். தீமை செய்யாது. அன்பு தற்புகழ்ச்சிக் கொள்ளாது. இறுமாப்பு அடையாது. அன்பு இழிவானதைச் செய்யாது. பொறாமைப்படாது. அன்பு அனைத்தையும் பொறுத்துக் கொள்ளும். அனைத்தையும் நம்பும். அனைத்தையும் எதிர்நோக்கி இருக்கும். அனைத்திலும் மன உறுதியாய் இருக்கும்என்று அன்பின் பலவிதமான பரிமாணங்களை எடுத்துரைக்கின்றார்.

இப்படியான அன்புறவுகொண்ட வாழ்க்கையில் பகைமை நீங்கிச் சமாதானத்துடன் வாழ வழிகூறினார். ‘உங்கள் பகைவரிடம் அன்பு கூறுங்கள்; உங்களை வெறுப்போருக்கு நன்மை செய்யுங்கள்; உங்களைச் சபிப்போருக்கு ஆசி கூறுங்கள்; உங்களை இழிவாகப் பேசுவோருக்காக இறைவனிடம் வேண்டுங்கள்’ என்று அன்பை அடிப்படையாகக் கொண்ட வாழ்க்கைக்கு வழி கூறினார். மக்களுக்குப் போதித்ததோடு அவர் நிற்கவில்லை. தாமும் அவ்வாறே வாழ்ந்து காட்டினார். தன்னை இழிவுபடுத்தியவருக்கும் நன்மையே செய்தார்.

## எச்.ஏ. கிருட்டிணப் பிள்ளையின் படைப்பும் மனித உறவுகளும்

தமிழ்நாடு கிறித்துவராகிய எச்.ஏ. கிருட்டிணப்பிள்ளை ஜான்பனியன் என்பவர் எழுதிய துறக்கப்பயணம் என்னும் நூலைத் தமிழில் ‘இரட்சணிய யாத்திரிகம்’ என்னும் பெயரில் காப்பியமாக்கினார். இவரைக் கிறித்தவக் கம்பர் என்று போற்றுமளவிற்கு இவரது நூல் அமைந்திருந்தது.

இரக்கத்தை அடிப்படையாகக் கொண்ட கருணையைச் சொல்லிலும் செயலிலும் காட்டிய இயேசுவின் சிலுவைப் பயணத்தை இரட்சண்ய யாத்திரிகம் எடுத்துரைக்கின்றது.

*தன்னரிய திருமேனி சதைப்புண்டு தவிப்பெய்திப்*
*பன்னரிய பலபாடு படும்போதும் பரிந்து எந்தாய்*
*இன்னதெனா அறிகிலார் தாம் செய்வது இவர் பிழையை*
*மன்னியும் என்றருட் கனிவாய் மலர்ந்தார் நம் அருள்வள்ளல்*
(இரட்சண்ய யாத்திரிகம்)

என்ற பாடலில் இயேசுவின் கருணையை ஆசிரியர் விளக்குகின்றார். சிலுவையைச் சுமந்து படாதபாடுபட்டுச் சிலுவையில் அறைந்த பிறகும் கள்ளன் கூறிய இழிவார்த்தைகளுக்கு இரங்கு, இறைவா ! இவர் செய்வதை இன்னது என்று உணராமல் செய்கிறார். அவரை மன்னியும் என்று கூறி மனிதநேயத்திற்கே மகுடம் சூட்டுகின்றார்.

கிறித்தவச் சமயக் கருத்துகளை மையப்படுத்திய சூசையின் வரலாறும் இயேசுவின் வரலாறும் கூறுகின்ற தேம்பாவணியும் இரட்சண்ய யாத்திரிகமும் மனித நேயமே மனித நேயத்திற்கு அடிப்படை என்பதை எடுத்துரைக்கும் வாழ்வியல் வேதங்களாக விளங்குகின்றன.

## இசுலாமிய இலக்கியங்களில் மனித உறவுகள்

சங்க காலந்தொட்டே, அராபியரின் தொடர்பு தமிழகத்திற்கு இருந்து வந்தது. பதினான்காம் நூற்றாண்டில் மாலிக்காபூரின் படையெடுப்பும், பின்னர் அரை நூற்றாண்டு நடந்த மொகலாயர் ஆட்சியும் தமிழகத்தில் இசுலாமியம் பரவ வழி செய்தன. அரபு நாட்டில் ஏழாம் நூற்றாண்டில் நபிகள் நாயகத்தால் தோற்றுவிக்கப்பட்ட இசுலாம் தமிழர்களையும் ஆட்கொண்டது. ஆயினும் தமிழ் முசுலீம்கள் தமிழ் இலக்கியத்தில் கண்ணும் கருத்துமாய் ஈடுபட்டுப் பெரும் புலவர்களாய்த் திகழ்ந்து வந்தனர். இவர்கள் இசுலாமிய நூல்களைத் தமிழாக்கினார். அரபு, பாரசீக, இந்துஸ்தானிச் சொற்கள் பல இவர்களால் தமிழில் புகுந்தன. அருணகிரியார் 'விஞ்சையர் மாதர் சபாசென' எனவும் குமரகுருபரர், 'குறவர் மகட்குச் சலாம் இடற்கு ஏக்கறு குமரனை' எனவும் முறையே சபாஷ், சலாம் என்ற சொற்களை எடுத்தாண்டனர்.

தமிழக இசுலாமியப் புலவர்கள் அரபு நாட்டு இசுலாமியப் பண்பாட்டை, சமயத் தத்துவத்தைத் தமிழிலும் தமிழ்ப் புலவர்களின் மரபை, பண்பாட்டை, இசுலாமியத்திலும் கலந்து இரண்டையும் ஒன்றுபடச் செய்யும் பாலமாக விலங்கினர். பதினேழாம் நூற்றாண்டு முதல் இசுலாமிய இலக்கியம் தழைத்தோங்கி வருகிறது. உமறுப்புலவர், சேகனாப்புலவர், காசிம்புலவர், சவ்வாதுப்புலவர், சையது முகைதீன் கவிராயர், வண்ணக் காஞ்சியப்புலவர், குணங்குடி மஸ்தான், செய்குத்தம்பிப் பாவலர்

முதலானோர் இசுலாமியம் தொடர்பான நூல்களை எழுதினர். அவற்றுள் உமறுப்புலவர் எழுதிய சீறாப்புராணம் எச்சமயத்தாரையும் கவரும் ஆற்றலுடையது. ஆராவமுதெனப் போற்றப்பட்டது. முகமது நபியின் வாழ்க்கையை நவிலும் இந்நூல் விலாதத்து, நுபுவத்து, ஹீரத்து என மூன்று காண்டங்களையும், 92 படலங்களையும், 5027 பாடல்களையும் கொண்டது. இது நபிகள் நாயகத்தின் வாழ்க்கை வரலாறு.

முதல் காண்டம் நபிகள் நாயகத்தின் பிறப்பும் இளமையும் பற்றிக் கூறுகிறது. இரண்டாம் காண்டம் இறைவன் நபிகளுக்குச் சபுறயில் மூலம் இசுலாமியத்தை அருளியது பற்றிக் கூறுகிறது. மூன்றாம் காண்டம் நபிகள் மக்கா நகரைவிட்டு மதீனாவிற்கு ஓடியதைக் கூறுவது. ‘சீறா’ என்பது ‘ஹீரத்’ என்னும் அரபுச் சொல்லின் திரியாகும். வாழ்க்கை வரலாறு என்பது அதன் பொருள். உலகில் தூய வாழ்வு நடத்திய உத்தமர் நபிகள் நாயகத்தின் வரலாறு கூறும் நூலாதலால் இது சீறாப்புராணம் என வழங்கப்பட்டது. இந்நூல் அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றையும் உணர்த்தும் காப்பியமாகத் திகழ்கின்றது.

அழகும் பண்பும் நிரம்பிய சிறப்புடைய அப்துல்லா என்பவரும் பேரழகும் பெரிய பண்புமுடைய ஆமீனா என்பவரும் ஒரே மனத்தினராய்க் கலந்து இல்வாழ்க்கை நடத்தி வந்தனர். அவர்கள் வாழ்ந்து வந்த மக்கா என்கிற பட்டணமே பேறுபெற்றது போன்று ஆமீனாவின் வயிற்றில் நபிகள் கருவாகத் தரிக்கப்பட்டார். பன்னிரண்டு மாதங்களில் ஒரு மாதமாகிய ஐஜபு மாதத்தில் முதலாம் தேதியான வெள்ளிக்கிழமை இரவில் பரிசுத்தமும் நேர்மையுமான பாதங்களையுடைய நபி முகம்மது சல்லல்லாகு அலைகி பருவப் பெண்ணாகிய ஆமீனா அவர்களது வயிற்றின்கண் உருவானார்.

நபியவர்கள் வயிற்றில் உருவானதும் ஆமீனா வாயினது நீர் காய்ந்திட, நாக்குலர்ந்து உடலானது நடுக்குற்றொடுங்கிப் பஞ்சப் பொறிகளும் மயக்கமுறும்படி நெஞ்சமுழுவதும் தளர்ந்து, பெரு மூச்சுகளோடு அடுத்தடுத்துச் சுற்றிப் பிதற்ற ஆரம்பித்தாள்.

நபி நாயகமானவர் மனித அவதாரமாய் வருவதற்கு ஆமீனாவினது மேலான கருப்பையில் கருவாகத் தரித்த முதல் மாதத்தில் ஆமீனாவினது சொப்பனத்தில் பூமி முழுவதும் புகழும் மூலபிதாவான நபி ஆதமலை இறைதூதர் வந்து ஆமீனா ! உனது மேன்மை தாங்கிய வயிற்றின்கண் அமைவுற்றிருக்கும் பிள்ளையானது வலிமையை உரிமையாய் உடையது. அதன் பிரகாசத்திற்குச் சூரியனும் நிகரல்லன். அப்பிள்ளையின் பேரானது இவ்வுலகத்தில் முகம்மதாகும் என்று சொல்லிப் போயினர் !

நபியவர்கள் கருப்பமான இரண்டாம் மாதத்தில் ஆமீனாவினது சொப்பனத்தில் இறைதூதர் தோன்றி ஆமீனா ! உன் வயிற்றின் கண்ணிருக்கின்ற பிள்ளையானவர் எவ்விடத்தும் தோன்றும்படியான பெருமையுடையவர். அவரின் பெயரானது முகம்மதாக இருக்கும் என்று திருவாய் மலர்ந்தருளினார். இவ்வாறே மூன்றாம் நான்காம் மாதமும் நிகழ்ந்தன. ஆமீனாவிற்கு இரண்டு கைகளிலும் வளையல்களை அணிந்து காலில் சிலம்பினைப் புனைந்து கூந்தலைக் கொண்டையாக இறுகச் செய்து, பலவிதமான மலர்களை அதன்மீது நிறைத்து இரண்டு கண்களிலும் மையினை எழுதிக் கஸ்தூரியையும் சேர்க்கப்பட்ட சந்தனக் கலவையையும் பூசி நல்ல கிரணத்தை வீசிய தீபம்போல் எழுப்பினார்கள். இவ்வாறு ஐந்து மாதம் கழிந்தது.

ஆமீனாவின் கணவர் அப்துல்லாவின் தந்தை அப்துல் முத்தலிபானவர் வாணிகம் செய்யத் தமது மகனை உறவினர் வாழும் நாட்டிற்கு அனுப்பினார். உதவியாளர் புடைசூழ அப்துல்லா மக்கா நகரைவிட்டு மதினா நகருக்குச் சென்றார். வாணிகம் முடித்து மீண்டும் தமது பட்டணமாகிய மக்கா நகருக்கு வரும் பொருட்டு 'அபுவா' என்று சொல்லப்படும் அப்துல்லாவானவர் பழவினையின் பலன் தமக்கு வந்து சேர்ந்தது என்னும் நினைவினராய் மீளா நித்திரையானார்கள். அவரைச் சூழ்ந்து உடன் வந்தவர்கள் இது விதியின் பயனென்று மிகவும் பதறி, வாடி அரசரென்னும் அப்துல்லாவை மார்க்க விதிப்படி அழகு பெறும்படிப் பரிமளத்தோடு அடக்கம் செய்தார்கள். அதன்பிறகு மக்கா நகரை அடைந்து அவர்கள் எல்லோரும் நடந்தவற்றை இங்குள்ளவர்களுக்குச் சொன்னார்கள்.

ஆமீனா தனது நாயகராகிய அப்துல்லா இறந்துபட்ட செய்தியைக் காதில் கேட்டவுடனே உள்ளம் தளர்ந்து வாய்விட்டுச் சத்தமிட்டு அழுதார்கள். மற்ற பெண்கள் அனைவரும் அவளுடன் கூடி அழுதார்கள். இவ்வாறு ஆறாத் துயரத்தில் ஆமீனா இருக்கும்போது அவளது மாமனாராகிய அப்துல் முத்தலிபானவர்கள் தமது கண்களில் நீர் வழிய உடல் ஒடுங்கி இருந்த ஆமீனாவின் அருகில் உட்கார்ந்து பலவிதமான ஆறுதல் மொழிகளைக் கூறி, சன்மார்க்கமான பலவற்றையும் எடுத்துச் சொன்னார்கள். அவர் கூறிய சன்மார்க்கச் செய்திகளைக் கேட்டு ஒருவாறு ஆறுதல் அடைந்த ஆமீனா எல்லாக் காரியங்களையும் உண்டாக்கின கடவுளினது செயலை மனத்துள் அறிந்து ஒருவாறு தெளிவாயினார்கள்.

ஆமீனாவிற்குப் பிரசவ வலி வந்தது. ஆமீனா தன் தாயிடம் எடுத்துரைக்க, உடனே அவர்கள் அந்நியப் பெண்களுக்குப் பிள்ளைப்

பேற்றின் செய்தியைச் சொல்லி ஆள் அனுப்பினார்கள். ஆள் சொன்ன வற்றைக் கேட்ட மக்கா நகர் பெண்கள் மறந்தும் நாங்கள் ஆமீனா வீட்டிற்கு வரமாட்டோம் என்று ஒரே சொல்லாகச் சொன்னார்கள். அதன் பிறகு அப்துல் முத்தலிப்பு பிரார்த்தனை செய்து நெடுமூச்சுவிட்டுக் களைத்து வருந்தி இருந்தார். வானவர்கள் சொர்க்கத்துப் பெண்கள் எல்லாம் இறங்கி வந்து ஆமீனாவின் வீட்டில் அணி அணியாய் நின்று அவர்களது சொல்லை மறுக்காமல் ஏவல் கேட்டு நின்றனர். குழந்தை பிறந்ததும் சுவர்க்கத்திற்குள் கொண்டுபோய்ப் புனித நீராட்டி அமுதூட்டிக் கொண்டு வந்தார்கள். வானத்திற்கும் ஆமீனாவின் வீட்டிற்கும் ஏணியில் தேவர்கள் ஏறி இறங்குவது அதிசயமாய் இருந்தது. மக்கா நகரமே தேவலோகம் போன்றிருந்தது.

தேவாலயத்திலிருந்து வீடு வந்த ஆமீனாவின் மாமனார் ஆமீனாவை அழைத்து, அம்மா! உனது நெற்றியின்கண் நன்மை பொருந்திய ஒளி ஒன்று இருக்கும்/ அதை இப்போது காணவில்லை என்றார். ஆமீனா நான் இப்போது மகவைப் பெற்றேன் என்றார். உடனே அப்துல் முத்தலிப்பு, நீ பெற்ற பிள்ளையை என்னிடம் கொண்டு வருவாயாக! என்றார். அதற்கு அவள் மூன்று நாட்கள் வரைக்கும் வேறு அந்நியர் ஒருவருக்கும் காட்டக்கூடாதென்று வானவர்கள் கூறினார்கள் என்று கூறவும் அப்துல் முத்தலிப்பு கோபித்தார்கள். உடனே ஆமீனா உம் மகன் பெற்ற குழந்தையை உள்ளே சென்று தாங்களே கையில் எடுங்கள் என்றார். உடனே மாமனார் உள்ளே போகக் கையில் வாள் ஏந்திய ஒருவர் நிற்பதைக் கண்டு உடனே சுற்றத்தாருக்குச் சொல்ல நினைத்தபோது பேசமுடியாமல் ஏழு நாட்கள் வீட்டிலேயே இருந்தார். ஏழு நாட்கள் கழித்து அப்துல் முத்தலிப்பிற்குப் பேசும் திறம் வந்ததும் பெருமிதத்தோடு ஆமீனா வீட்டிற்கு வந்தார்கள். நடந்தவற்றை மருமகளிடம் கேட்டறிந்து மகிழ்ந்தார்கள். தமது மகனின் குழந்தையைக் கைகளில் மெல்லத் தூக்கி எடுத்து மனம் மகிழ்ந்தார்கள்.

சீறாப் புராணத்தின் முதல் பகுதியாகிய நபி அவதாரப் படலத்தில் அப்துல்லா ஆமீனாவின் அன்புறவை உமறுப்புலவர் எடுத்துரைக்கின்றார். மருமகள் கருவுற்றிருந்த போது மகன் இறந்து போக மாமனார் ஆறுதல் கூறி இறைச் செய்திகளால் தேற்றுகிறார். ஊரார் பிரசவம் பார்க்க உதவாதபோது இறைவனே தூதர்களால் உதவி செய்கிறார். மாமனார் மருமகளிடம் கோபிப்பதும் அவர் சமாதானப்படுத்துவதும் மருமகளை மகளாக நினைத்துப் போற்றுவதும் அழகிய இனிய உறவுகளை வெளிப்படுத்துவதாக உள்ளன. நபி அவதாரம் மக்களுக்காகவே என்பதை வலியுறுத்தும் சீறாப்புராணம் இடையிடையே மனித உறவுகளையும் படம்பிடித்துக் காட்டுகிறது.

# 13. திருவருட்பாவில் மனித உறவுகள்

இராமலிங்கம் என்ற இயற்பெயரோடு விளங்கிய வள்ளலார் தமது பக்தியாலும், புதுமையான சிந்தனையினாலும், இறைவன் அருளாலும் 'வள்ளலார்' என்று போற்றப்படுபவர். வள்ளல் என்றால் வரையாது வழங்குவோர் என்று பொருள். சங்க காலத்திலிருந்து பல வள்ளல்கள் தமிழ்நாட்டில் வாழ்ந்துள்ளனர். அந்த வகையில் வரையறையற்ற உயிர் இரக்கம் கொண்டவர் வள்ளலார். இவரின் பெற்றோர் இட்டபெயர் இராமலிங்கம். அவரது குலப்பெயரோடு சிலர் அவரை, இராமலிங்கம் பிள்ளை என்று அழைப்பார்கள். 'சாமி' என்றும் 'ஐயா' என்றும் 'சந்நிதானம்' என்றும் நெருங்கிய அன்பர்கள் பேச்சு வழக்கிலும் கடிதங்களிலும் குறிப்பிடும் வழக்கம் இருந்தது. இந்நிலையில் திருவருட்பா நூலாக அச்சாயிற்று. நூலின் முகப்பேட்டில் ஆசிரியப்பெருமான் பெயரை எவ்வாறு குறிப்பிடுவது என்ற எண்ணம் எழுந்தது. சுவாமிகள், அடிகள் என வழங்கப் பெறுதலை அவர் விரும்பவில்லை. பெயருக்குப்பின் பிள்ளை என்னும் சாதிமரபுப் பெயரைச் சேர்ப்பதையும் விரும்பவில்லை.

இரத்தின முதலியார் என்பவர் வள்ளலாருக்குக் கடிதம் எழுதிக் கேட்டபோது, அவர்'இராமலிங்க சாமி' என்று வழங்குவிப்பது என் சம்மதமன்று. என்னை ? ஆரவாரத்திற்கு அடுத்த பெயராகத் தோன்றுதலில் இனி அங்ஙனம் வழங்காமை வேண்டும். என்றெழுதித் தடுத்து விட்டார்கள். இந்நிலையில் தொழுவூர் வேலாயுத முதலியார் இறைவன் திருவருளைச் சந்திக்க வேண்டினார்.

வள்ளர் பெருமானது ஒழிவிலொடுக்கப் பதிப்பு, கண்ணுடைய வள்ளலார் என்னும் பெயர், வள்ளல் தன்மைக்கு வள்ளற்பெருமான் கொடுக்கும் விளக்கம் முதலியன வேலாயுத முதலியாரின் உள்ளத்தைக் கவர்ந்தன. திருவருளும் அவரது சிந்தையிலிருந்து துணை செய்தது. நூலுக்குத் திருவருட்பா என்றும் அதன் பகுதிகளுக்குத் திருமுறை என்றும் ஆசிரியருக்குத் திருவருட் பிரகாச வள்ளலார் என்றும் பெயர் சூட்டி வழங்கலாம் என உணர்ந்து அவ்வாறே பெயரிட்டார். அருட்பிரகாச வள்ளலார் என்ற பெயர் இன்று சுருக்கமாக 'வள்ளலார்' என்றே வழங்கப்படுகிறது.

இத்தகைய உயிர் இரக்கம் கொண்ட வள்ளலாரின் மனித உறவுகள் குறித்த செய்திகளை இனிக் காண்போம். உலகப் பொதுமறையாம் திருக்குறளையும் வாழ்வியல் மந்திரங்களைப் போதிக்கும் திருமந்திரத்தையும் எல்லோரும் உருகும் திருவாசகத்தையும் போற்றியவர். இம்மூன்று நூல்களையும் வழிகாட்டி நூல்களாகக் கொண்டவர் வள்ளலார். திருவாசகம் உருக்கும் என்றால் திருஅருட்பா இரக்கமாகும். தமது வாழ்வில் பல அற்புதங்களைக் கண்டவர் வள்ளலார். உண்மையும் பணிவும் உருவெடுத்தன போன்றவர். தர்மசாலைக்கு அரிசி வருவித்த அற்புதம், மழை பொழிவித்தது, புன்செய் நன்செய் ஆக்கியது, திருடர்களின் ஓங்கிய கரம் அப்படியே நின்றது, கனவிலும் நனவிலும் பல சமயங்களில் பல இடங்களில் அன்பர்களுக்குத் தோன்றி அருள் செய்தது இவை போன்ற பல அற்புதங்கள் மனிதநேய அடிப்படையில் மனித உறவுகளின் செயல்பாடுகளாகவே வள்ளலார் செய்தவையாகும்.

இந்த உலக வாழ்க்கை உடற்கவர்ச்சியால் ஈர்க்கப்பட்டு, பல விதமான பாவங்கள் நிகழ்ந்து அழிந்து கொண்டிருக்கிறது என்பதை முற்றும் உணர்ந்தவராக வள்ளலார் தமது அழகிய உடலை வெள்ளைப் போர்வையால் போர்த்துக் கொண்டவர். உடல் அடிப்படையில் தீமைகள் நிகழ்ந்து உறவுகள் அழிவதைக் கண்டு வேதனைப்பட்டவர். வள்ளலாரின் கொள்கைகள் இன்று ஆத்திகவாதிகளாலும் நாத்திகவாதிகளாலும் போற்றப்படுகின்றன. தாம் சொன்னதைச் செயலிலும் செய்து காட்டியவர். சமுதாய வாழ்வில் மக்களிடமுள்ள தீமைகளைக் களைந்து குறைகளைப் போக்கிக் கொள்ள வழி வகுத்துக் கொடுத்த சமுதாய நல்ஆசிரியராக வள்ளலார் திகழ்ந்தார். மனித உறவுகளால் பின்னப்படும் வாழ்க்கையை அறவழியில் அமைத்துக் கொள்ள வழிகூறும் பல்வேறு செய்திகளைப் பாடலாலும் உரைநடையாலும் உரையாடலாலும் அறிவுறுத்தி மக்களுக்கு வழிகாட்டியாகத் திகழ்ந்தவர். அன்றாட வாழ்வில் மனிதர்கள் நடந்து கொள்ள வேண்டிய முறைகளை எல்லாம் எளிதாக எடுத்துக் கூறியவர்.

தம்முடைய சொந்தக் கருத்துகளை மக்களிடம் திணிக்க வள்ளலார் விரும்பியதில்லை. தம் வாழ்வில் இறை அருளால் உணர்ந்தவை, அனுபவத்தால் தெளிந்தவை, ஏராளமான நல்ல நூல்களை ஆழமாகப் படித்து அதன் அறங்களை வாழ்வியலோடு பொருத்திப் பார்த்தவர். நிலையில்லாத வாழ்வில் நிலையானதைத் தேடச் சொன்னவர். வள்ளலாரின் ஆழ்ந்தகன்ற படிப்பறிவும், ஆராய்ச்சியறிவும், அனுபவ அறிவும், நுண்ணறிவும், இயற்கையறிவும் அப்போதைய சூழலில் ஒரு புதிய வாழ்வியல் கொள்கையை, ஒரு தத்துவத்தை உருவாக்கின. சமயக்

கருத்துகளைக் கூட வாழ்வியல் மனித உறவுகளுக்குரியதாக மாற்றி வழிகாட்டியவர். யாரையும் வெறுக்காத யாரையும் பகைக்காத ஒரு வழியை உருவாக்கினார்.

ஆன்மநேய ஒருமைப்பாட்டு உணர்ச்சியை மக்களிடத்தில் எடுத்துரைத்தார். உயிர்கள் மீது ஏற்படுகின்ற இரக்கம் நம்மை உயர்த்தும், மனித உறவுகளை வலுப்பெறச் செய்யும் என்பதை வலியுறுத்தினார். அதனால்தான் 'வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன்' என்று பாடுகிறார். இரக்க உணர்ச்சி இல்லையென்றால் மனிதப்பிறவிக்குப் பொருளில்லை. இரக்க உணர்ச்சி இல்லாத மனிதன் வெறும் மனித உருவம்தான். அவன் மனிதனல்ல. மனித உறவுகளால் பின்னப்பட்ட வாழ்க்கையில் மக்கள் அடைய வேண்டிய குறிக்கோளை எய்துவதற்கு மிகச் சிறந்த வழி இரக்க உணர்ச்சியை வளர்த்துக் கொள்வது. இதைத்தான் வள்ளலார் மக்களிடையே போதித்தார். இந்த இரக்க உணர்ச்சி அன்பினுடைய வெளிப்பாடு. இதுவே கடவுள். இதுவே மனித உறவுகளை வளர்க்கும் வழி. இதுவே மனித வாழ்வில் நிறைவைத் தருவது. சாதி, சமய வேறுபாடுகளை வள்ளலார் அறவே வெறுத்தார். மனிதர்களிடையே பிரிவினைகளை உருவாக்கும் இவற்றைக் கடந்து ஒருமைப்பாட்டு உணர்வில் இறைவனைச் சோதிவடிவாகக் கண்டார். அந்தச் சோதியை உணர்ந்து இரக்க உணர்வோடு வாழ்வதையே அவர் மக்களுக்குப் போதித்தார்.

*அருட்பெரும்சோதி அருட்பெருஞ்சோதி*
*தனிபெருங்கருணை அருட்பெருஞ்சோதி*

இந்த முழக்கம் வள்ளலார் மக்களுக்கு வழங்கியிருக்கிற மிகப்பெரும் கொடை. சோதி, ஆன்மநேய ஒருமைப்பாடு, இரக்கம் ஆகிய சொற்கள் வள்ளலாரின் உறவுநிலைகளைத் தெளிவாக்குகின்றன. உலகிலுள்ள உயிர்கள் யாவும் ஏதோ ஒரு வகையில் சில அடிப்படையில் பொதுமைப் பண்பு பெற்றவை. உயிர் என்றால் உணரக் கூடியது. உணர்ச்சி என்ற ஒன்று இல்லை என்றால் உயிர் இல்லை. இந்த உணர்ச்சி உறவுகள் நிலையில் அமையவே வள்ளலார் வழி வகுத்தார். பிணி மூப்பு மரணம் இவை மூன்றும் மனிதனால் வெல்ல முடியாதவை.

ஒவ்வொரு மனிதனும் எதிர்கொண்டே தீரவேண்டியவை இந்த மூன்றும். இரக்கம் என்பதை அடிப்படையாகக் கொண்டு வாழ வேண்டும் என்பதே வள்ளலாரின் கொள்கை. அதுவே அவரது சன்மார்க்க நெறி.

சாதி, சமய, நாடு, மொழி, இனம், நிறம் முதலான எந்தப் பாகுபாடும் இல்லாத ஒரே வழி வள்ளலாரின் வழி.

'ஆன்மநேய ஒருமைப்பாடு' என்ற சொல்லே மனித மனதைக் காட்டுகிறது. அனைத்துச் செயல்களுக்கும் மனமே காரணம். ஆன்மா என்பது மனதுள் மறைந்திருப்பது. அது களங்கப்படாமல் காத்தல் அவசியம் என்பதையே வள்ளலார் உணர்த்தினார். ஆன்மம் என்பது உயிர். நேயம் என்பது இரக்கம். இவை இரண்டிலும் ஒத்துப்போவதையே ஒருமைப்பாடு என்கிறார். மனித நேயம் என்பதும் இதுவே.

இயல்பாகவே நெஞ்சத்தில் நேயமும் ஈரமும் இல்லாத நெஞ்சம் உலகில் இல்லை என்றே கூறலாம். ஆனால் அதை வெளிப்படுத்தவே இரக்க உணர்ச்சி. அதன் வழிச் செயல்படுத்திக் காட்டுதல் வேண்டும். அந்த இரக்க உணர்ச்சியாகிய நேய உணர்ச்சி குடும்பத்திலிருந்து தொடங்க வேண்டும்.

பெற்றோர் பிள்ளைகள், உற்றார் உறவினர், அக்கம் பக்கத்தார், அயலார் அடுத்த ஊரார், அடுத்த நாட்டினர் என்று இவ்வாறு நேய உணர்ச்சி விரிவு பெற்று விரிவு பெற்றுத்தான் சமுதாயத்தில் மனித உறவு விரிவடையும் என்பதை எளிதாக எடுத்துரைத்தவர் வள்ளலார்.

வள்ளலாரின் குறிக்கோள் ஆன்மநேய ஒருமைப்பாட்டைப் பெறுவது. அனைத்து மக்களும் இதைப் பெற்று இனிது வாழ்வது என்பதுதான். மனித நேயம் குறையக் குறைய மற்ற மனிதர்களுக்கும் நமக்கும் இருக்கிற தொடர்பும் குறைகிறது. மனித உறவு என்பது அறுபட்டுக் கொண்டே வருகிறது பகைமை வளர்ந்து அழிவுகள் ஏற்படுகின்றன. எனவே தான் வள்ளலார் மனித நேயமான இரக்க உணர்வை வலியுறுத்துகின்றார். பற்றுகள் அறுபடுவது வேறு. உறவுகள் அறுபடுவது வேறு. ஆன்மீக உயர்வு கூட இறைவனுக்கும் அடியாருக்கும் ஏற்படுகின்ற உறவு தான். எனவே உலக வாழ்வில் மனித உறவுகளுக்கு அடிப்படையாக அமைவது இரக்க உணர்வு என்பதே வள்ளலாரின் உயரிய கொள்கை.

இந்த இரக்க உணர்வால் மற்றவர்களுக்கு நம்மால் உதவ முடியும். அத்துடன் உறவும் சேர்ந்துவிடும். இரக்கம் காட்டிப் பழகிவிட்டால் உறவுகள் அறுபடா. ஆன்மா பக்குவப்படும். அதனால் அழிவுகள் நேரா. எனவே மனித உறவுகளை காக்கவும் அழிவுகளைத் தடுக்கவும் ஆன்ம ஈடுபாடு அடையவும், ஆன்மநேய ஒருமைப்பாட்டை வள்ளலார் வலியுறுத்தி வழிகாட்டினார் என்பதை உணரலாம்.

# 14. திரையிசைப் பாடல்களில் மனித உறவுகள்

படித்தவர்கள் மட்டுமே படித்து, கருத்துகளைப் புரிந்து கொண்டு உணரும் வகையில் சங்க இலக்கியங்களும் பிற செவ்வியல் இலக்கியங்களும் அமைந்துள்ளன. படிக்காத பாமர மக்களும் கேட்டு உணரும் வகையில் எழுதப்படுவது திரையிசைக் கவிதைகள்.

மேடை நாடகங்களில் ஆரம்பித்துப் பேசும் படங்கள் வெளிவர ஆரம்பித்த காலம் முதல் இன்று வரை திரையிசைக் கவிதைகள் தெரு ஓரங்களிலும் மாட மாளிகைகளிலும் பட்டிதொட்டிகளிலும் ஒலித்துக் கொண்டுள்ளன. படித்து அறியாத மக்கள் கூடப் பாடல்களாக வெளிவரும் திரையிசைக் கவிதைகளைக் கேட்டு இரசிக்கிறார்கள்.

அவர்களாக விரும்பிக் கேட்டும், விரும்பிக் கேட்காமலும் ஏதோ ஒரு வகையில் அவர்கள் காதுகளில் ஒலிக்கின்றன. அவர்களை அறியாமலேயே அவர்களின் உள்ளுணர்வுகளைத் தொடுகின்றன. அத்தகைய சக்தி வாய்ந்த பரப்புதல் நிலையில் வெளிவரும் திரையிசைக் கவிதைகள் 1932 முதல் வெளிவந்து கொண்டுள்ளன. பல பாடலாசிரியர்கள் அவற்றை எழுதிக் கொடுக்கின்றனர். அந்த வரிசையில் வாழ்வின் அடிப்படை யிலிருந்து உறவுகளை உணர்த்துகின்றன, திரையிசைக் கவிதைகள்.

## இல்வாழ்வை உணர்த்தும் உறவுகள்

மனித வாழ்க்கையை இருபெரும் பிரிவாகப் பிரித்துக் கொண்டால் அவற்றை அகவாழ்க்கை, புறவாழ்க்கை என்று கூறலாம். அதில் முதன்மையானது அகவாழ்க்கை. அதுதான் வாழ்வின் அடிப்படையும் அடையாளமுமாகும். இதை வெறுத்தவர்களைத் துறவிகள் எனலாம். வள்ளுவன் கூறுவது போன்று வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் முதலில் அக ஒழுக்கமும் அகவாழ்வின் பேறுகளைப் பெற்றும் இருப்பான். அதன் வளர்ச்சியாகவும் வாழ்வின் பொருளாகவும் புறவாழ்வை அமைத்துக் கொள்வான். அத்தகைய இல்வாழ்வைக் கீழ்வரும் பாடல் சுட்டுகின்றது.

*புருசன் வீட்டில் வாழப்போகும் பெண்ணே !*
*தங்கச்சி கண்ணே - சில*
*புத்திமதிகள் சொல்லுறேன் கேளு முன்னே*
*அரசன் வீட்டுப் பெண்ணாக இருந்தாலும் - அம்மா*
*அகந்தை கொள்ளக் கூடாது எந்நாளும்*
*மாமனாரை மாமியாரை மதிக்கணும் - உன்*
*மாலையிட்ட கணவனையே துதிக்கணும்*
*கண்ணால் பேசும் பயக முன்னே நில்லாத - நீ*
*காணாததைக் கண்டேனென்று சொல்லாத*
*புருசன் உயிரை மீட்டுத் தந்தவ பொண்ணுதான்*
*பொழுது அங்கே நில்லுன்னு சொன்னவ பொண்ணுதான்*
*புருசன் கூட நீயிருந்து பூவும் மணமும் போல் மகிழ்ந்து*
*கூரச்சேலையும் தாலி மஞ்சளும்*
*குங்குமப் பொட்டும், நகையும் நட்டும்*
*கொறஞ்சி விடாம நெறஞ்சிகிட்டு*
*மக்களைப் பெத்து மனையைப் பெத்து*
*மக்க வயத்திலே பேரனைப் பெத்து*
*பேரன் வயத்திலே பிள்ளைக பெத்து*
*நோயில்லாம நொடியில்லாம*
*நூறு வயசு வாழப் போற தங்கச்சி*
*நமக்கு சாமி துணையிருக்கு தங்கச்சி*

(பாடலாசிரியர் டிகே. சுந்தர வாத்தியார், பாடியவர் திருச்சி. லோகநாதன்)

பானை பிடித்தவன் பாக்கியசாலி என்ற திரைப்படத்தில் இடம் பெற்றுள்ள இந்தப் பாடல் ஒருபெண் வாழ்வின் ஆதாரமாக இருப்பவள் என்பதையும் அவள் தாரமானபின் அவளது கடமைகளையும் சுட்டுகிறது. குடும்ப உறவுகளை மதித்து, அகந்தை கொள்ளாமல் இல்வாழ்க்கை நடத்துபவளே சிறந்த பெண்ணாக இருக்க முடியும் என்பதையும் உறவுகளை மதித்து வாழும் வாழ்வே சிறந்தது என்பதையும் சுட்டுகிறது.

பெற்றோரையும் உறவுகளையும் அறியாத அனாதைகளாகிப் போனவர்களுக்கும் இறைவன் உறவாக இருந்து காப்பான் என்பதைக்

களத்தூர் கண்ணம்மா என்னும் திரைப்படத்தில் வரும் கீழ்வரும் பாடல் சுட்டுகின்றது.

*அம்மாவும் நீயே அப்பாவும் நீயே*
*அன்புடனே ஆதரிக்கும் தெய்வமும் நீயே*

(பாடலாசிரியர் டிகே.சுந்தர வாத்தியார்)

இன்றைய காலத்தில் அநேகமான பெற்றோர்கள் முதியோர் இல்லங்களை நாடிச் செல்கின்றனர். பெற்ற பிள்ளைகளே அவர்களை அனாதைகளாக்கி விடுகின்றனர். நாளை நமக்கும் இந்த நிலை வரலாம் என்பதை மறந்து விடுகிறார்கள். அத்தகையவர்களுக்குத் தாயின் உறவையும் தந்தையின் உறவையும் அவற்றின் பெருமையையும் கீழ்வரும் பாடல் வரிகள் சுட்டுகின்றன.

*பத்து மாதம் சுமந்திருந்து பெற்றாள்*
*பகலிரவாய் விழித்திருந்து வளர்த்தாள்*
*வித்தகனாய் கல்விபெற வைத்தாள்*
*மேதினியில் நாம் வாழச் செய்தாள்*
*அன்னையைப் போலொரு தெய்வமில்லை - அவள்*
*அடிதொழ மறுப்பவர் மனிதரில்லை மண்ணில் மனிதரில்லை*
*துன்பமும் தொல்லையும் ஏற்றுக்கொண்டே - நம்மை*
*சுகம்பெறச் செய்திடும் கருணை வெள்ளம்*
*நாளெல்லாம் பட்டினியாய் இருந்திடுவாள் - ஒரு*
*நாழிகை நம்பசி பொறுக்க மாட்டாள்*
*மேலெல்லாம் இளைத்திட பாடுபட்டே*
*மேன்மையாய் நாம் வாழ செய்திடுவாள்*

(பாடலாசிரியர் க.மு. ஷெரிப், பாடியவர் டி.எம்.எஸ்)

அன்னையின் ஆணை என்னும் திரைப்படத்தில் இடம் பெற்ற இந்தப் பாடல் அன்னையை வணங்க மறப்பவன் மனிதனே இல்லை என்பதைச் சுட்டுகின்றது. தாயைப் போலவே தந்தையும் வணங்க வேண்டியவர்.

*தந்தையைப்போல் உலகிலே*
*தெய்வமுண்டோ ? ஒரு மகனுக்குச்*

*சர்வமும் அவரென்றால் விந்தையுண்டோ*
*அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்*
*ஔவையின் பொன்மொழி வீணா ?*
*ஆண்டவன் போலே நீதியைப் புகன்றான்*
*அனுபவமே இதுதானா ?*
*கண்ணிமை போலே என்னை வளர்த்தார்*
*கடமையை நான் மறவேனா ?*
(பாடலாசிரியர் தஞ்சை ராமையாதாஸ், பாடியவர் டி.எம்.எஸ்)

ஒரு மனிதனின் முதல் உறவு தாயும் தந்தையுமே. அவர்களிடம் அன்பும் பண்பும் பணிவும் கொண்டு வாழாதவர்கள் எந்தச் சிகரத்தை எட்டியிருந் தாலும் அது வீணானது என்பதை இப்பாடல் வரிகள் குறிப்பிடுகின்றன.

வாழ்வில் விளக்கங்களாக விளங்கும் உறவுகளை மதித்துப் போற்றி வாழ்வதை அன்பு வழியால் காட்டுதல் வேண்டும் என்கிறது கீழ்வரும் பாடல்.

*எங்கே சொர்க்கம் எங்கே சொர்க்கம்*
*என்றே தேடுறீர் ஏமாந்தே ஓடுறீர் - அது*
*அங்கே இல்லை இங்கே உண்டு*
*அன்பால் நாடுவீர் ஒன்றாய்க் கூடுவீர்*
*தன்னந்தனியே தவம் புரிந்தே*
*சமாதியாகப் போறீரா... ? சமு*
*சாரம் பிள்ளை சுற்றத்தோடு*
*வாழ்ந்து கொஞ்ச வாரீரா* (பாடலாசிரியர் உடுமலை நாராயணகவி,
பாடியவர் கே.ஆர். இராமசாமி குழுவினர்)

அன்பு என்பதைக் குடும்பத்தில் உள்ளவர்களிடம் காட்டுவதும் தம்மை நோக்கிக் கெஞ்சுபவர்களிடம் காட்டுவதுமாகிய இரக்கமாகும் என்பதைக் கீழ்வரும் பாடல் வரிகள் சுட்டுகின்றன.

*அம்மா பசிக்குதே தாயே பசிக்குதே*
*பாலும் பழமும் வேண்டாந்தாயே*
*பசிக்குச் சோறு கிடைத்தால்போதும்*

*பிள்ளைக் குட்டியைப் பெற்ற தாய்களே*
*பிச்சைப் போட்டுப் பசிதீரும் - உங்கள்*
*பிள்ளைகளாய் எண்ணிப் பாரும்*

(பாடலாசிரியர் கொத்த மங்கலம் சுப்பு)

சம்சாரம் என்ற படத்தில் வரும் இப்பாடல் வரிகள் இல்லற உறவுகளின் கடமையைச் சுட்டுகின்றன.

## புறவாழ்வின் உறவு முறைகள்

இந்த உலகில் பிறந்த மக்கள் அனைவரும் ஓரினமே. எல்லோரும் ஓர் குலமே. எல்லாரும் வாழ்வதற்காகவே பிறந்தார்கள் என்ற எண்ணத்தோடு மனித உறவுகள் வளர வேண்டும் என்பதைப் பாடலடிகள் சுட்டுகின்றன.

*எல்லோரும் ஓரினம் எல்லோரும் ஓர்குலம்*
*எல்லோரும் ஓர் தாயின் மக்கள் அன்றோ*
*எல்லோரும் வாழ்வதற்கே, பிறந்தார்கள் என்ற நீதி*
*கொள்ளாமல் தாழ்வு செய்யும் கொடுமையைச் சகித்தல் நன்றோ*

(பாடலாசிரியர் சுத்தானந்த பாரதியார்,
பாடியவர் வித்வான் சீனிவாசன் யு.ஆர். ஜீவரத்தினம்)

எல்லா மக்களும் எல்லா நன்மைகளையும் பெற்று வாழ வேண்டும் என்கிற பரந்த எண்ணம் மனதில் வருகிறபோதுதான் உறவுகளில் அன்பு நிலவும். சங்கே முழங்கு என்னும் படத்தில் வரும் பாடலடிகள் உறவுகளைச் சுட்டுகின்றன.

*நாலு பேருக்கு நன்றி அந்த*
*நாலு பேருக்கு நன்றி*
*உறவு என்றும் பாசம் என்றும்*
*இறைவன் பூட்டிய விலங்கு*
*அழுவதற்கும் சிரிப்பதற்கும்*
*அமைந்த உள்ளம் ஒன்று*
*இன்பத்தையே பங்கு வைத்தால்*
*புன்னகை சொல்வது நன்றி*

*துன்பத்திலே பங்கு கொண்டால்*
*கண்ணீர் சொல்வதும் நன்றி*

(எழுதியவர் கண்ணதாசன், பாடியவர் டி.எம்.எஸ்)

உலக வாழ்வில் பொறாமை காரணமாகவும் பகைமை காரணமாகவும் வன்முறைகள் நிகழ்கின்றன. உலகில் அமைதியும் நிம்மதியும் பகைமை யில்லாது சமாதானத்தில் மட்டுமே ஏற்படும் என்பதை எல்லாம் இன்பமயம் என்ற படத்தில் இடம்பெற்ற பாடல் வரிகள் சுட்டுகின்றன.

*உலகமே சமாதான ஆலயமாம்*
*உயிர்யாவும் ஒன்றெனும் எண்ணமே கொண்டால் - இந்த*
*உலகமே சமாதான ஆலயமாம்*
*கொலையேது ? போரேது ? குண்டுகள்தானேது ?*
*கூடிக்கெடுக்கும் வஞ்சகக் கேடுகள் கிடையாது*
*கலையோங்கும் மொழியோங்கும் காவியம் ஓங்கும்*
*கைத்தொழில் மேலோங்கிச் செல்வமே தேங்கும்*

(எழுதியவர் குயிலன், பாடியவர் பி.லீலா)

பகைமையும் வஞ்சமும் நீங்கி அன்பானவர்களின் உள்ளத்தில் தான் ஆண்டவன் வாழ்கிறான் என்பதை, நல்லவன் வாழ்வான் என்ற படத்தில் வரும்,

*ஆண்டவன் ஒருவன் இருக்கின்றான் அவன்*
*அன்பு மனங்களில் சிரிக்கின்றான்*
*நல்லவர்போல் வெளி வேஷங்கள் அணிந்து*
*நடிப்பவர் நடுவில் இருப்பதில்லை*
*நாணயத்தோடு நல்லறங்காத்து*
*நடப்பவர் தம்மை மறப்பதில்லை*
*தன்மானம் காப்பதிலே - அன்னை*
*தந்தையைப் பணிவதிலே*
*பிறந்த பொன்னாட்டின் நல்ல முன்னேற்றம் காண*
*பொதுப் பணிபுரிபவர் மகிழ்ச்சியிலே*
*ஆண்டவன் இருக்கின்றான்*

(எழுதியவர் எம்.கே. ஆத்மநாதன், பாடியவர் சீர்காழி)

என்ற பாடல் நல்லுறவுகளை அன்பின் அடிப்படையில் வளர்த்துக் கொள்வோர் மனதில்தான் இருப்பான் என்பதைச் சுட்டுகின்றது.

உண்மையோடு மனிதர்கள் வாழ வேண்டும் என்பதை அமரதீபம் படத்தில் இடம் பெற்ற பாடலடிகள் சுட்டுகின்றன.

*நாணயம் மனுஷனுக்கு அவசியம் - தம்பி*
*மிகவும் அவசியம் - அதுவே*
*நல்லோர்கள் சொல்லி வைத்த நன்மையான ரகசியம்*
*வாணிபத்தில் புரளுவது இந்த நாணயம் - மனிதன்*
*வாக்கைக் காக்க உதவுவது சொந்த நாணயம்*
(எழுதியவர் கே.எஸ். கோபாலகிருஷ்ணன், பாடியவர் டி.எம்.எஸ்)

உலகம் சிரிக்கிறது என்ற படத்தில் வரும் பாடல் பகைமையில் உலகம் அழிவதைச் சுட்டுகிறது. அத்துடன் உறவில் உலகம் வாழ்வதை உணர்த்துகின்றது.

*உலகம் சிரிக்குதடா மனிதா*
*உலகம் சிரிக்குதடா*
*அன்பிலே பிறந்து வளர்ந்து*
*வம்பில் அழியும் நிலையைக் கண்டு*
*உலகம் சிரிக்குதடா !*
*பண்பும் அறிவும் தடுத்த போதும்*
*நண்பனைக் கெடுத்திடும் வஞ்சகன்*
*கண்களிரண்டிலும் கடலைப் பெருக்கி*
*கலங்கிடும் போது உதடுகளோரம்*
*உலகம் சிரிக்குதடா* (எழுதியவர் இரா. பழனிச்சாமி)

## உறவுகளின் அவசியமும் அடிப்படையும்

மனித வாழ்க்கை உறவுகளால் தொடங்குகின்றது. உறவுகளால் முடிகின்றது. குடும்ப உறவாக இருந்தாலும் சமுதாய உறவாக இருந்தாலும் மென்மையைக் கையாள வேண்டும். வன்மையான சொற்களையும் வன்மையான செயல்களையும் செய்வதால் உறவுகள் அழிகின்றன. அடுத்தவர் மனம் நடுங்கும்படியான பார்வையையும் எண்ணத்தையும் சொல்லையும் செயலையும் செய்யாமல் இருத்தல் உறவுகளுக்கு

அவசியமாகும். மனம் கொத்தி மனிதர்களாக இருந்தால் உறவுகள் அழியும். அதற்குக் காரணமானவர்களும் அழிந்துவிடுவார்கள். எனவே பிறர் மனம் பாதிக்கப்படும் வகையில் உறவுகளிடம் நடந்து கொள்ளுதல் கூடாது.

*மலை சாய்ந்து போனால் சிலையாகலாம்*
*மரம் சாய்ந்து போனால் விலையாகலாம்*
*மலர் சாய்ந்து போனால் சரமாகலாம்*
*மனம் சாய்ந்து போனால் என்ன செய்யலாம்*

(எழுதியவர் ஆலங்குடி சோமு, பாடியவர் டி.எம்.எஸ்)

வாழ்வினுடைய உண்மைகளை எடுத்துரைத்த இலக்கியச் சான்றோர் பலர். அவர்களுள் திருமூலர் குறிப்பிடத்தக்கவர். அன்பே கடவுள் என்றும், ஒன்றே குலமும் ஒருவனே தேவன் என்றும் கூறியவர். எப்படி வாழ்ந்த மனிதனாக இருந்தாலும் அவரவர் செய்வது அவரவர்களுக்குத் திரும்ப வரும் என்பதை ஒவ்வொரு மனிதர்களும் நினைவில் கொள்ளுதல் வேண்டும். எந்தத் தவறைச் செய்தவனாக இருந்தாலும் அதற்கான பலனை அனுபவித்தே தீர வேண்டும் என்பதே வாழ்வின் நியதி. இதைத்தான் கீழ்வரும் பாடலடிகள் சுட்டுகின்றன.

*அமைதி அழிந்தது புயலும் எழுந்தது*
*ஆணவம் இன்றோடு ஒழிந்தது*
*குற்றம் புரிந்தவன் வாழ்க்கையில்*
*நிம்மதி கொள்வ தென்ப தேது ?*
*அற்றது உலகில் அமைதியும், மகிழ்வும்,*
*அரும்பிட முடியாது !*
*அமைதி அழிந்தது புயலும் எழுந்தது*
*ஆணவம் இன்றோ டொழிந்தது !*
*குணத்தை இழந்தவன் இறுதியிலே*
*நல்ல சுகம் அடைவதேது*

(எழுதியவர் கு.சா. கிருஷ்ணமூர்த்தி, பாடியவர் சி.எஸ். ஜெயராமன்)

இரத்தக்கண்ணீர் படத்தில் வரும் இந்தப் பாடல் வாழ்க்கையை உணர வைக்கிறது. எந்த உறவுகளை விலக்குகிறோமோ அந்த உறவே ஒருநாள் வாழ்விற்குத் தேவைப்படும். அப்போது எந்த உறவுமே உதவிக்கு

இருக்காது என்பதை இந்தப் பாடல் வரிகள் சுட்டுகின்றன. தை பிறந்தால் வழி பிறகும் என்ற படத்தில் வரும்,

எளியோரைத் தாழ்த்தி
வலியோரை வாழ்த்தும்
உலகே உன் செயல்தான் மாறாதா
(எழுதியவர் கு.சா. கிருஷ்ணமூர்த்தி, பாடியவர் டி.எம்.எஸ். பால சரஸ்வதி)

என்ற பாடல் வரிகள் மனித உறவுகளில் வருகின்ற ஏற்றத்தாழ்வுகளைத் தகர்த்தெறிந்தால் அன்பில் உறவுகள் மலரும் என்பதைச் சுட்டுகின்றன.

குடும்ப வாழ்வோ சமுதாய வாழ்வோ அவற்றில் நிறைவான உறவு முறைகளையோ நிறைவற்ற உறவுமுறைகளையோ வளர்த்துக் கொண்டு மனிதன் கடைசியில் அழிந்துபோகக் கூடியவன். பிறந்து வளர்ந்தது வெவ்வேறு இடங்களாக இருக்கலாம். ஆனால் வாழ்வது பின் மறையும் இடம் எல்லோருக்கும் ஒன்றுதான். இதை உணர்ந்து நல்லுறவு முறைகளைக் கட்டாயம் வளர்த்துக் கொள்ளுங்கள் என்ற கருத்தை உணர்த்துகிறது ரம்பையின் காதல் என்ற படத்தில் வரும் கீழ்வரும் பாடல்.

*சமரசம் உலாவும் இடமே*
*நம்வாழ்வில் காணா*
*சமரசம் உலாவும் இடமே*
*ஜாதியில் மேலோரென்றும் தாழ்ந்தவர்*
*தீயோரென்றும் பேதமில்லாது*
*எல்லோரும் முடிவில் சேர்ந்திடுங்காடு*
*தொல்லையின்றியே தூங்கிடும் வீடு*
*உலகிலே இதுதான்*
*ஆண்டி எங்கே ? அரசனும் எங்கே !*
*அறிஞன் எங்கே ? அசடனும் எங்கே*
*ஆவிபோன பின் கூடுவார் இங்கே*
*ஆகையினாலே இதுதான்*
*சேவை செய்யும் தியாகி சிங்கார போகி*
*ஈசன் பொற்பாதம் தன்னை நாடிடும் யோகி*

*எல்லோரும் இங்கே ஒன்றாய் உறங்குவதாலே*
*உண்மையிலே இதுதான்*
*சமரசம் உலாவும் இடமே*
*நம்வாழ்வில் காணா*
*சமரசம் உலாவும் இடமே*

(எழுதியவர் மருதகாசி, பாடியவர் சீர்காழி)

செவ்வியல் இலக்கியங்களைப் போலவே படிப்பறிவில்லாத மக்களும் படித்தும் கேட்டும் உணரக்கூடிய திரையிசைக் கவிதைகள் மனித வாழ்விற்குத் தேவையான அறங்களை வலியுறுத்துகின்றன. மனித உறவுகளின் ஆழத்தையும் அடிப்படையையும் சுட்டுகின்றன. கவிஞர் கண்ணதாசன் சொல்வது போன்று இந்த உலகில் எதுவுமே நமக்குரியன அல்ல. அது திடமான செல்வமாக இருந்தாலும் நுட்பமான உறவுகளாக இருந்தாலும் எதுவுமே உடன் வருவது இல்லை. கூடுவிட்டு ஆவி போனால் கூடவே வருவதென்ன என்ற கேள்வியை நாம் எழுப்பினால், எதுவுமே இல்லை என்ற விடை கிடைக்கும். வீடுவரை உறவு, வீதி வரை மனைவி, காடு வரை பிள்ளை, கடைசி வரை யாரோ! என்று நினைக்கும் மனம் ஒவ்வொரு மனிதர்க்குள்ளும் வந்துவிடுமேயானால், நாம் எந்த உறவுகளையும் இழிவுபடுத்தாமல் அன்பாலும் பண்பாலும் இரக்கத்தாலும் நல்லுறவுகளாக வளர்த்துக் கொண்டால் இறுதியில் பொருளும் உறவுகளும் நம்மோடு வரவில்லை என்றாலும் நம்முடைய நற்பெயரும் புண்ணியமும் இந்த உலகில் நம் பெயரைச் சொல்லிக் கொண்டிருக்கும்.

## 15. தகவல் தொடர்பில் மனித உறவுகள்

மனிதர்கள் பேச முற்பட்ட நாள் முதல் கருத்துப் பரிமாற்றம் நிகழ்ந்து வருகிறது. அந்தத் தொடர்புநிலை ஆரம்பக் காலத்தில் ஓலைச் சுவடிகள் மூலமாகக் கூற வேண்டிய செய்தியை எழுதி அதனைப் பறவைகள், மனிதர்கள் மூலமாக உரியவர்களிடம் சேர்ப்பித்தார்கள். இதுவே இதழியலின் தொடக்கம் எனலாம். அச்சு இயந்திரங்களும் அறிவியலும் வளர்ந்த பிறகு இதழ்கள் தோன்றி வளர்ச்சிப் பெற்றன. பல்வேறு மக்கள் தொடர்பு ஊடகங்கள் இருந்தாலும் அவற்றுள் முதன்மையானது இதழியல் எனலாம். சமுதாயத்தில் நடைபெறும் பல்வேறுவிதமான செயல்களைச் செய்திகளாக்கி மக்களிடம் கொண்டு சேர்க்கும் பணியை இதழியல் செய்து வருகிறது.

'டையர்னல்' என்ற இலத்தீன் சொல்லிலிருந்து தோன்றி 'ஜார்னலிசம்' என்ற ஆங்கிலச் சொல்லின் தமிழாக்கம் இதழியல் என்பதாகும். இதழ் என்பது பத்திரிகை, செய்தித்தாள், தாளிகை என்பன வற்றைக் குறிக்கும். இதழ்களுக்கு, குறிப்பாகச் செய்தித் தாள்களுக்கு எழுதும் தொழில்தான் முதன்முதலில் இதழியல் எனப்பட்டது. இப்பொழுது அதனுடைய பொருளும் பரப்பளவும் விரிவடைந்துவிட்டன.

செய்திகளையும், கருத்துகளையும் பரப்புகின்ற மக்கள் தொடர்பு நிறுவனமாக மாறிவிட்டது. சமுதாய விழிப்புணர்வுக்கு மிக இன்றியமையாத கருவியாகவும் வளர்ந்துள்ளது. அற அடிப்படையிலும் சட்ட நோக்கிலும் பொறுப்பேற்கும் அமைப்பாகவும் இதழியல் திகழ்கிறது.

'பத்திரிகைதான் ஒரு நாட்டுச் சுதந்திரத்தின் மிகப் பெரிய காவலாளி' என வார்டுகிரே என்பவர் இதழ்களின் சிறப்பைப் போற்றிக் கூறியுள்ளார். 'வாளைவிடப் பேனா முனை வலிமையுடையது' என்பதை உலமெங்கும் இதழியலாளர்கள் உணர்த்தியுள்ளனர். இக்கருத்தை வள்ளுவரும் பின்வரும் குறளில் கூறுவர்.

*வில்லேர் உழவர் பகைகொளினும் கொள்ளற்க*
*சொல்லேர் உழவர் பகை* (குறள் - 872)

ஆற்றல்மிக்க இதழ்களால் சிறந்த பயன் கிடைக்க வேண்டுமானால், அவை தமது பணிகளைச் செவ்வனே செய்ய வேண்டும். உண்மையான மக்களாட்சி நடைபெறத் துணைபுரிய வேண்டியவை இதழ்களே.

மக்கள் தகவல் தொடர்பில் இதழ்கள் இன்றியமையா இடத்தைப் பெற்றுள்ளன. 'பத்திரிகைத்துறை மக்களுக்குத் தெரிவிப்பதையோ, கற்பிப்பதையோ மட்டும் செய்வதில்லை. பொதுப் பணிகளின் கண்காணிப்பாளராகவும், மக்கள் உரிமைகளின் பாதுகாவலராகவும் செயல்படுகிறது' எனப் பத்திரிகைத் துறையின் சிறப்பினையும் பணியினையும் ஆர்.கே.சாட்டர்ஜி தெளிவாக விளக்கியுள்ளார்.

செய்திகளை மக்களுக்கு அறிவித்தல், மக்களுக்கு நல்லனகூறி அறிவுறுத்தல், மக்களை மகிழ்வித்தல், வாணிபம் செய்தல், நடுவுநிலை நிற்றல், பண்பாடு காத்தல் முதலான பல பணிகள் இதழ்களுக்கு உள்ளன.

இதழ்கள் சிறந்த குறிக்கோளோடு செயல்பட வேண்டும். மக்களுக்குத் தொண்டு செய்யும் நோக்கமின்றி வெறும் ஆதாய நோக்கத்தோடு செயல்படும் இதழ்களால் சமுதாயத்திற்குக் கிடைக்கும் பயன்களைவிடக் கேடுகளே மிகுதி. செய்தித்தாள்களின் குறிக்கோள் பற்றி மகாத்மா காந்தியடிகள் கூறிய பின்வரும் கருத்து மிகவும் கருதத்தக்கது.

செய்தித்தாளின் நோக்கங்களில் ஒன்றாக மக்களின் உணர்வினை அறிந்து அதனை வெளியிடுவது அமைய வேண்டும். மக்களிடம் உணர்வுப்பூர்வமான எண்ணங்களை உருவாக்க வேண்டும். மேலும் பொது மக்களிடம் இருக்கும் குறைபாடுகளையும் துணிச்சலாக எடுத்துரைக்க வேண்டும். இதழ்களின் குறிக்கோள்கள் குறித்து இங்கிலாந்து பத்திரிகை மன்றம் (Press Council) வெளியிட்டுள்ள கீழ்வரும் கருத்துகள் முக்கியமானவை.

அநீதியை வெளிக்காட்டுவது, தவறைத் திருத்துவது, ஆலோசனை வழங்குவது, நண்பர்கள் இல்லாதவர்களோடு நட்பு மேற்கொள்வது, ஆதரவற்றவர்களுக்கு உதவுவது ஆகியவை செய்தித்தாள்களின் குறிக்கோள்களாக அமைய வேண்டும்.

பொதுக் காரணங்களை எடுத்துக்கொண்டு தேவையானால் போராட்டங்களை நடத்தவும் தயங்கக்கூடாது.

இந்த இதழியல் பணிகளை நோக்கும்போது அனைத்துமே மனித உறவுகளை மையப்படுத்தியதே என்பதை உணரலாம். இதழ்கள் காலை இதழ், மாலை இதழ் ஆகிய நாளிதழ்கள், வார இதழ், காலாண்டு இதழ், திங்கள் இருமுறை இதழ், திங்கள் இதழ், அரையாண்டு இதழ், ஆண்டு இதழ் எனப் பல நிலைகளில் இன்று வெளிவருகின்றன.

தமிழ்நாட்டைப் பொறுத்தவரை ஆரம்பக் காலத்தில் நாட்டுச் சுதந்திரத்தை மையப்படுத்திப் பல இதழ்கள் வெளிவந்தன. அனைத்துமே மக்களை ஒருங்கிணைத்துச் செல்லும் பணியைச் செய்தன.

ஆனால் இன்று அரசியல், ஆன்மீகம், சமுதாயம் என்ற பரந்த நிலைகளிலும் சிறுபான்மையான பிரிவுகள் அடிப்படையிலும் பல இதழ்களும் வெளிவருகின்றன. அனைத்துமே மனிதர்களுக்கே மனிதர்களால் நடத்தப்படுபவையே. சமுதாயச் சீர்கேடுகளுக்கு வழி நடத்தப்படுபவையே. சமுதாயச் சீர்கேடுகளுக்கு வழி வகுக்காமல் பொறுப்புடன் செயலாற்றும் கடமையை இதழியலாளர்கள் மனதுள் கொள்ள வேண்டும்.

இதழ்கள் வலிமை வாய்ந்தன என்பதை உணர்ந்து மனிதர்களுக்குள்ளாக உறவுகளை ஏற்படுத்தும் வகையில் இதழின் பணிகள் அமைதல் வேண்டும்.

செய்திகளை அப்படியே நடந்தவற்றைக் கொடுத்தாலும் அதனடியில் இவ்வாறு நடத்தல் மனித நியதியல்ல என்பதைப் பூடகமாகச் சுட்டிக் காட்டுதல் வேண்டும். வன்மையான சொற்களைப் பயன்படுத்தாமல் மென்மையான சொற்களைப் பயன்படுத்துதல் அவசியம். பால் உணர்வைத் தூண்டும் படங்களையும் செய்திகளையும் தவிர்த்து விடுதல் நல்லது.

விளம்பரங்கள் வெளியிடப்பட்டாலும் அவை மக்கள் வாழ்வை சிதைக்குமா ! செம்மைப்படுத்துமா ! என்பதை பொறுமையுடன் சிந்தித்து வெளியிடவேண்டும். சமுதாயச் சீர்கேடான நிகழ்வுகளை வெளியிடும்

போது அவற்றைப்போன்று, படிப்பவர் செய்யாமல் இருக்கும் வகையில் அறவுரைகளைச் சேர்த்து எழுதுதல் அவசியம்.

மக்களை மூடநம்பிக்கையில் தள்ளி, முன்னேற்றத்தைத் தடை செய்யும் விளம்பரங்களைத் தவிர்த்தல் முக்கியம்.

இதழ்கள் வலிமை வாய்ந்தவை. மக்களுக்குத் தேவையான மருத்துவக் குறிப்புகள், சான்றோர் கருத்துகள் இவையாவும் இதழ்களில் இன்று வெளியாகி மனித உறவுகளை வளர்த்து வருகின்றன.

இருப்பினும் மேற்கூறிய குறைபாடுகள் களையப்படுகிறபோது, இதழ்கள் மக்களின் நல்ல தோழனாக இருந்து சமுதாயப் பணியாற்றும் என்பதை உணரலாம்.

## மக்கள் தொடர்பும் மனித உறவுகளும்

இன்றைய அறிவியல் யுகத்தில், உலகம் உள்ளங்கையில் என்று கூறுகிற அளவிற்கு மக்கள் தொடர்பு ஊடகங்கள் பெருகிவிட்டன. அனைத்துமே மனித உறவுகளை வலுப்படுத்தவும் செம்மைப்படுத்தவும் ஏற்படுத்தப்பட்டுள்ளன. ஓரிடத்திலுள்ள மக்கள் மற்றொரு ஊரிலுள்ள மக்களுடன் தொடர்பு கொள்வதும், நேரில் கண்டு உறவாடுவதும் மிகப் பெரிய செயலாக இருந்த காலம் மாறி இன்று மணித்துளிகளுக்குள் பல மைல்களைக் கடப்பதும் மனிதர்கள் உறவாடிக் கொள்வதும் எளிதாகின. இத்துணை எளிதான வாழ்வைக் கொடுத்திருக்கும் ஊடகங்கள் சுட்டும் மனித உறவுகள் குறித்து இனிக் காண்போம்.

செய்தித்தாளில் ஆரம்பித்த மக்கள் தொடர்பு இன்று பல்வேறு நிலைகளில் வளர்ச்சி அடைந்துள்ளது. வானொலி, திரைப்படம், தொலைக் காட்சி, தொலைபேசி வகைகள், கணிப்பொறி, செயற்கைக்கோள், இணையம் முதலானவை மக்கள் தொடர்புகளாக விளங்கு கின்றன. இவை அனைத்துமே மனித உறவுகளை மையப்படுத்தியவையாகும்.

உலகில் நிகழும் நிகழ்வுகளைச் செய்திகளாகவும் இயல், இசை, நாடகம் ஆகியவற்றின் மூலமாகவும் மக்களிடம் கொண்டு சேர்க்கும் பணியை வானொலி செய்கிறது. வானொலி என்பது காதால் கேட்கும்

வகையில் மட்டும் அமைக்கப்பட்டிருப்பது. வானொலிச் செய்திகள், வயலும் வாழ்வும், ஒலிச்சித்திரங்கள், திரையிசைப் பாடல்கள், சான்றோர் சிந்தனைகள், வானொலி நாடகங்கள், நேர்காணல்கள் முதலான நிகழ்ச்சிகள் வானொலியில் ஒலிபரப்பப்படுகின்றன. இவை அனைத்து நிகழ்ச்சிகள் மூலமாகவும் மனித உறவுகள் உணர்த்தப்படுகின்றன. சான்றோர்களையும் அனுபவம் முதிர்ந்தவர்களையும் நேர்காணல் செய்யும்போது அவர்கள் வழங்கும் கருத்துகள் மனித மனதைச் செம்மைப்படுத்துவதாகவும் மனித உறவுகளின் மகத்துவத்தை எடுத்துரைப்பதாகவும் அமைகின்றன. சான்றோர் இலக்கிய உரைகள் இளைஞர்கள் மனதையும் செம்மையாக்க உதவுகின்றன.

தொலைக்காட்சி, திரைப்பட நிகழ்ச்சிகள் ஒலியுடன் காட்சியும் சேர்வதால் ஆற்றல் வாய்ந்ததாக அமைகின்றன. இவற்றுள் ஒளிபரப்பப் படும் திரைப்படங்கள் மனித உறவுகளை மையப்படுத்தியதாகவே உள்ளன. மக்கள் கருத்துகளை வெளிப்படுத்தும் விவாத மேடைகள், கருத்துரை நிகழ்வுகள், கலந்துரையாடல்கள் அனைத்தும் மனித உறவுகளையே சுட்டுகின்றன. எது ஒன்றைப் பற்றியும் உடனுக்குடன் மக்களிடம் கொண்டு சேர்க்கும் ஆற்றல் தொலைக்காட்சிக்கு உண்டு.

காலநிலைகளும், உலக நிகழ்வுகளும் உடனுக்குடன் மக்களுக்கு எடுத்துரைப்பதாகத் தொலைக்காட்சி விளங்குகிறது. தொடக்கக் காலத்தில் அரசாங்கத்தாரால் மட்டும் நிறுவப்பட்டிருந்தது. தற்போது பல தனியார் தொலைக்காட்சிகள் வெளிவந்துள்ளன.

சரித்திரத் தொடர்கள், சிறுவர் தொடர்கள், நகைச்சுவைத் தொடர்கள், மர்மத் தொடர்கள், மாயாசாலத் தொடர்கள், அறிவியல் மற்றும் அறிவுரை நிகழ்ச்சிகள், குடும்பம் தொடர்பானவை, கல்வி தொடர்பானவை என மனித வாழ்வியல் அடிப்படையில் நிகழ்ச்சிகள் தொலைக்காட்சியில் ஒளிப்பரப்பப்படுகின்றன. அனைத்துமே மனித உறவுகளை மையப்படுத்தி யவையே.

தொலைக்காட்சிக்கு அடுத்த நிலையில் மனித உறவுகளை வலுப்படுத்துவது தொலைபேசி. பல வகையான தொலைபேசிகள் உள்ளன. வீட்டில் பொருத்தி இருக்கும் தொலைபேசி, செல்லும் இடமெல்லாம்

கொண்டு போகும் செல்பேசி, கணிப்பொறி மூலமாகக் கருத்துப்பரிமாறிக் கொள்ளும் மின்னஞ்சல், இணையதளம் மூலமாகப் பேசிக் கொள்ளும் நிலை ஆகிய அனைத்துமே மக்களை ஒன்றிணைக்கும் மனித உறவுகளின் வெளிப்பாடாகும்.

இவை அனைத்துமே மக்கள் வாழ்விற்கு மிகவும் பயன்படும் ஊடகங்களாகும். ஆனால் இவற்றைப் பயன்படுத்தும் முறைகள் ஒரு பக்கம் பயனையும் மறுபக்கம் பண்பாட்டுச் சீரழிவையும் மனித உறவுகளை மாசுபடுத்துவதாகவும் உள்ளன.

தொலைகாட்சியில் காட்டப்படும் வன்முறை மற்றும் பாலியல் காட்சிகள் மனித உறவுகளை அழிக்கும் வகையில் இன்று காட்டப்படு கின்றன. ஆண் பெண்ணைத் துரத்திக் கொண்டு ஓடுவதையும், கட்டிப்பிடித்துப் புரள்வதையும், நெருக்கமான காட்சிகளையும் பார்க்கும் இளைஞர் உள்ளம் தடுமாறுகின்றது. ஆடைக் குறைப்பு நடனங்கள், ஆடை அவிழ்ப்பு போன்றவை பாலியல் உணர்வுகளைத் தூண்டும் வகையில் அமைந்துள்ளன.

கொடுங்கோலன் ஆட்சியிலும் நடுச்சந்தியில் கொண்டுவர அஞ்சப்பட்ட மதிக்கப்பட்ட அந்தரங்கங்கள் கனவுக் காட்சிகள் என்னும் பெயரில் கடைவிரிக்கப்படுகின்றன. உறவுகள் கொச்சைப்படுத்தப் படுகின்றன. ஆகாயத்திலேயே பலமுறை குட்டிக்கரணம் அடித்து போடும் சண்டைக் காட்சிகள் வன்முறையைத் தூண்டுகின்றன. சின்னத்திரையில் காட்டப்படும் தொடர்கள் ஆண் பெண் இருபால் வன்மையாளர்களைச் சித்திரிக்கின்றன.

வலிமை வாய்ந்த ஊடகங்களில் இவ்வாறு காட்சிகள் காட்டுவது மக்கள் மனங்களைச் சிதைத்துத் தீமையான விளைவுகளையே தருவதாக அமைந்துள்ளன. இயற்கை அழிவுகளோடு செயற்கை அழிவுகள் பெருகுவதற்கு இவை காரணமாகின்றன.

அதனால்தான் உறவுகளுக்குள்ளேயே பெரிய தீமைகள் விளைந்து உயிர்ச் சேதங்கள் பெருகுகின்றன. இந்த ஊடகங்களை நடத்துபவர்கள் இவற்றை எல்லாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். இவற்றுள் வருகின்ற

உள்ளன. வன்முறை மற்றும் பாலியல் காட்சிகள், கஞ்சா, அபினை விடவும் கொடூரமான முறையில் மக்கள் மனங்களை அழித்து உறவுகளைச் சிதைக்கின்றன.

கணிப்பொறியும் இணையவலையும் மக்களுக்கு மிகவும் தேவையானவை. பயன் அளிக்கக் கூடியவை. ஆனால் அவற்றை இன்று சிறுவர்களும் இயக்கும் ஆற்றல் பெற்றுள்ளனர். அப்படி இருக்கும்போது அதில் இடம் பெறும் 'இண்டர்நெட் அரட்டைத்' தொழில்நுட்பம், பாலியல் உணர்வை மனதிலிருந்து தூண்டுவதாக அமைந்துள்ளது. அருவருப் பானவை, அந்தரங்கமானவை அம்பலப்படுத்தப்படுகின்றன.

சமுதாயச் சீர்கேடுகளையும், இளைஞர்களைத் திசைதிருப்பி அழிவுப் பாதைக்குள் மெல்லமெல்லக் கொண்டு செல்லும் இவை போன்ற நிகழ்வுகளை எவ்வாறேனும் தடுக்கவில்லை என்றால் வருங்காலத்தில் மிருகங்களைப் போன்று மனிதனும் காட்டுமிராண்டி நிலைக்குத் தள்ளப்படும் அவலநிலை ஏற்படவும் வாய்ப்புள்ளது.

இவை தவிர்க்கப்பட்டால், பொறுப்புடன் நிகழ்வுகள் அமையுமானால் அறிவியல் ஊடகங்கள் மனித உறவுகள் வளர வழிசெய்யும் என்பதில் ஐயமில்லை.

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
# சென்னை - 600 113
## அண்மை வெளியீடுகள்

| | ரூ.பை. |
|---|---|
| தொல்காப்பியம்-எழுத்ததிகாரம் மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 200.00 |
| தொல்காப்பியம்-சொல்லதிகார மூலமும் சேனாவரையருரையும் | 200.00 |
| தொல்காப்பியம்-பொருளதிகார மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 325.00 |
| தொல்காப்பியம் - பொருளதிகார மூலமும் பேராசிரியர் உரையும் | 300.00 |
| Bibliography on Translations | 175.00 |
| சங்க இலக்கிய ஆய்வு தெ.பொ.மீ.யும் மேலை அறிஞரும் | 60.00 |
| திராவிட மொழி இலக்கியங்கள் | 200.00 |
| வா.கீ.ச. கலாநிதி கி.வா.ஜகந்நாதன் | 60.00 |
| நாசுதிராதிக்-ஞாலமுதன்மொழிஆய்வுகளுக்குப்பாவாணர் தரும் ஒளி | 35.00 |
| தமிழ்ச்சொற் பிறப்பாராய்ச்சி | 45.00 |
| மொழி பெயர்ப்பியல் | 45.00 |
| சி.வை. தாமோதரம்பிள்ளை | 40.00 |
| சொல்லிலக்கணக் கோட்பாடு தொல்காப்பியம் - முதல் பகுதி | 70.00 |
| இசுலாமியச் சிற்றிலக்கியங்கள் | 40.00 |
| பாவாணர் கடவுள் நம்பிக்கையும் சமயச் சால்பும் | 30.00 |
| மகளிர் முன்னேற்றத்தில் "அவள் விகடன்" இதழின் பங்களிப்பு | 35.00 |
| திருக்குறள் உரைச் சிந்தனைகள் | 50.00 |
| தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் | 120.00 |
| மீனவர் சமுதாய நாட்டுப்புறப் பாடல்கள் | 35.00 |
| A Course in Modern Standard Tamil | 65.00 |
| கம்பன் களஞ்சியம் | 280.00 |
| மொழியியல் நோக்கில் தொல்காப்பிய சங்க இலக்கிய ஆய்வுகள் | 40.00 |
| தமிழர் பண்பாட்டுச் சொற்கோவை | 250.00 |
| தமிழிலக்கியக் குறியீடுகள் அகராதி | 225.00 |
| அரங்கேற்று காதை ஆராய்ச்சி | 140.00 |
| பழந்தமிழ் அமைப்பியல் மற்றும் குறியியல் ஆய்வுகள் | 45.00 |
| இந்தியச் சூழலில்மொழிஇழப்பு ஒரு சமுதாய மொழியியல் கண்ணோட்டம் | 60.00 |
| பழந்தமிழ் அறிவியல் | 45.00 |
| குலோத்துங்கன் பார்வையில் சமுதாயம் | 70.00 |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிஞர்கள் தொகுதி-1 | 100.00 |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிஞர்கள் தொகுதி-2 | 100.00 |
| நீறணி பவளக் குன்றம் (ஒன்பதாம் திருமுறை ஆய்வுநூல்) | 35.00 |
| உலகப் பகுத்தறிவு நீரோட்டத்தில் பெரியார் | 35.00 |
| தமிழறிஞர் அடிகளாசிரியரின் சிறுவர் இலக்கியப் பாடல்கள் | 30.00 |
| ஈழத்தில் கண்ணகி கலாச்சாரம் | 30.00 |
| சிறுபஞ்மூலம்-ஒருசமூகவியல் பார்வை | 30.00 |
| இந்தி நாடகப் பனுவல் (ஆடி மாதத்தில் ஒரு நாள்) | 50.00 |
| திராவிட இயக்கத்தில் அன்னை மணியம்மையாரின் பங்கு | 40.00 |
| பண்பாட்டுப் பார்வையில் திருமந்திரம் | 70.00 |
| காரைக்கால் அம்மையார் பாடல்கள் - ஓர் ஆய்வு | 40.00 |
| சொல்லாடல்கள் | 75.00 |

**Pub No. 661** **தமிழ் இலக்கியங்களில் மனித உறவுகள்** **90.00**